# சங்க இலக்கியங்களில் பிரிவாற்றாமை

சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி.)பட்டத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு


ஆய்வாளர்

**க. மங்கையர்க்கரசி**

பதிவு எண். 41/FT/08/2011/6192

நெறியாளர்

**முனைவர் ஜே.ஆர்.இலட்சுமி**






**தமிழ்த்துறை**
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
**சென்னை - 600 005.**


**ஜூன் - 2013**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர். ஜே.ஆர்.இலட்சுமி,** எம்,ஏ,எம்.எ.,(வர)எம்.ஃபில்., எம்.எட்.,
பிஎச்.டி., பிஎச்.டி.,(க), எப்.எல்., டி.ஏ..,சி.எச்.சி.,சி.யு.,
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி)
சென்னை -5.

**"சங்க இலக்கியங்களில் பிரிவாற்றாமை"** என்னும் தலைப்பில் திருமதி. க. மங்கையர்க்கரசி முனைவர் பட்டத்திற்குச் செய்துள்ள இந்த ஆய்வு மாநிலக்கல்லூரி தமிழ்த்துறையில் அவர் படித்த காலத்தில் உருவானது என்றும், இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் இதுவரை அளிக்கப்படவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

இடம் : சென்னை

நாள் : 20-6-2013

ஜே.ஆர். இலட்சுமி
**நெறியாளர் கையொப்பம்**

முனைவர் ஜே. ஆர். இலட்சுமி
எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்., பிஎச்.டி., (தமிழ்)
எம்.ஏ., (வரலாறு & சுற்றுலா) பிஎச்.டி (கல்வி)
பிஜிடிஜேஎம்சி, பிஜிடிஎப்எல், பிஜிடிசிஇ, பிஜிடிசிஎச், பிஜிடிஎன
இணைப் பேராசிரியர் உயர் தமிழியல் ஆராய்ச்சி நிலையம்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி), சென்னை-5

# ஆய்வாளர் உறுதிமொழி

**க. மங்கையர்க்கரசி**
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி)
சென்னை -5.

**''சங்க இலக்கியங்களில் பிரிவாற்றாமை''** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்குச் செய்யப்பட்ட இந்த ஆய்வு என்னுடைய சொந்த முயற்சியினால் உருவானது ஆகும். இதற்கு முன்னர் எந்த ஓர் ஆய்வுப் பட்டத்திற்கும் இவ்வாய்வு ஏட்டினை அளிக்கவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

க. மங்கையர்க்கரசி.
**ஆய்வாளர்**

**இடம்:** சென்னை.

**தேதி :** 20. 6. 2013

# நன்றியுரை

**"சங்க இலக்கியங்களில் பிரிவாற்றாமை"** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், என்னை ஆய்வு மாணவியாக ஏற்றுக்கொண்ட சென்னை மாநிலக்கல்லூரி (தன்னாட்சி) முதல்வர் அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வினை மேற்கொள்ள ஆக்கமும் ஊக்கமும் அளித்து ஆர்வத்தைத் தூண்டிய தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ப.மகாலிங்கம் அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

தாயினும் சாலப்பரிந்து, நாள்தோறும் பல்வகையானும் நெறிப்படுத்தி இந்த ஆய்வேடு சிறப்பாக அமைய எல்லா வகையிலும் துணைநிற்கும் ஆய்வு நெறியாளர் முனைவர் ஜே.ஆர்.இலட்சுமி அவர்களுக்கு என்றென்றும் நன்றியும் கடப்பாடும் உடையேன் ஆவேன்.

ஆய்வுக்குப் பெறுந்துணை புரிந்த துறைப் பேராசிரியர்கள் முனைவர். அர.ஜெயச்சந்திரன் அவர்கள், திரு. மா.உத்திராபதி அவர்கள், முனைவர். க.வேலு அவர்கள், முனைவர்.மு.பழனி அவர்கள், முனைவர்.கோ. கிருஷ்ணன் அவர்கள், முனைவர்.இரா.சீனிவாசன் அவர்கள், முனைவர்.ச.அந்தோணி டேவிட் நாதன் அவர்கள், முனைவர் எஃப். பாக்யமேரி அவர்கள், முனைவர்.கோ.வேலு அவர்கள், முனைவர்.ப.தாமரைக் கண்ணன் அவர்கள், முனைவர்.க.சேக்மீரான் அவர்கள். முனைவர்.க.சேகர் அவர்கள், முனைவர். இரெ.இராசபாண்டியன் அவர்கள், திரு.கெ. குமார் அவர்கள், முனைவர். தா.மோகன்தாஸ் அவர்கள், முனைவர். நா.இரவீந்தரநாத் தாகூர் அவர்கள், முனைவர். பு.பாலாஜி அவர்கள், முனைவர். சி. குமார் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வினை மேற்கொள்ள ஆக்கமும் ஊக்கமும் அளித்த திரு.மணிகண்டன், திருமதி. ஷீலா குமார், திரு.கணபதி, திருமதி.சரோஜா, திரு.ஆறுமுகம் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

கலந்துரையாடல் மூலம் பல்வேறு கருத்துக்களை வழங்கிய ஆய்வு மாணவிகள் மற்றும் சக நண்பர்களுக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடர்பாக அனைத்து உதவிகளையும் செய்த எனது கணவர் திரு.க.பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், எனது மகன் பா.கணபதிராஜா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணியினை மேற்கொள்ளும்போது எனக்கு பலவகைகளில் உதவி செய்த என் அன்பு பெற்றோருக்கும், சகோதர சகோதரிக்கும், எனது தோழிகளுக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான புத்தகங்கள் வழங்கிய கன்னிமாரா நூலகம், மெரீனா நூலகம், ஆதம்பாக்கம் கிளை நூலகத்துக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினைச் செம்மையுறக் கணினி மூலம் அழகிய முறையில் வடிவமைப்புச் செய்து கொடுத்த அடையார் மாணவர் நகலகம், கிண்டி கிளை திரு.ராஜ் அவர்களுக்கும் திருமதி.ரேணுகா, திருமதி.பேபி சகாயம் அவர்களுக்கும் என் இதயம் நிறைந்த நன்றியைக் கூறி மகிழ்கிறேன்.

க. மங்கையர்க்கரசி.

**(க. மங்கையர்க்கரசி)**

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அக. | - | அகநானூறு |
| உரை.ஆ | - | உரையாசிரியர் |
| குறள். | - | திருக்குறள் |
| சிலப். | - | சிலப்பதிகாரம் |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதி.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| புற. | - | புறநானூறு |
| மு.வ. | - | மு.வரதராசன் |

# முன்னுரை

## ஆய்வு அறிமுகம்

சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாம் காதல் இணைகளின் கூட்டத்தையும், பிரிவையும் குறித்தன. புணர்ச்சியின் இன்பத்தையும், தனிமையின் துன்பத்தையும் சுட்டுவன. இவற்றுள் பெரும்பான்மை பிரிவின் அடிப்படையாய் அமைந்து பிரிவின் துன்பத்தைக் கூறுவனவாயும், துன்பத்தின் ஆற்றாமையை வெளிப்படுத்துவனவாயும் அமைந்துள்ளன.

முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் மழையின்மையால் திரிந்து, தத்தமது நிலையை இழந்து பாலையாக மாறும்.

காதல் வாழ்க்கை உடையவர்க்குக் கடமையும் உண்டு. கடமை ஆற்றுவதற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிவும் நிகழ்த்துவான். பிரிவுகள் பலவற்றுள், பொருள் ஈட்டுவதற்காகப் பிரிவு அமைந்த காலம் ஓராண்டு ஆகும். இப்பிரிவுக் காலமே அதிகக் காலமாகும். இந்நிலையில் பாலைத்திணைக்கு பலப்பல பாடல்கள் எழுந்துள்ளன.

பிரிவு தான் அன்பின் நெருக்கத்தைப் புனைவதற்குச் சிறந்தது. அன்பின் வெளிப்பாடே பிரிவாற்றாமையில் தான் புலப்படுகிறது. பாலைத்திணைப் பாடல்கள் அனைத்தும் காதலர்களின் மனநிலையை விளக்கும் ஓவியங்கள். நிலத்தின் வெம்மையினையும், விலங்கின் கொடுமையினையும் செல்லும் வழி தன்மையையும், கள்வர்களின் இரக்கமின்மையும், செல்லுமிடம் விளங்காமையும் எனப்பல இடர்களைச் செய்யுட்படுத்த பாலைத்திணையே வாய்ப்பாக உள்ளது. தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலி, கண்டோர் என பற்பலர் பேச வாய்ப்பு தருவது பாலைத்திணையேயாகும். பொருளைத்தேடிப் பிரிகின்ற பிரிவு பற்றி கூறும் பாலைத்திணைப் பாடல்களில் மனை வாழ்க்கையின் பெருமையும், பொருளின் இன்றியமையாத் தேவையும்

எடுத்துரைக்கப்படுகிறது. உடன்போக்கில் தான் கற்பு மேம்பாடு உள்ளது. பிரிவு தலைவனைக் கடமையுள்ளவனாகவும், தலைவியை கற்புள்ளவளாகவும் காட்டவும் தேவை. பாலைநிலம் வறட்சியும் வேதனையும் வெயிலும் மட்டும் உள்ளதல்ல. அன்பும் பண்பும் செறிந்த ஒன்று. விலங்கு, பறவைகளிடம் உள்ள அன்பின் நெருக்கத்தை அறிந்து கொள்ள, அதுபோல அன்புகொண்ட தலைமக்கள் அன்புடன் இரண்டற கலந்து வாழ விரும்பியே பாடல்கள் பாடப்பட்டுள்ளன. மக்களுக்குத் தேவையான வாழ்வியல் உண்மைகளும் பாலைத்திணையிலேயே அதிகமாகக் கூறப்பட்டுள்ளன.

குறிஞ்சி நிலத்திலும் இட்டுப் பிரிவு, வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிவு நடைபெறும். முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களிலும் பிரிவு நடைபெறும். பாலையைத் தவிர ஏனைய பிரிவுகள் சில மாதங்களுக்கே நடைபெறும். பாலைக்குரிய பிரிதலும், பிரிதல் நிமித்தமுமே காலங்கள் அதிகமாகும். எனவே தலைவி மிகவும் வருந்தியிருந்தாள்.

உடன்போக்குக்காக தலைவியை தலைவனுடன் அனுப்பும் தோழியே, ஓம்படைக்கிளவியாக தலைவியின் முதுமை வந்தபோதும், மக்கட்பேறு பெற்ற போது அழகும் கட்டுக் கோப்பும் குறைந்தபோதும் நன்றாக பேண வேண்டும் என்றும் தலைவிக்கு இறுதி வரை தலைவனே துணை என்றும் மொழிகிறாள். கற்பு வாழ்க்கைக்கான மிக முக்கியமான வாழ்வியல் அறமே உடன்போக்கில் பாலைத்திணையில் தான் கூறப்படுகிறது.

கற்புகால பிரிவை விட களவு கால பிரிவிலேயே தலைவி மிகவும் வருந்தியிருந்தாள்.

## ஆய்வுத் தலைப்பு

''சங்க இலக்கியங்களில் பிரிவாற்றாமை'' என்பதே ஆய்வின் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வின் நோக்கம்

சங்க இலக்கியங்களில் பாலைத்திணைப் பாடல்களே மிகுதி. ஐந்து நிலங்களும் பிரிவைக் குறிப்பிடுகின்றன. காதலர் தம் பிரிவைப் புனைவதன் வழி, அவர்களிடையே நிலவும் அன்பின் நெருக்கத்தை மிகுதியாகக் காட்ட முடியும் என்ற நிலையிலேயே, பாலைப்பாடல்கள் மிகுதியாக பாடப்பட்டுள்ளன. தலைவியின் பிரிவிலேயே செவிலி, நற்றாயின் பாச உணர்ச்சிகள், பிரிவாற்றாமையாக வெளிப்படுகிறது. பாலைத்திணை மீதான ஒரு புதிய தேடலே, இவ்வாராய்ச்சியின் நோக்கமாகும். ஏறக்குறைய பாலைத்திணை பதிவுகள் யாவும் இங்கு கவனத்தில் கொள்ளப்படுகின்றன. புணர்ச்சியின் இன்பத்தையும், தனிமையின் துன்பத்தையும் சுட்டுவன. இவற்றுள் பெரும்பான்மை பிரிவின் அடிப்படையாய் அமைந்து, பிரிவின் துன்பத்தைக் கூறுவதையும், துன்பத்தின் ஆற்றாமையை வெளிப்படுத்துவனவாயும் அமைந்துள்ளன.

## ஆய்வின் மூலங்கள்

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டு நூல்களும் இவ்வாய்விற்கு முதன்மை மூலங்களாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன. மேலும் சங்க இலக்கியங்கள் தொடர்பான ஆய்வு நூல்கள் கட்டுரைகள், ஆய்வுக்கட்டுரைகள், ஆய்வுகள் போன்றவை துணைமை மூலங்களாகக் கையாளப்படுகின்றன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டு நூல்களிலும் பிரிவு மற்றும் பிரிவாற்றாமை பற்றிய கருத்துக்கள்

வரும் பாடல்களே ஆய்வுக்குரிய எல்லையாக வரையறை செய்யப்படுகின்றன.

## கருதுகோள்

தலைவனும் தலைவியும் அன்புடன் கூடி இன்புற்றிருந்த காலத்தை விடவும், பிரிவு காலத்தில் தான், ஒருவரை ஒருவர் இன்றியமையாதவர் என்ற உண்மையை உணர்ந்து வெளிப்படுத்துகின்றனர் என்பதை உணர்த்துவதே கருதுகோளாக அமைகிறது.

## ஆய்வின் முன்னோடிகள்

1. அகத்தில் பிரிவாற்றாமை
   முனைவர் சோ.கண்ணதாசன்
2. காதல் புனைவுகள்
   முனைவர் மு.மணிவேல்
3. சங்கத் தலைவனின் உள்ளம்
   முனைவர் க. காந்தி
4. அகநானூற்றில் அன்பு
   முனைவர் ப. ஆனந்தநாயகி
5. தொல்காப்பிய பொருளதிகார வழி அகநானூறு - ஓர் ஆய்வு
   முனைவர் இரா.ஜெகதீசன்

## ஆய்வு அணுகுமுறை

தலைவன் தலைவியின் அன்பு எப்படி உணரப்படுகிறது என்பதை ஆராய்வதால் உளவியல் அடிப்படையிலும், பிரிவின் வகைகளைப் பகுத்து ஆராய்வதால் பகுப்பு முறை அணுகுமுறையும், தலைவனைப் பிரிந்த தலைவி, தலைவனை இழந்த தலைவியின் பிரிவாற்றாமைக்

கருத்துக்களை விளக்கி ஆராய்வதால் விளக்கமுறை ஆய்வுமுறையும் இவ்வாய்வின் அணுகுமுறைகளாக அமைகின்றன.

## ஆய்வுப் பகுப்புமுறை

"சங்க இலக்கியங்களில் பிரிவாற்றாமை" என்ற தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக எட்டு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை

இயல் 1 - பாலை நிலம் பற்றிய வரையறை

இயல் 2 - பிரிவின் வகைகள்

இயல் 3 - தலைமக்களின் பிரிவாற்றாமை

இயல் 4 - உறவினர்களின் பிரிவாற்றாமை

இயல் 5 - பரத்தையரால் தலைவிக்குப் பிரிவாற்றாமை

இயல் 6 - ஊடல் தீர்க்கும் வாயில்கள்

இயல் 7 - தலைவனை இழந்த தலைவியின் பிரிவாற்றாமை

இயல் 8 - கையறு நிலை

**இயல் 1 -** பாலை நிலம் என்பது பற்றிய கருத்துக்கள், இளவேனில் காலம் பற்றிய கருத்துக்கள், செம்புலம் என்பது பாலை நிலமே என்ற கருத்துக்கள், ஆறலைக்கள்வர்கள், வேடர்கள் பற்றிய செய்திகள் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**இயல் 2 -** பிரிவின் வகைகள் ஆறு என்பன பற்றியும் இறையனார் அகப் பொருள், நம்பியகப்பொருள், மாறனகப்பொருள் ஆகியன காட்டும் பிரிவின் வகைகள் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**இயல் 3 -** தலைவனைப் பிரிந்த தலைவிக்கு பிரிவாற்றாமையால் ஏற்படும் மாற்றங்கள் குறித்தும், மாலைக்காலம், வாடைக்காற்று, கோவலர் குழல்

ஓசை, கடல், நிலவு ஆகிய எல்லாம் பிரிந்திருக்கும் தலைமக்களுக்கு எவ்வாறு பிரிவுத் துன்பத்தை அதிகரிக்கிறது என்பன பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**இயல் 4 -** தலைவியைப் பிரிந்த உறவினர்களாகிய நற்றாய், செவிலி, தோழி ஆகியோரின் பிரிவாற்றாமையும், உடன்போக்கு பற்றிய செய்திகளும் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**இயல் 5 -** தலைவன் பரத்தையரிடம் சென்றதால் தலைவிக்கு ஏற்பட்ட பிரிவாற்றாமை பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**இயல் 6 -** ஊடல் தீர்க்கும் வாயில்களான பன்னிருவர் தலைவியின் ஊடல் தீர்த்தல் பற்றிய செய்திகள், ஒருவரின் கருத்துக்களை மற்றவர்க்கு சொல்ல தூதாக வந்தவர் பற்றிய செய்திகளும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 7 -** தலைவனை இழந்து கைம்பெண்ணான தலைவியின் பிரிவாற்றாமையால் ஏற்பட்ட துன்பநிலை பற்றிய செய்திகளும், தலைவன் இருக்கும் போது அவர்களது இன்பநிலையும் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**இயல் 8 -** இறந்த ஒருவரின் நிலைக்கு பிரிவாற்றாமையால் ஏற்பட்ட துன்பத்தைப் பற்றி பாடுகின்ற கையறுநிலைப்பாடல் கருத்துக்கள் வாயிலாக விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

ஆய்வின் முடிவை விளக்கும் இயலாக முடிவுரை அமைந்துள்ளது.

அடுத்ததாக ஆய்விற்குத் துணையாயிருந்த துணைநூற்பட்டியல் அமைகின்றது.

பின்னிணைப்பு பற்றிய பகுதியில் இயல்களில் கூறப்பட்டுள்ள செய்திகளில் சிலவற்றுக்கான பட்டியல்கள் (அட்டவணைகள்) தரப்பட்டுள்ளன.

# பாலை நிலம் பற்றிய வரையறை

# பாலை நிலம் பற்றிய வரையறை

## 1.0 முன்னுரை

தொல்காப்பியர் நிலத்தை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று நால்வகையாகப் பிரித்துள்ளார். இப்பகுதியில் பாலைத்திணையை நேராகச் சுட்டாமல் 'நடுவண் ஐந்திணை' என்றே குறிப்பிட்டுள்ளார். ஆயினும் அந்நிலத்திற்குரிய உரிப்பொருளும், பொழுதும் சுட்டியுள்ளார். பாலைத்திணை மற்றும் பாலைநிலம் பற்றிய வரையறையே இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.1 பாலைநிலம்

நடுவணது ஒழிய என்றமையாமல் குறிக்கப்பெறும் திணை

**''வாகை தானே பாலையது புறனே''**[1]

என்ற தொல்காப்பிய நூற்பாவின் வழி 'பாலைத்திணை' என்பது தானே பெறப்படுகிறது. பாலைக்கு நிலம் உண்டு என்பதை இளங்கோவடிகள்

**''முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**
**நல்லியல்பு இழந்து நடுங்கு துயருறுத்துப்**
**பாலை என்பதோர் படிமம் கொள்ளும்''**[2]

என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் மழையின்மையால் திரிந்து; தத்தமது இயல்பை இழந்து, பாலையாக மாறும் என்பதே, மேற்கண்ட பாடலடிகளுக்கு விளக்கமாகும்.

இளங்கோவடிகள் பாடலடிகளோடு ஏறக்குறைய, ஒத்துப்போகும் பாடலடிகளைச் சிறுபாணாற்றுப்படையில் காணமுடிகிறது.

''வேனி னின்ற வெம்பத வழிநாட்
காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்பப்
பாலை நின்ற பாலை நெடுவழி''[3]

இத்தொடர்கள் ஞாயிற்றின் வெம்மையால் பாலை உருவானதைக் குறித்து நிற்கின்றன. இதனையே

''நானிலம் வாய்க்கொண்டு நன்னீா
அறமென்று கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ்பாலை''[4]

என்று நம்மாழ்வார் விளக்கிக் காட்டுவார்.

குறிஞ்சி நிலமும், முல்லை நிலமும் அடுத்தடுத்து இருப்பவை. இவை முதுவேனிற்காலத்தில் தத்தமக்குரிய நீர் வளத்தில் குறைந்து, மக்கள் நிலைத்து வாழ வசதியற்ற, மிக்க வெப்பத்தை அடையும் அக்காலத்தில், அந்நிலப் பகுதி பாலை எனப்பெறும்.

''குறிஞ்சி நிலம் மட்டும் தனியே பாலையாகத் திரிதலும் உண்டு என்பதை அகநானூற்று 113வது பாடலின் வழியும், முல்லை நிலம் மட்டும் தனியே திரிதலும் உண்டு என்பதை கலித்தொகை 2வது பாடலின் வழியும் அறியமுடிகிறது. எனவே பாலை என்பது குறிஞ்சி நிலத்தை அல்லது முல்லை நிலத்தைச் சார்ந்தது; நன்செய், புன்செய் விளைவு அற்றது; நீர்வளம் மிகக்குறைந்தது; வெப்பம் மிகுந்தது; செம்மையான பாதையற்றது. மக்கள் நேர்மையாக வாழ வசதிக் குறைவுள்ளது என்பனவற்றை அறியமுடிகிறது''.[5]

பாலைத்திணைக்குரிய நிலம் யாதெனில், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்கின்ற நான்கு நிலங்களிலும் ஒன்றோ, பலவோ தத்தம் வளம் இன்றி வேறுபடும் நிலையே 'பாலை' என்று பெறும் என்பது பெறப்படுகிறது. அதனால் நானிலத்தின் கண்ணும் இப்பாலை ஒழுக்கம் நிகழ்தற்குரியது என்பதாகும்.

பாலைக்கு நிலமும், தெய்வமும் தனியாக குறிப்பிடாத போதும் காலம் சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது.

## 1.2 பெரும்பொழுது

ஓர் ஆண்டின் பகுப்பில் பெரும்பொழுது அமைகிறது, ஓர் பெரும்பொழுது இரண்டு திங்களைக் கொண்டது. பெரும்பொழுதில் இளவேனிலும், முதுவேனிலும், பின்பனியும் ஆகும்.

| | | |
|---|---|---|
| பின்பனிக் காலம் | - | மாசி, பங்குனி |
| இளவேனிற்காலம் | - | சித்திரை, வைகாசி |
| முதுவேனிற்காலம் | - | ஆனி, ஆடி |

## 1.3 சிறுபொழுது

சிறுபொழுது என்பது ஒரு நாளின் பகுப்பில் அமைவதாகும். பாலைக்குரிய சிறுபொழுது நண்பகல். நண்பகல் என்பது பகற்பொழுதின் நடுப்பகுதி.

பாலைத்திணைக்குரிய உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் நிமித்தமுமாகும்.

## 1.4 அகமும் புறமும்

அன்பொத்த தலைவன் தலைவியரின் உள்ளத்தில் தோன்றும் இன்பம் அகமாகும். இவ்வின்பம் பற்றிய ஒழுக்கமே அகமாகும். அறமும் பொருளும் பற்றிய ஒழுக்கம் புறமாகும். அகப்பொருளை கைக்கிளை, அன்பின் ஐந்திணை, பெருந்திணை, என ஏழு திணைகளாகப் பிரித்துள்ளனர். ஐந்திணையுள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன அடங்கும்.

## 1.5 அன்பின் ஐந்திணை ஒழுக்கம்

தலைவனும் தலைவியும் கூடி மகிழ்தல் குறிஞ்சி ஆகும். (புணர்தலும் புணர்தல் நிமித்தமும்) கூடிய தலைவன் பற்பல காரணங்களினால் தலைவியைப் பிரிவது பாலைத்திணையாகும். அப்பிரிவினைப் பொறுத்துக் கொண்டு ஆற்றியிருப்பது முல்லைத்திணையாகும். தலைவன் குறித்த காலத்தில் மீண்டும் வராமல் காலம் நீட்டிக்கும்போது, தலைவி அப்பிரிவினை ஆற்றமுடியாமல் இரங்குதல் நெய்தல் திணையாகும். பிரிந்து சென்ற தலைவன், வந்து கூடிய பின்பு தலைவன் தலைவியரிடையே காதலின்பத்தை மிகுவிப்பதற்காக நிகழும் சிறு ஊடல் மருதத்திணைக்கு உரியதாகும்.

| | | |
|---|---|---|
| தலைவனும் தலைவியும் கூடி மகிழ்தல் | - | குறிஞ்சி |
| தலைவன் தலைவியைப் பிரிதல் | - | பாலை |
| தலைவன் பிரியின் தலைவி ஆற்றியிருத்தல் | - | முல்லை |
| தலைவனது பிரிவாற்றாமையால் தலைவி இரங்கல் | - | நெய்தல் |
| தலைவனோடு தலைவி ஊடல் | - | மருதம் |

இதை

> **"போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி**
> **ஆக்கஞ்சே ரூடல் அணி மருதம் - நோக்குங்கால்**
> **இல்லிருத்தல் முல்லை இரங்கல் நறுநெய்தல்**
> **சொல்லிருத்த நூலின் தொகை"**[6]

என்று ஒரு பழம் பாடல் குறிப்பிடுகிறது.

## 1.6 பிரிவு வாழ்க்கை

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற அன்பின் ஐந்திணைகளின் உரிப்பொருள்கள் எல்லாம் பிரிவையும், பிரிவின் நிகழ்வாயும், பிரிவை உள்ளடக்கியதாயும் அமைவனவாகும். குறிஞ்சியின் உரிப்பொருள் புணர்தல். பாலையின் உரிப்பொருள் பிரிவு. முல்லையின்

உரிப்பொருள் இருத்தல் அதாவது பிரிவால் ஆற்றியிருத்தல். நெய்தலின் உரிப்பொருள் இரங்கல், அதாவது பிரிவால் ஆற்றாது இரங்கல். மருதத்தின் உரிப்பொருள் ஊடல். ஊடலும் தலைவனின் பரத்தையர் பிரிவால் வரும் ஊடலாகும்.

சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாம் காதல் இணைகளின் கூட்டத்தையும், பிரிவையும் குறித்தன. புணர்ச்சியில் இன்பத்தையும், தனிமையின் துன்பத்தையும் சுட்டுவன. இவற்றுள் பெரும்பான்மை, பிரிவின் அடிப்படையாய் அமைந்து, பிரிவின் துன்பத்தைக் கூறுவனவாயும், துன்பத்தின் ஆற்றாமையை வெளிப்படுத்துவனவாயும் அமைந்துள்ளன.

பிரிவு இல்லாவிட்டால் கூடுதல், இருத்தல், ஊடல், இரங்கல் நிகழா, அன்பின் ஐந்திணையில் வித்து போல பாலைத்திணை அமைந்துள்ளது. பாலைத்திணை குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்று நடுவில் அமைந்துள்ளது. இதனாலேயே தொல்காப்பியரும் 'நடுவுநிலைத்திணை' என்றார்.

பாலைத்திணைக்கு மாறனகப் பொருள் சிறந்த இலக்கணம் வகுத்துக் கூறுகிறது. தலைவன் கல்வி, பொருள், பகை, வினை, தூது காரணமாகப் பிரிந்து செல்கிறான். தலைவன் மேற்கொண்ட வினை ஒரு பக்கமும், தலைவியின் பிரிவுத்துயர் மறுபக்கமும் தலைவனை வருத்த தலைவன் ''வினையே ஆடவர்க்கு உயிர்'' என்பதை மனத்தில் கொண்டு தலைவியின் பிரிவை, தான் மேற்கொண்ட நோக்கத்தோடு சேரவிடாமல் செயல்பட்டால் அதுவே சிறந்த பாலைத்திணை என்று கூறுகிறது.

தலைவன் உளமும் அதன் செயல் நோக்கமும், தம்முள் கலத்தல் இன்றியிருத்தால் அது 'செம்பாலை' எனப்படும் என்று 'மாறனகப் பொருள் தொகுதி 2' என்ற நூலில் முனைவர் சு.செல்லையாபிள்ளை குறிப்பிடுவார்.

## 1.7 பருவமும் பொழுதும்

பின்பனி, இளவேனில், முதுவேனில், நண்பகல் ஆகியன பாலைக்குரியனவாகத் தொல்காப்பியரால் கூறப்பட்டன. முதுவேனில் கடுங்கோடை நாட்களையும், நண்பகல் சூரியனின் வெம்மை மிகவும் கொதிப்புற்றுக் கொப்பளிக்கும் நேரத்தையும் குறிக்கும்.

தலைவனின் பிரிவு கூறுகின்ற பாடல்களில் இப்பருவத்தாலும் உண்டாகும் துயரத்தில் மிகுதி திறம்பட விளக்கப்பட்டுள்ளது.

வேனிற்கால நண்பகலில், பாலை நிலத்தில் பிரிவொழுக்கம் நிகழும் மாசி முதல் ஆடி வரை உள்ள ஆறு மாதம் பின்பனி, இளவேனில், முதுவேனில், மழையின்றியிருக்கும் காலமேயாகும். ஆகையால் அக்காலமே அயலூர்க்குச் செல்வதற்கும் ஏற்ற காலமாகும். வேற்றிடத்திற்கும், வேறுநாட்டிற்கும் செல்வோர் இவ்வறண்ட நிலத்தின் வழியே செல்ல வேண்டியிருப்பினும், நண்பகலில் நடுப்பகலில் வெப்பம் வெயிலின் கொடுமை மிகுதியாக இருத்தலாலும் இக்காலங்கள் பிரிவுக்கு ஏற்றவையாயின. இச்சிறப்பு பற்றியே பாலை நிலத்திற்குரியதாக பிரிவு ஆயிற்று.

### 1.7.1 இளவேனிற்பொழுது

சங்க இலக்கியங்களில் இளவேனிற்பொழுது பாலைக்கலிப் பாடல்களில் சிறப்பாகப் பேசப்படுகிறது. இது இளவேனில் வரவு கண்டு தலைவி உறவுக்குத் துடிப்பதைக் காட்டும்.

பொய்கையில் மலர்கள் பூக்கும் கரையோர முருக்கமலர்கள் இளநீரில் விழும். வண்டுகள் மலர்களை மொய்க்கும். கரையோர மறப்பெண்கள் தன் பச்சைச் செடிக் கூந்தலில் புத்தம் புது மலர்களை அணிவர் என்று பாலைக்கலி 33வது பாடலில் வருகிறது.

### 1.7.2 தமிழகத்தில் இளவேனில்

இயற்கை வழி இளவேனிற்பொழுது தன் வரவை அறிவுறுத்தி நிற்கும். பிரிந்து சென்று மீண்டு வந்த தலைவரைப் பெற்ற மகளிர் இளவேனிற்பொழுது கண்டு மகிழ்வர். பிரிந்து சென்றவர், இப்போதும் வரவில்லையே என்று பிரிந்து நின்ற மகளிர் துடிப்பர்.

| | | | |
|---|---|---|---|
| 1. | சித்திரை<br>வைகாசி | இளவேனில் | வசந்தருது |
| 2. | ஆனி<br>ஆடி | முதுவேனில் | கிரிசும ருது |
| 3. | ஆவணி<br>புரட்டாசி | கார் | வர்சருது |
| 4. | ஐப்பசி<br>கார்த்திகை | கூதிர் | சரத்ருது |
| 5. | மார்கழி<br>தை | முன்பனி | கேமந்தருது |
| 6. | மாசி<br>பங்குனி | பின்பனி | சிசிருது |

தமிழரைப் போலவே ஆரியரும் பெரும்பொழுதை ஆறாக்கி உரைப்பர். வசந்தம், கிரிசுமம், வர்சம், சரத், கேமந்தம், சிசிரம் என அவர் குறிப்பர். வேனில் முதலான ஆறு காலங்கள் தற்போதைய தென்னிந்திய சூழலுக்கு ஒத்து வருதல் இல்லை. ஆனால் ஆரியர்க்கு ஒத்து வருகின்றன. ஆனி, ஆடி (சூன், சூலை) மாதங்கள் வட இந்தியாவில் வேனிற்காலம் (வசந்தம்) ஆனால் அவை தென்னிந்தியாவில் மழைக்காலம் (ஐப்பசி, கார்த்திகை) மாதங்கள் வட இந்தியாவில் சரத் காலம் (கூதிர் காலம்) தமிழ் நாட்டில் இது நல்ல அடைமழைக்காலம். தமிழகச் சூழலில் வேனிற்காலம் காதலர்க்கு இனியது அன்று. ஏனெனில் அது கொடுங்கோடைகாலம் ஆகும். தமிழ்க் காதலர்க்குக் கார்காலமே இனியது. அதனால்தான் காரும்,

மாலைப்பொழுதும், சேர்ந்திருக்கும் முல்லையார்க்கு உரியன கார்காலத்தைப் போலவே கூதிர் காலமும் இனியது. எனவே தான் புணர்ச்சி ஒழுக்கத்திற்குரிய குறிஞ்சிக்குரியனவாகக் கூதிரும் நள்ளிரவும் தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆனால் கலித்தொகைப் பாடல்கள் சில *(31, 32, 33, 35, 36)* வேனிற்கால வரவிற்காகத் தலைவி ஏங்குவதாகவும், வேனிற்கால வரவு கண்டு அவள் துடிப்பதாகவும் அமைந்துள்ளன.

**''புணர்ந்தவர் முயக்கம் போல் புரிவுற்ற கொடியொடும்**
**நயந்தார்க்கோ நல்லைமன் இளவேனில்''[7]**

**''காதலர்ப் புணந்தவர் கவவுக் கை நெகிழாது**
**தாது அவிழ் வேனிலோ வந்தன்று''[8]**

**''பல் மலர் சினை உக சுரும்பு இமிர்ந்து வண்டு ஆர்ப்ப**
**இன் அமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினான்''[9]**

இளவேனிற் பருவம் கண்டு துடிப்பதாக வரும் பாக்கள் தமிழ்நாட்டு இயற்கை அமைப்பிற்கு முரண். தொல்காப்பியர் வேனிலைப் பாலைக்கு உரியதாக்குவார்.

**''நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே''[10]**

என்பது தொல்காப்பிய *11*வது நூற்பா. **''**பிரிவிற்குரிய பாலைப் பொழுதில் கொளுத்தும் வெயிலில், தலைவன் வரவிற்காகத் தலைவி ஏங்கினாள் என்று பாடும் முறை, தமிழ்முறை அன்று. தமிழுக்கு உறவு முறையும் அன்று. தமிழுக்கு ஆரியத்திடம்இருந்த வந்த வரவுமுறை. வடகுல இலக்கியங்களில் வேனில் சிறப்பிக்கப்படுவதைப் பார்த்து தமிழில் எழுதப்பட்டுள்ளது என கொள்ளலாம்''.[11]

வேனில் என்பது இளவேனில், முதுவேனில் ஆகிய இரண்டு பிரிவுகளைக் கொண்டது. சித்திரைத் தொடங்கி ஆடி முடிய உள்ள நான்கு திங்களைக் குறிப்பது.

பின்பனிக்காலம் என்பது மாசி, பங்குனி ஆகிய இரண்டு திங்களை குறிப்பதாகும். எனவே மாசி முதல் ஆடி வரை உள்ள ஆறு திங்கள் ஓர் ஆண்டில் பாதி, பாலைக்கு உரியதாக வகுத்துள்ளனர் பண்டைய தமிழ்ச் சான்றோர்கள்.

வேனிற்காலமும் நண்பகல் நேரமும் பாலைத் திணைக்குப் பொருத்தமானது என்பது பற்றி நச்சினார்க்கினியர்.

"காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமைக்கூற சோலை, தேம்பிக் கூவல் மாரி நீரும் நிழலும் இன்றி நிலம் பயம் துறந்து புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெருகுவதோடு காலமாதலின் இன்பத்திற்கும் இடையூராகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிற்காலமும் சிறப்புடையதாயிற்று" என விளக்கம் தந்துள்ளார்.

தலைவனும் தலைவியும் பெறக்கருதும் இன்பத்திற்கு இடையூறாக முளைப்பது பிரிவு ஏற்படுத்துகின்ற பாலைத்திணை வேனிற்காலமும் அக்காலத்து நடுப்பகலும் அத்தன்மையை உடையது. வேனிற்காலத்து காலை நேரமும், மாலை நேரமும் கூட நண்பகல் போல் கொடுமையான வெப்பம் உடையன.

"சோலைகள் வாடும், கிணறுகளில் நீர் இராது. நீரும் நிழலும் இன்றி நிலமெல்லாம் வறண்டு கிடக்கும். பறவைகளும் விலங்குகளும் இன்பமாக மகிழ்ச்சியுடன் வாழ முடியாதவாறு வெப்பம் பெருகி நிற்கும். எல்லா உயிர்களும் இன்பமாகவே வாழ விரும்பியும், வெப்பத்தின் கொடுமையால் துன்பம் அடையும்.

இவ்விளக்கத்தின் வாயிலாகப் பாலைத்திணைக்கும், வேனில் நண்பகல் ஆகிய காலப் பகுதிகளுக்கும் உள்ள பொதுப்பண்பு தெளிவாகும்''.[12]

நிலம் பிளந்து காணப்படுகிறது, நிலத்தொடு தொடர்புடையன மட்டுமல்லாமல், பாறையே பிளப்பதையும், நிலம் காட்டு விண்வழி இயங்கும் பறவைகளும் வாடுகின்றன என்பதை அகநானூற்று 5வது பாடலின் மூலம் அறிய முடிகிறது.

## 1.8 செம்புலம் என்பது பாலைநிலம்

குறுந்தொகையிலுள்ள சிறப்பு பெற்ற பாடலைப் பாடிய புலவர் செம்புலப் பெயல் நீரார். அவரது பாடல்

**''யாயும் யாயும் யார் ஆகியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே''**[13]

இப்பாடலுக்கான துறை இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர் பிரிவர், எனக் கருதி அஞ்சிய தலைமகள் குறிப்பு வேறுபாடு கண்டு தலைமகன் கூறியது என்பதாகும்.

இப்பாடலுக்கு பொருள் உரைப்போர், என் தாயும் உன் தாயும் முன்பே அறிந்தவர் அல்லர், என் தந்தையும் உன் தந்தையும் உறவினர் அல்லர், நானும் நீயும் முன்பே அறிமுகமானவரும் அல்லர். ஆனால் இப்பொழுது அன்புடைய நம் நெஞ்சம் 'செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் போல' ஒன்றாகக் கலந்துவிட்டது என்றே பொருள் உரைக்கின்றனர். 'செம்புலம்' என்பதற்குச் 'செம்மண் நிலம்' என்று பொருள் கொள்வதே அவர் தம் முடிவாகும். பெரும்பாலானவர்களின் கருத்தும் இதுவே ஆகும்.

ஆனால் இக்கருத்திலிருந்து உ.வே.சா.மாறுபடுகிறார். ''என் தாயும் நின் தாயும் என்ன தொடர்புடையவர்? என் தந்தையும், நின் தந்தையும் எம் முறையில் உறவினர்? யானும் நீயும் எவ்வாறு முன்பு ஒருவரை ஒருவர் அறிந்தோம்? இவ்வகையான சூழல் எதுவும் இன்றியே செம்புலமாகிய பாலைநிலத்தில் பெய்த மழைநீர், அந்நிலத்தே அலறி ஒன்றாய் கலந்துவிடுதல் போல, நம் நெஞ்சங்கள் தாமாகவே ஒன்றுபட்டன. ஆகவே நாம் இனிப் பிரிவது அரிது எனத் தெளிவித்தானாயிற்று''.

இவ்வுரையில் உ.வே.சா. 'செம்புலம்' என்பதற்கு 'பாலைநிலம்' என்றே பொருள் கொண்டுள்ளார்.

குறுந்தொகைக்கு முதல் உரை எழுதிய சௌரிப் பெருமாள் அரங்கன் பாடலுக்கு உரை எழுதும் முன், குறிப்புரை ஒன்றை எழுதியுள்ளார். இதில் ''செய்ய புலத்திற்பெய்த நீர் போல'' என்றே எழுதியுள்ளார்.

இதிலிருந்து 'செம்புலம்' என்பதற்கு, உ.வே.சாவோ, குறுந்தொகையின் முதல் உரையாசிரியரோ, 'செம்மண் நிலம்' என்று பொருள் உரைக்கவில்லை என்பது தெளிவாகிறது. பின்னால் வந்த ராகவ ஐயங்கார், சாலை இளந்திரையன் போன்ற பிற்கால உரையாசிரியர்களும், கற்பித்தல் தொழிலில் ஈடுபட்டிருப்போரும் 'செம்மண் நிலம்' என்றே பொருள் எழுதியும், சொல்லியும் சென்றுள்ளனர்.

நற்றிணை 221வது பாடலிலும் இச்சொல் கையாளப் பெற்றுள்ளது.

பிற்காலத்தில் எழுதப்பெற்ற பிங்கலநிகண்டு 'செம்புலம்' என்பதற்கு 'பாலை நிலம்' என்றே பொருள் உரைத்துள்ளது.

''மறு புலம் செம்புலம் வன்பால் பாலை'' என்பது பிங்கல நிகண்டின் பாடலடியாகும்.

நா.கதிரைவேற் பிள்ளையின் 'தமிழ் மொழி அகராதி' 'செம்புலம்' என்பதற்குச் சுடுகாடு, செம்புமாலை, பாலைநிலம், போர்க்களம் என்றே பொருள் குறித்துள்ளது.

2004 இல் வெளிவந்துள்ள 'மதுரைத் தமிழ் அகராதியும்' 'செம்புலம்' என்பதற்குச் சுடுகாடு, செம்புமலை, பாலைநிலம், போர்க்களம் என்ற முந்தைய அகராதிப் பொருளையே சுட்டியுள்ளது.

இவ்வகராதியின் 2வது பதிப்பிற்கு உ.வே.சா. முகவுரை எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

வீரமாமுனிவரின் சதுரகராதியிலும், 'செம்புலம்' என்பதற்குச் சுடுகாடு, பாலைநிலம், போர்க்களம் என்ற பொருளேச் சுட்டப்பெற்றுள்ளன.

இவ்வகராதிகள் எவற்றிலும் 'செம்புலம்' என்பதற்கு 'செம்மண் நிலம்' என்று பொருள் கூறப் பெறவில்லை.

பாலை நிலம் வறண்டு கிடக்கும் நிலமாகும். அந்நிலத்தில் பெய்த மழைநீர் உடனடியாக ஈர்க்கப்பட்டுவிடும். அதுபோல உன்னில் நானும் என்னில் நீயும் ஈர்க்கப்பட்டு விட்டோம். எனவே நம்மைப் பிரிக்க முடியாது எனத் தலைவன் கூறுவதாகப் பொருள் கொள்வதே பொருத்தமாக உள்ளது.

இதிலிருந்து 'செம்புலம்' என்பதற்கு 'செம்மண் நிலம்' என்ற பொருள் பொருத்தமாக இல்லை என்பதும், 'பாலைநிலம்' என்பதே பொருத்தமாக உள்ளது எனலாம்.[14]

''பாலை எனில் வறட்சி, உணர்வு வறட்சி, உணவு வறட்சி வளம்தேட ஒட்டும் காதலியைப் பொருளுக்காகவும், பொருள்தரும் பிற கடனுக்காவும் காதலன் பிரிய நினைகுவான். பிரிவுச் செய்தி அறிந்து பெண் கலங்குவாள். நாட்டு வறட்சி, வீட்டு வறட்சி ஆகி நாயகனைப் பிரிந்தோட்டும் பொழுது நாயகி கலங்குவாள். பெண்ணின் பிரிவு

பெறாக்குரலே பாலைக்குரல் வளமற்ற நிலம், வீட்டையும் வளமற்றதாக்கும், இதனால் பிரிவு என்பது பாலையின் உரிப்பொருளாயிற்று''.[15]

## 1.8.1 பாலைத்திணைக் காட்டும் வாழ்வியல் உண்மைகள்

ஒவ்வொருவரும் மரணநாள் இது என்று அறிந்தவர் இல்லை, பொருளைத் தவிர வேறு சிறந்த பொருளும் உலக வாழ்க்கைக்கு உண்டோ, ஓர் ஆடையை இரு கூறாக்கி உடுக்கும் வறுமை நிலையில் இருந்தாலும் அவர்கள் உள்ளம் ஒன்றி வாழ்ந்தால் அதுவே சிறந்த வாழ்க்கை, செல்வம் என்பது ஓரிடத்தில் இல்லாமல் சென்று கொண்டே இருக்கும். முன் வினையின் அளவுக்குப் பெயர்ந்து பெயர்ந்து செல்லும். கடன் வாங்கும் போது மலர்ந்த முகம், கடனைத் திருப்பிக் கொடுக்கும் போது முகம் சுருங்கிக் கிடக்கும். பொய்ச்சாற்றுக் கூறியவன் தன் கீழ் இருந்தால் அந்த மரம் கெட்டுப் போகும். முறை தவறிய மன்னன் கீழ் வாழும் மக்கள் கலங்குவர், அரசு ஆட்சிப் பொறுப்பு ஏற்றோர், நாட்டில் துயரம் நிகழாதவாறு காத்தல் வேண்டும். அவரே நாட்டைக் கலக்கம்உறச் செய்தால் நாடு பாழ்ப்படும் எனவும், நடுவு நிலைமை நீங்கிய, அன்பு இல்லாத மக்கள் மேல் கொடிய சட்டங்களை ஏவும் கொடுமையே ஆராயக் கூடிய கொடுங்கோல் மன்னன் ஆட்சி போல் இருக்கும், ஒருவர் தாம் அஞ்சியதே அவரைத் தீண்டி வருந்தும் தெய்வமாக அமையும், ஒருவர் தம் அருகே இருக்கும்போது புல்லியர் அவருக்குச் சிறப்புச் செய்வர், புகழ்ந்து பாராட்டுவர். ஆனால் அவர் தம் எதிரே இல்லையென்றால் புறத்தே அவரைப் பற்றி பழி தூற்றுவர் என்பன போன்ற வாழ்வியல் உண்மைகள் வெளியிட பாலைத்திணையே சிறந்ததாகக் காணப்படுகிறது.

## 1.9 சுரம்

சுரம் என்பது இருவகையது. மலைகளின் நெடுகிலும் அமைந்த பாலைவழிகள். இவ்வழி 'பன்மலை அருங்சுரம்' என கூறப்பெறும், 'பசுமை இழந்த மலைவழியில் நெடுகச் செல்லல்' என்றும், 'காய்கதிர்

கருகிய கவினழி பிறங்கல் வேய்கன் உடைந்த சின்மய வாழ்படுமருங்கு' என்றும் கூறப்பெறும். மற்றொன்று கான்வழிச் செல்லும் பாலை நெறியாகும். பாலை என்பது மக்கள் குடியிராதப் பகுதிகளாகும். இவ்வழிகள் பண்டைநாளில் பெருவழிகளாகப் பயன்படுத்தப்பட்டன என்பதை அறிய முடிகிறது. ஆறலைக்கள்வரே அதனை இருப்பிடமாகக் கொண்டனர்.

''சுரன் இறந்தோர்''[16] (வறண்ட நிலவழிச் சென்றோர்)
''காடிறந்தோர்''[17] (காட்டின் வழிச் சென்றோர்)
''மலை அல்லது குன்றிறந்தோர்''[18] (மலையின் வழியே சென்றோர்)
''பிரிந்திசினோர்''[19] (பிரிந்தவர்)

அவர்கள் தலைவியைக் குறிக்க இவைபோன்ற தொடர்களைப் பயன்படுத்தினர்.

நற்றிணையில் 105வது பாடலில் பாலை நிலத் தோற்றம் சுரம் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. உலர்ந்த கொடிகள் சுற்றிய முட்கள் பொருந்திய ஓர் இலவமரம் தென்படுகிறது. அதன் கிளைகள் முறிந்து விடும் வண்ணம் கடுங்காற்று மோதி அடிக்கிறது. இங்கு நெருங்கியுள்ள மூங்கிற்புதர்களிலே விரைந்து செல்ல செல்ல பிடியானைகள் தத்தம் கன்றுகளுடன் வருந்தி நிற்கின்றன. அங்கு நீரும் இல்லை, நிழலும் இல்லை. அவற்றுடன் இது கவர்ப்பட நெறிகளையுடைய அரிய சுரமாகும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### 1.9.1 சுரத்தின் கொடுமை

வளமான நிலப்பகுதி மழையற்று வறண்டு போவதால் 'சுரம்' என்னும் வளமற்ற, வெப்பமான நிலப்பகுதி ஏற்படுகிறது. வளமான நிலப்பகுதியாக இருந்த அவ்விடங்களில் வசித்து இன்பம் துய்த்த மக்கள் வளம் அகன்றதும், வேறு இடங்களை நோக்கிச் சென்றுள்ளனர். அவ்வாறு மக்கள் நீங்கிச் சென்றதால் ஊரும் பாழ்ப்பட்டது.

கொடிய காற்று வீசி, காய்ந்த மூங்கில்களை ஒன்றோடொன்று உரசச் செய்வதால், பெருந்தீ ஏற்பட்டு மலைப் பகுதியெங்கும் பரவியது எனவும், பற்றி எரிந்த மூங்கில்களின் கணுக்கள் வெடித்ததால் எழுந்த ஒலி, கூட்டம் கூட்டமாகத் திரிந்த கலைமான்களைத் தனித்தனியாகத் துரத்திப் பிரித்தது எனவும் அகநானூற்றுப்பாடல் கூறுகிறது என்பதை

''............... ஒலிதலை
அலங்கு கழை நரலத்தாக்கி விலங்கு எழுந்து
கடுவளி உருத்திய கொடிவிடு கூர்எரி
விடர்முகை அடுக்கம் பாய்தலின் உடன் இயைந்து
அமைக்கண் விடு நொடி கணக்கலை அகற்றும்
வெம்முனை அருஞ்சுரம்''[20]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

ஞாயிறு தன் கதிர்களையே கொண்டு ஈரத்தினைக் கவர்ந்து பசுமை அற்றுப் போகும்படி செய்தது.

## 1.9.2 சூழலின் தாக்கமே காரணம்

சுற்றுச்சூழல், மாந்தர் தம் ஒழுக்கத்தை மாற்ற வல்லது. மலைச்சாரலும், தட்பக் காற்றும் குளிரும் இளைய பருவத்து இருபாலரைக் கூட்டுவிக்கின்றன. குறிஞ்சிக்கு அமைக்கப்பட்ட பொழுதே நள்ளிரவு. நள்ளிரவு, மலைச்சாரல் குளிர் காற்று. தனிமை ஆண் பெண் புணர்ச்சி.

இங்ஙனமே கொடும் வெயில், மலையும் காடும் அழிந்த அளவிற்குப் பஞ்சம். மழை இன்மை, வறுமை, இல்லாமை, ஏழ்மை முதிர்கிறது. முடிவு களவு, திருடு, கொலை, கொள்ளை, பாலை நிலம் பஞ்சநிலையின் குறியீடு, பாலையில், கொள்ளை, பாலை மக்களின் தொழிலாகிறது. பொருளற்ற நிலையே தலைவனைத் தலைவியிடமிருந்து பிரித்துப் பொருள்தேட உந்துகிறது.

எனவே குறிஞ்சி நிலச்சூழல் கொஞ்ச வைக்கிறது. பாலை நிலச்சூழல் தலைவியிடம் கெஞ்சி பிரிய வைக்கிறது. சூழலே, மாந்தரை வாழ வைக்கிறது. தாழ வைக்கிறது.

## 1.9.3 கானல் நீர்

பறவைகளும் விலங்குகளும் நீர் வேட்கையால் பெரிதும் துன்புறுகின்றன. வெப்ப மிகுதியால் ஏற்படும் பேய்த்தேரை நீரெனக் கருதி ஓடி ஓடி இளைத்து இறுதியில் ஏமாறுகின்றன. நீர் வேட்கை மிக்க விலங்குகள், பசியாலும், நீர்வேட்கையாலும் பாலையிலே வாடி வருந்தும் உயிரினங்களைப் பற்றிய பல காட்சிகள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

**''கனைகதிர்**
**ஆவி அவ்வரி நீர்என நசைஇ**
**மாதவப் பரிக்கும் மரல் திரங்கு நனந்தலை''[21]**

என அகநானூறும்

**''கடுநவை ஆராற்று அறுசுனை முற்றி**
**உடங்கு நீர் வேட்ட உடம்பு உயங்குயானை**
**கடுந்தாம்பு பதிவு ஆங்குக் கை தெறப்பட்டு**
**நெறி மயக்குற்ற''[22]**

என கலித்தொகையும் குறிப்பிடுகின்றன. கானல் நீர்ப்பற்றி பலவகையாகச் சங்கப் பாடல்களில் பாடப்பட்டுள்ளது.

வெள்ளை நிறத்தேர் (வெண்தேர்) எனவும், பேய் ஊர்ந்து செல்லும் தேர் (பேய்த்தேர்) எனவும் பேசப்படுகின்றன. பேய்த்தேர், என்பதைச் சொல்லும் நோய்ப்பாடியார் என்னும் புலவர் 'ஊர்ந்தேறாததேர்' எனவும் 'உருவில்லாதத்தேர்' என்றும் பாடுகின்றார். (உருவில் பேய் ஊராத்தேர்) மற்றும் அது ஓடுகின்ற தேராகவும் (ஓடுதேர்) ஓடாத தேராகவும் (வழங்காத்தேர்) குறிப்பிடுகின்றன. ஓடுவது போன்ற பொய்த்தோற்றத்தையும், உண்மையிலேயே ஓடுகின்ற இயக்கம் ஒன்றும் இன்மையும் கருதி இவ்விருவகை விளக்கமும் முறையே எழுந்தன.

தொலைவிலிருந்து நோக்க, அகன்று விரிந்து கிடக்கும், நீர்ப்பரப்பை போல கவர்ச்சியூட்டி விலங்குகளை ஈர்த்து ஏமாற்றும், 'கானலின் கொடுமை பாலையின் கொடுமுடி எனலாம்' என்று "பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை" என்ற தமது நூலில் டாக்டர் மு.வ. குறிப்பிட்டுள்ளார்.

பாலை நிலத்தின் வெம்மையை பெரும்பாலான பாடல்கள் விலங்குகளைச் சுட்டிக்காட்டியும், பறவைகளைச் சுட்டிக்காட்டியும், இயற்கைச் சீரழிவைச் சுட்டிக் காட்டியுமே விளக்கியுள்ளன சில சான்றுகள்.

### 1.9.4 சூரியனின் வெப்பம்

நிலம் பிளவுபடுமாறு சூரியன் கதிர்களை வீசுகிறது. மரங்கள் பட்டுப்போய் நிற்கின்றன. வெப்பமான கற்பாறைகளின் மீது வாழும் மூங்கில் நெற்கள் பொரிகின்றன. வழிச்செல்வோர் இல்லாததால், கள்வர்களும் இங்கு இல்லை. நாரில்லா முருங்கையின் பூக்கள் சுழல் காற்றில் சிக்கி உதிர்வது, கடல் நீர்த்திவலைகள் தெரிவிப்பது போல் உள்ளது என்று ஒரு பாடல் பாலை நிலத்தை விளக்கியுள்ளது என்பதை

"அழல் போல் வெங்கதிர் பைது அறத்தெறுதலின்
நிழல் தேய்ந்து உலறிய மரத்த கறை காய்பு
அறுநீர்ப் பைஞ்சுனை ஆம் அறப் புலர்தலின்
உகு நெல் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குநர் இன்மையின் வௌவுநர் மடிய"[23]

இப்பாடலின் மூலம் அறிய முடிகிறது.

நிலம் புடை பெயர்வது போன்று கதிரவன் வெப்பத்தை உமிழ்கிறது. மழையின்மையால் மரங்கள் இலைகளின்றிக் காணப்படுகின்றன. அம்மரங்களின் மீதிருக்கும் பார்ப்பினங்களை, குறும்ப வீரர்கள் வில்லால் கொன்று வீழ்த்துகின்றனர். வழியில் இறந்து கிடப்பவர்களின் கண்களை பருந்துகள் கவர்ந்து செல்கின்றன என்பதை அகம் 31வது பாடல் குறிப்பிடுகிறது.

### 1.9.5 நெருப்பை உமிழும் ஞாயிறு

ஞாயிறானது நெருப்பைப் போல சினந்து கதிரைப் பரப்பியதால் இலை உதிர்ந்த இலவ மரங்கள், பூக்களோடு மட்டுமே நிற்கின்றன. இது கார்த்திகை விளக்கு போல காணப்படுகிறது என்பதை அகம் 11வது பாடல் வழி தெரிந்துகொள்ள இயலுகிறது.

### 1.9.6 மூங்கில்கள் உரசல்

பாலை நிலம் வறண்டு காணப்படுவதால், மரங்களும் மழை இல்லாமல் வாடின. பாறைகள் கொதித்து நீரற்ற பைஞ்சுனைகளில் ஈரம் இல்லாமல் போகும்படி காய்தலால், அங்கு சொரியும் மூங்கில் நெல்லும், பொரியும் வெம்மையுடையது. பாலை நிலத்தில் மூங்கில்கள் உரசிக் கொள்வதால் தீப்பற்றி எரிகிறது என்பதை

> ''செலவு அயர்ந்தனரால் இன்றே மலைதொறும்
> மால்கழை பிசைந்து கால்வாய் சுடர் எரி
> மீன் கொள் பரதவர் கொடுந் திமில் நளிகடர்
> வான் நோய் புணரிமிசைக் கண்டாங்கு''[24]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

## 1.10 யானையின் பிளிறல்

பாலை நிலத்தில் விலங்குகளும் உண்ண நீரின்றி வருந்தின. பாலைக் காட்டில் வாழ்ந்த யானை ஒன்றைப் பாம்பு பிடித்துக் கொண்டது. அதனால் பெண் யானையும் தாங்காது துன்பத்துடன் அஞ்சி, பேரொலி எழுப்பியது இவ்வொலி நீண்ட மலைப்பிளவுகளில் பட்டு எதிரொலிக்கும் என்பதை நற்றிணை பாடல் 14 குறிப்பிடுகிறது.

## 1.11 வேற்று நாட்டினர்க்கு உணவு

வெண்மையான ஆடை விரித்தது போன்ற பாலை நிலம் எங்கும் வெப்பம் வீசுகின்றது. அந்நிலத்தில் இருந்த செந்நாய் மரையாவைக்

கொன்று தின்று, எஞ்சியதை விட்டுச் சென்றது. அவ்வாறு விட்டுச் சென்ற இறைச்சி பாலை வழியில் செல்லும் வேற்று நாட்டினர்க்கு உணவாகப் பயன்பட்டது என்பதை

"துகில் விரித்தன்ன வெயில் அவிர் உருப்பின்
என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்
ஒய் பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி
ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய்நாட்டு
அருஞ்சுரம் செல்வோர்க்கு வல்சி ஆகும்"[25]

என்ற பாடலடி மூலம் அறிய முடிகிறது.

## 1.12 பாலைநில வருணனை

களம் புகுந்து போர் புரிந்து இறந்த வீரர்களின் வயிற்றிலிருந்து குடலினை ஈர்த்துக் கவ்விச் செல்கிறது ஒரு பருந்து. இதனினும் கொடியதாக மற்றொரு பருந்தின் செயலினைக் காணலாம். உயிர் நீங்கிய உடம்பிலிருந்து கண்ணைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு பறக்கிறது ஒரு பருந்து. தன் குஞ்சு இருக்கும் யா மரத்து உச்சிக்குச் சென்று அதற்கு ஊட்டுகிறது.

ஆனால் அவசரத்தில் தசை அந்தக் குஞ்சின் வாயிலிருந்து நழுவி விழுந்து விடுகிறது. அந்தக் கண் நழுவி விழுந்தது, அது கீழே பசியோடு இருந்த கிழட்டு நரிக்கு விருந்து ஆகியது என்பதை அகநானூற்றுப் பாடல் *193* இன் வழி அறியமுடிகிறது.

### 1.12.1 பாலை நிலக் கொடுமை

பாலை நில இயல்பு பற்றியும், அதில் வாழும் விலங்குகள் படும் இன்னல்கள்பற்றியும், பாலை வழியில் செல்வோர் அடையும் சொல்லொனாத் துயர் பற்றியும் பல பாடல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன.

### 1.12.2 பிணக்குவியல்

பாலை வழியில் செல்வோர், அதன் கொடுமை தாங்காமல் இறந்து விடுதலும் உண்டு. அவ்வாறு இறந்தவர்களுடைய உடல்களின் மேல் இலைகளைப் போட்டு மறைத்துவிட்டு, உடன் வந்தோர் செல்கின்றனர். மேலும் மேலும் இலைகள் அதில் சேர அக்குவியல் பெரிதாகின்றது. அக்குவியலின் நிழலில் யானைகள் தங்குகின்றன.

### 1.12.3 வெந்நீரே குடிநீர்

வெப்பம் மிகுந்த பாலை வழியே செல்வோர்க்கு நீர் கிடைப்பது கடினம். வழியெல்லாம் நீர் கிடைக்காது. வருந்தி வருபவர்களுக்கு முன்னால் ஒரு சுனை தோன்றுகிறது. நீரற்ற வழியில், நீர் வேட்கையால் வருந்தியோராதலின் விரைந்து செல்கின்றனர். சுனையை கண்டால் அங்குள்ள நீர் கலங்கிய நீர் அதுவும் அதிக சூரிய வெப்பத்தால் சூடேறி வெந்நீர் போல இருந்தது. அவர்கள் வீட்டில் செம்பொன் கலத்தில் பால் அருந்திப் பழகியவர்கள், இப்போது இந்நீரை விட்டால் வேறு வழியில்லை. நெடுநேரம் வேட்கையால் வாடியவர்கள் ஆதலால், இரு கைகளிலும் நீரை வேகமாக எடுத்துக் குடிக்கின்றனர். பாலை நிலத்தில் செல்வோர் நீருக்காகப் படும்பாட்டை விளங்க முடிகிறது.

### 1.12.4 வழி அறியா வழிப்போக்கர்

யானைகள் விளையாடும்போது அவை கால்களால் மண்ணை ஏற்றிட, அதனால் எழுந்த புழுதி வழிப் போவோர்க்கு பழைய வழிகள் மயங்கியுள்ள காடு, வழியறியாமல் வழிப்போக்கர் துன்பம் அடைவர் என்பதை

> ''களிறு உதைத்து ஆடிய கவிழ்கண் இடுநீறு
> வெளிறு இல் காழலே''[26]

என்ற வரி குறிப்பிடுகிறது. இக்கருத்தையே கலித்தொகை 5ம் பாடலும் வலியுறுத்துகிறது.

### 1.12.5 காட்டுத்தீ

பாலை நிலம் தீப்பற்றி எரிந்த மரங்களை உடையது. நிழலும் அழகும் கெட்டழிந்த நிலம் என்றும், எல்லா நன்மைகளும் சிதைந்த நிலம் என்றும் அறிய முடிகிறது. காட்டைத் தீ அழித்துவிட்டது. எனவே பாலை வழிச்செல்வோர்க்கு நிழல் தரும் மரங்கள் அற்ற வழி என்பதை

"பரந்து படு கூர்எரி கானம் நைப்ப
மரம் தீ உற்ற மகிழ்தலை அம்காட்டு
ஒதுக்கு கடும் அரும் வெரு சுரம்"[27]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

மூங்கில்கள் உராய்ந்ததால் தீப்பொறி பரவியது. காற்று சுழன்றடித்ததால் அங்கிருந்த ஊகம் புல்லை எரியச் செய்த தீ, காட்டை தன் வசப்படுத்தியது. இதனால் அக்காட்டில் சென்ற வணிகர்கள் அவ்வழியைத் தவறவிட்டு அலறினர் என்ற செய்தியை அகம் 39வது பாடலின் வழி அறியமுடிகிறது. வணிகர்கள் தங்களது உடமைக்கும் உயிர்க்கும் ஆபத்து வந்ததால் அலறினர். கள்வர்கள் பொருட்களைக் கொள்ளையடித்தால் வணிகர்கள் உயிர் பிழைக்கவும் செய்யலாம். ஆனால் தீயால் உயிரே போய்விடுமே என்று அஞ்சி அலறினார்கள்.

வழிப்போவோர் யாரும் இல்லாததால் ஆறலைக்கள்வரும் தொழிலற்றுச் சோர்ந்து இருக்க சுரம் பொலிவிழந்த வழிகளை உடையது. வழியில் செல்பவர்கள் யாரும் இல்லாததால் கள்வர்கள் இறந்தனர் என்பது உணவில்லாத வறுமையைக் குறிக்கிறது என்பது அகம் 101வது பாடலின் வாயிலாக உணர முடிகிறது.

## 1.13 களர்நிலம்

வெம்மையால் உருவானது மட்டும் பாலை நிலமாகக் கருதப் பெறவில்லை. ஒன்றுக்கும் உதவாத களர்நிலங்களும் பாலை என்றே அழைக்கப்பெற்றுள்ளன.

பெண்மான் கொல்லப்பட்டதை உணராத இரண்டு குட்டிகள் தன் பக்கத்தில் விளையாட, துன்புற்ற ஆண்மான் உணவை வெறுத்து வருந்தியிருக்கும் களர்நிலத்தில் சிறிய குழியில் இருக்கும் நீரையும் பருகாமல் நின்று கொண்டிருப்பதை

> "குறுநெடுந் துணையை மறிபுடை ஆட
> புன்கண் கொண்ட திரி மருப்பு இரலை
> மேய்பதம் மறுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
> நெய்தல்அம் படுவில் சில்நீர் உண்ணாது
> எஃகுஉறு மாந்தரின் இனைந்துகண் படுக்கும்
> பைதுகர வெம்பிய பாழ்சேர் அத்தம்"[28]

என்ற அகநானூற்று பாடலின் வழி அறியமுடிகிறது.

களர் நிலமாகிய பாலை நிலப்பரப்பில் பிணைமான் தன் குட்டிகளோடு பயந்து ஓட ஆண்மான் அவற்றைத்தேடும் என நற்றிணை 242வது பாடல் விளக்கியுள்ளது. அகப்பாடல்களில் மட்டுமின்றிப் புறப்பாடல்களிலும் களர் உவர்நிலம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. புலத்தி ஒருத்தி களர்நிலத்து உண்டாகிய கூவலைத் தோண்டி ஆடைகளை வெளுத்தது புறம் 311வது பாடல் வழி அறிய முடிகிறது.

## 1.14 பிணங்களை எரிக்கும் இடம்

பரிசிலர்கள் இரக்கப்படும்படி கள்ளி ஓங்கி வளர்ந்திருக்கும் 'களரியில்' வெளிமான் இறந்துவிட்டான் எனப் புறம் 237வது பாடல் குறிப்பிடுகிறது.

சேரமான் கோட்டம் பலத்துத் துஞ்சிய மாக்கோதை தன் மனைவி கள்ளி வளர்ந்திருக்கும் 'களரியம்' பறந்தலையில் தீயில் பாய்ந்து உயிர்விட்டாள் என குறிப்பிட்டுள்ளான் என்ற செய்தியை புறம் 245வது பாடல் குறிப்பிடுகிறது.

'களரி' அருகில் பேய் மகளிர் பிணங்களைத் தழுவிக் கொண்டு ஊன்தின்ற புலால் மேனியோடு கூத்தாடுவர் என புறம் 359வது பாடலில் சுட்டப்பட்டுள்ளது. களரி நிலம் அச்சம் தரத்தக்கதாகவும்,கேடு உடையதாகவும், கள்ளிகள் வளர்ந்திருக்கும் இடமாகவும் இருந்துள்ளது என்பதை புறம் 360வது பாடல் கூறுகிறது.

களரியில் வெள்ளெலும்புகள் கிடக்கும் என்றும் காக்கை, கூகை முதலியன பகற்பொழுதிலும் கூவும் என்பதை

"சிறுவெள் என்பின் நெடுவெண் களரின்
வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலும் கூவும் அகலும் ஆங்கண்
இல் என்று இல்வயின் பெயர மெல்ல"[29]

என்ற புறநானூற்றுப் பாடல் வழி அறிய முடிகிறது.

இடுகாட்டிலும், களர் நிலத்திலும் வாழும் ஆந்தை 'சுட்டுக்குவி' என இறந்தவரை நோக்கிக் கூறுவதாக புறநானூறு 240வது பாடலில் கூறப்பட்டுள்ளது.

பாலை நிலத்து ஆந்தையின் குரல் 'மகுளிதுடி' என்னும் கருவிகளின் ஒலியை ஒத்துள்ளது என்பது அகநானூறு 19வது பாடலில் கூறப்பட்டுள்ளது.

### 1.15 களர் நிலத்தில் மழை

வெண்ணிறமான களர்நிலத்தில் மழை பெய்த போது காற்று வீசியதால் பிடவஞ்செடிகள் மலர்ந்தன என்பதை அகம் 344வது பாடல் குறிப்பிடுகிறது.

இச்சான்றுகள் வழி பார்க்கும் போது, ஒன்றிற்கும் உதவாத களர் நிலமும் 'பாலை' என்றே கொள்ளப்பட்டிருப்பதை அறியமுடிகிறது. பரற்கற்களையும், சுண்ணாம்புக் கற்களையும் உடையதாக இந்நிலம் இருந்துள்ளது என்பது தெரிகிறது. இந்நிலம் பெரும்பாலும் பிணங்களை எரிப்பதற்கும், புதைப்பதற்கும் உரிய இடமாக இருந்திருக்கிறது. சிறு சிறு கற்பாறைகளும் சமதளமற்ற நிலமாகவும் இக்களர்நிலம் இருந்துள்ளது. மழையே பெய்தாலும் கூட, இந்நிலம் வேறு எதற்கும் பயனற்றதாக இருந்துள்ளது என்பது பெறப்படுகிறது.

## 1.16 போரால் பாழ்ப்பட்ட நிலம்

இவை மட்டுமன்று போரால் பாழ்ப்பட்ட நிலமும் பாலை எனப்பட்டிருந்ததை ஒரு சில சான்றுகள் வழி அறியலாம்.

போர் செய்ததால் பாழான சிற்றூரைப் பற்றி ஒரு பாடல்

''அரிய கானம் என்னார் பகைபட
முனைபாழ்பட்ட ஆங்கண் ஆள் பார்த்துக்
கொலைவல் யானை சுரம்கடி கொள்ளும்''[30]

என்பதை தலைவன் பொருளுக்காகச் செல்லும் வழி பகைவரால் நிலை குலைந்த பாழ்ப்பட்ட மன்றம் உடையவழி என இப்பாடல் குறிப்பிட்டுள்ளது. இதை 'முனைபுலம் பெயர்ந்த புல்லென் மன்றம்' என்று குறிப்பிடுகின்றது.

### 1.16.1 தீயிட்டுக் கொளுத்துதல்

பொதுவாக போரெடுத்துச் செல்லும் பேரரசர்கள் பகை நாட்டை வெற்றி பெற்றபின், அவ்வூரைத் தீயிட்டுக் கொளுத்துவர் என்றும், கழுதைகளைப் பூட்டி விளைநிலங்களில் உழவு செய்து அழிப்பர் என்று சங்க இலக்கியப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

பதிற்றுப்பத்துப் பாடல்கள் இதற்குத் தக்க சான்றுகளாகின்றன. ''ஆநிரைகளைக் கவரும் வெட்சி வீரர்களால் தீயிட்டு அழிக்கப்பெற்ற முல்லை நிலப் பகுதிகளே பாலைநிலம்'' என்று அழைக்கப்பெற்றுள்ளது. இத்தன்மையால் அழிக்கப்பட்ட நிலம் தான், பாழ்ப்பட்ட நிலமாகவும், பாலை நிலமாகவும் சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெற்றுள்ளன எனலாம்.

### 1.16.2 குடிகள் குடிபெயர்தல்

வானம் மழை பொய்க்க, அதனால் குடிகள் தத்தம் இடம் விட்டுப் போக, வெம்மையால் பாழ்ப்பட்டு நிற்கும் நிலம் எனப் 'பாலை நிலம்' சுட்டப்பட்டுள்ளது என்பதை அகம் 77வது பாடல் குறிப்பிடுகிறது.

வன்னிலத்தில் இல்வாழ்ந்தோர் அவ்விடத்தை விட்டுச் செல்ல, பாழடைந்த வீடு ஒன்று இருந்ததை அகம் 103வது பாடல் குறிப்பிடுகிறது. யா மரங்கள் உள்ள மலையை அடுத்து காடு காய்ந்திட, காட்டரணியில் இருந்த குடியினர் அவ்விடத்தைவிட்டு பெயர்ந்து சென்றுவிட்டனர் என்பதை

''வேனில் வெற்பின் கானம் காய
முனையஎழுந் தோடிய கொடு நாட்டார்''[31]

என்ற பாடலடி மூலம் அறிய முடிகிறது.

## 1.17 கோல் கோடிய மன்னனின் கொடுங்கோலாட்சி

பாலைப் பாடல்கள் பொதுவாக பாலை நிலத்தின் வெம்மையையும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றிற்கான உணவற்ற நிலையினையும் சுட்டிக் காட்டி விளக்குதல் வழக்கம். ஆனால் பாலைக்கலியில் இவற்றோடு மற்றொரு வகையிலும் பாலையின் வெம்மை சுட்டப்பெற்றுள்ளது. மக்களைக் காக்கும் பொறுப்பிலிருந்து மாறுபட்ட மன்னவனின் நாடு போலவும், தீமை விளைவித்த மன்னவனின் கொடுங்கோலாட்சி போலவும் வெம்மையுற்றிருக்கும் பாலை என்று குறிப்பிடுகின்றது. இதனை

''நடுவிகந்து ஒரீஇ நயன் இல்லான் வினைவாங்கக்
கொடிது ஒர்த்த மன்னவன் கோல்போல் ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினம் தெறுதலின்''[32]

என்ற பாடலடிகள் சுட்டியுள்ளன.

இதேபோல தலைவனைப் பிரிந்த தலைவியின் முகம் ஆளும் அரசனால் துன்புறுத்தப்பட்ட நாடு போல சிதைவுற்றுப் போகும் என்ற உவமை

''ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடு போல்
பாழ்பட்ட முகத்தோடு பைதல் கொண்டு அமைவாளோ''[33]

என்ற அடிகளிலிருந்து வேனிற்பருவத்தில் பாலை நிலத்தில் தோன்றிய கடும் வெப்பத்திற்கு கொடுங்கோலன் ஆட்சி உவமையாகக் கூறப்பட்டுள்ளது என்பது பெறப்படுகிறது.

## 1.18 பருக்கைக் கல்

பளிங்கு போன்ற நெல்லிக்காய்களைக் குவித்து வைத்தது போன்ற கூர்மையான பருக்கைக் கற்கள் கிடக்கும். உளியின் வாய் போன்ற கூரிய வெம்மையான பருக்கைக் கற்கள் பொருந்திய வழிகளையுடைய குன்றுகள் இருந்ததையும் அறியமுடிகிறது. அக்கற்கள் வழிச்செல்வோரின் விரல் நுனியைச் சிதைக்கும் என்பதை

''பளிங்கத்து அன்ன பல்காய் நெல்லி
மோட்டு இரும் பாறை ஈட்டு வட்டு ஏய்ப்ப
உதிர்வன படூஉம் கதிர் தெறு கவாகன்
மாய்த்த போல மழுகு நுனை தோற்றி
பாய்த்தியன்ன குடுமிக் கூர்ங்கல்
விரல் நுதி சிதைக்கும் நிரை நிலை அதர
பரல்முரம்பு ஆகிய பயம் இல்கானம்''[34]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

## 1.19 பாலைநில தெய்வம் - கொற்றவை

நம்பியகப்பொருள் பாலைத் தெய்வம் 'துர்க்கை' என்று குறிப்பிட, மாறனகப் பொருள் சூரியனை பாலைநில தெய்வமாக 'மறமலிதிகிரி' என்று குறிப்பிடுகிறது.

தொல்காப்பியர் கருப்பொருளில் கூறவேண்டிய தெய்வங்களை, நிலமாகிய முதற்பொருளில் குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியர் பாலைக்கு என தனியாக நிலம் கூறவில்லை. எனவே பாலைக்கு இது தெய்வம் எனக் குறிப்பிடவும் இல்லை. பாலைக்குத் தெய்வம் 'பரிதியஞ் செல்வனும், திகிரியஞ் செல்வியும்' என கொள்க என்று தனது சிலப்பதிகாரத்தில் அடியார்க்குநல்லார் குறிப்பிட்டுள்ளார்.

பிறர் பகவதியையும், ஆதித்தனையும் தெய்வம் என்று வேண்டுவர் என்று இறையனாரகப்பொருள் கூறுகிறது. தமிழ்நெறிவிளக்கமும் பாலையின் தெய்வம் ரவி (7) என்றே குறிப்பிடுகிறது.

தொல்காப்பியர் கொற்றவையை நில தெய்வமாகக் குறிப்பிடவில்லை. அவளை போர் தெய்வமாகவே குறிப்பிட்டுள்ளார்.

> **"தோற்றோர்க்குக் கொற்றம் வேண்டியும்**
> **வென்றோர்க்கும் மேல் செல்லுங்கால் கொற்றம்**
> **வேண்டியும் வழிபடுவராதலின் வருகின்ற வஞ்சித்'**[35]

திணைக்கும் கொற்றவை நிலை காரணமாயிற்று என்று நச்சினார்க்கினியர் உரை விளக்கம் கூறுகின்றார் என்று கொற்றவையை வழிபடும் காரணத்தை வரையறுத்துக் கூறியுள்ளார். கொற்றவை என்பவள் 'வெற்றியைக் கொடுப்பவள்' என்பதைக் குறிக்கும். வேட்டைத் தொழிலை முதன்மையாகக் கொண்ட மக்களின் வேட்டைக்கு கொற்றம் தருபவளாகக் கொற்றவை திகழ்ந்தாள். அரசர்க்கும் வீரர்க்கும் கொற்றம் தருபவளாகவும், பழந்தமிழ் மக்களின் வெற்றித் தெய்வமாகவும் 'கொற்றவை' காணப்பட்டாள்.

கொற்றவையைப் போர்த் தெய்வமாக, இலக்கண ஆசிரியர்கள் கூறியதைத் தொல்காப்பியம் மற்றும் புறப்பொருள் வெண்பாமாலை வழி அறியமுடிகிறது. தொல்காப்பியத்தில் வெட்சி மறவர்கள் கொற்றவையை வணங்கிச் செல்வதை,

> **''மறக்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**
> **கொற்றவை நிலையும் அத்திணைப்புறனே''[36]**

என்று கூறுவதன் மூலம் கொற்றவைப் போர் தெய்வமாகக் குறிப்பிடப்பட்டுள்ளாள் என்பது பெறப்படுகிறது.

சிலப்பதிகாரத்திலும், பெருங்கதையிலும் கொற்றவை வேடர்களுக்கும், எயினர்களுக்கும், வெற்றி தரும் போர்த் தெய்வமாகவும், மன்னர்களுக்கு வெற்றியை அளிக்கும் போர் தெய்வமாகவும் கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

குறிஞ்சி நிலத்திலும், முல்லை நிலத்திலும், பாலைநில தெய்வமாகிய கொற்றவை கோயில் கொண்டுள்ளாள் என்பதை சங்க இலக்கிய பாடல்கள் வழி அறிய முடிகிறது.

வழிபறிக் கொள்ளையர்களுக்கு தெய்வமாக இருந்த கொற்றவை போர் வீரர்களின் தெய்வமாக மாறினாள். தொல்காப்பியரும் போருக்குச் செல்லும் வீரர்கள் கொற்றவையை வணங்கிச் செல்வதாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஆறலைக்கள்வர்கள் கொற்றவையை வழிபட்டனர் என்பதை

> **''கன்று காணாது புன்கண்ண செவி சாய்த்து**
> **மன்று நிறை பைதல் கூரப்பலவுடன்**
> **கறவைசீறூர் எல்லியின் சைகி**
> **முதுவாயப் பெண்டின் செது காற்குரம்பை**
> **மடமயிலென்ன வென்னடை மெலிபேதை**
> **தோட்டுணை யாகத் துயிற்றத் துஞ்சாள்**
> **வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கட்**
> **சேக் கோளறையும் தண்ணுமை**
> **கேட்குநள் சொல்லெனக் கழுலும் என்நெஞ்சே''[37]**

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது. கொற்றவையைக் கள்வர்கள் வழிபட்டதையும், அவர்களுக்குக் கொற்றவை வெற்றியைத் தருகின்றமையையும் சுட்டுகின்றது.

நெடுநல்வாடையில் போர்ப்பிரிவு காரணமாக அரசனைப் பிரிந்திருக்கின்ற அரசி கொற்றவையை நோக்கிப் பரவுவதை

**''புலம்பொடு வதியும் நலங்கிளிர் அரிவைக்கு**
**இன்னா அரும்படர் தீர விறல் தந்து**
**இன்னே முழகதில் லம்ம''[38]**

என்ற பாடலடி மூலம் அறிய முடிகிறது இதில் அரசியானவள் தீமையாக இருக்கின்ற ஆற்றுதற்குரிய பிரிவு தீர வேண்டும், அதற்கு அரசன் போர்த்தொழிலில் வெற்றி பெற வேண்டும் என பாலை நில தெய்வமாகிய கொற்றவையிடம் பரவுகின்றாள்.

பிரிந்த தலைவர் மீண்டும் வந்து சேர்ந்து பின், பிரியாது உரைய வேண்டுமென்று கொற்றவையை தலைவி வழிபடுதலை,

**''வீடர் முகை யடுக்கத்து விறல் கெழு சூலிக்கு''[39]**

என்ற குறுந்தொகை அடியின் மூலம் அறியமுடிகிறது என்று உ.வே.சா குறிப்பிட்டுள்ளார்.

போர்க் குறித்துச் சென்ற கணவர், திரும்பி வந்து தங்களுடன் இணைய வேண்டும் என்பதற்காக பெண்டிர் பொன்னால் செய்த தொடி கிடந்த முன் கையில் வலம்புரியை அறுத்துச் செய்யப்பட்ட வளையை இட்டுக் காப்பு நாணைக் கட்டி கொற்றவையை வழிபட்டமையை

**''பொலந்ததொடி தின்றமயிர்வார் முன்கை**
**வலம்புரி வளையொடு கடிகை நூல் யாத்து''[40]**

என்ற பாடலடிகளின் மூலம் அறிய முடிகிறது.

## 1.20 ஆறலைக்கள்வர்கள்

‘ஆறு’ என்றால் ‘வழி’. ‘அலை’ என்றால் ‘அலைக்கழித்தல்’. அதாவது பாலைவழியில் அலைக்கழிப்போரே ‘ஆறலைக்கள்வர்’ எனப்பட்டனர்.

தலைவன் பொருள் தேடிச் செல்லும்வழி பெரும்பாலும் சுரமாக அமைவதால் சுரத்தின் கொடுமை மட்டுமின்றிச் சுரத்தைவிட, கொடுமையான ஆறலைக்கள்வரிடமும் சிக்கிக்கொள்ளும் அபாயமும் நேரிட்டது அதனால் ஆறலைக்கள்வரின் கொடிய செயல்கள் ஏராளமாகக் கூறப்பட்டுள்ளன.

பாலை நிலம் மிகவும் வறண்டு காணப்படுவதால் மக்களின் வாழ்க்கையில் வறுமை இருந்தது. எனவே மக்களில் பலர் கள்வர்களாக இருந்தனர், பாலை நிலத்திற்குரிய தொழில் ‘ஆறலைத்தல்’ என்று இளம்பூரணர் உரை எழுதியுள்ளார். நம்பியகப்பொருள் ‘பகற்சூரையாடல்’ என்று குறிப்பிட்டுள்ளது.

அவர்கள் வழிச்செல்வோரைக் கொன்று, அவர்களது உடமைகளைக் கைக்கொண்டுள்ளனர். ஆனால் இது இவர்களது நிரந்தரத் தொழிலன்று வறுமையின் காரணமாகவே அவர்கள் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர் என்பது பெறப்படுகிறது. சங்க இலக்கியப் பாலைப்பாடல்களில் 42 பாடல்கள் ஆறலைக்கள்வர்கள் பற்றி பேசியுள்ளன. இப்பாடல்களே அவர்களைப் பற்றிய புரிதலுக்குத் துணை நிற்கின்றன.

வளைந்த வில்லையும், கொடிய பார்வையையும் உடைய மறவர்கள் எருதினைக் கொன்று, அதன் தசையினை நெருப்பில் சுட்டெடுத்துப் பேய்களைப் போல தின்றனர். அவ்வூனைத் தின்றதால் நீர் வேட்கை நீங்க, முதிர்ந்த தோப்பிக்கள்ளைக் குடித்து, புலால் நீங்காத கையையும் கழுவாத வாயையும் உடையவர்களாக இருந்தனர் என்பதை

"நிணம் பொதி விழுத்தபடி நெருப்பின் வைத்து எடுத்து
அணங்கு அரு மரபின் பேஎய் போல
விளர்ஊன் தின்ற வேட்கை நீங்க
துகள் அற விளைந்த தோப்பி பருகி
குலாஅ வல்வில் கொடு நோக்கு ஆடவர்
புலாகல்கையர் பூசா வாயர்"[41]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

படைகள் சூழ அரசனே பெரும்படையுடன் வந்தாலும் கள்வர்கள் அஞ்சமாட்டார்கள். அரசனையே எதிர்க்கும் ஆற்றல் பெற்றவர்களாக இருந்தனர் என்பதும் தெரியவருகிறது.

### 1.20.1 கொள்ளையடித்துக் கொலை செய்தல்

கொடுவிள் எயினர் வழிச்செல்வோரிடம் கொள்ளையடித்து அவர்களைக் கொன்று போடுவர் என்பதை

"பொலம் செய் காசின் பொற்பத் தாஅம்
அத்தம் நண்ணி அதர் பார்த்து இருந்த
கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்
ஆறுசெல் மாக்கள் அருநிறத்த எறிந்த
எஃகுஉறு விழுப்புண் கூர்ந்தோர் எய்திய
வளைவாய்ப் பருந்தின் வள்உகிர்ச் சேவல்"[42]

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

கொல்லுதலைச் செய்யும் வேல் கொண்டு மார்பிலே எறிந்தமையால் விழிப்புண்பட்டு இறந்து வீழ்ந்த அவர்தம் ஊனினை உண்ணுதற்கு பருந்தின் சேவல் தன் சுற்றத்தினைக் குரல் கொடுத்து கூப்பிடும் என்ற செய்தியினை அறிய முடிகிறது.

### 1.20.2 கொலை செய்தல்

பொருள் கொண்டு வந்தால் அவற்றைக் கொள்ளையடித்து, பின் கொலை செய்வர், பொருள் கொண்டுவராவிட்டாலும் கொலை செய்வர் கள்வர்கள். பாலை வழியில் ஓலைச்சுருளுடன் சென்ற பார்ப்பானின்

கையில் இருந்த சுருளை, பொன்னென்று கருதி அவனைக் கொன்றனர். பின்பு அருகில் சென்று பார்த்தபொழுது, அப்பார்ப்பான் கந்தல் உடையவனாகவும், தூது செல்பவனாகவும், பொருளற்றவனாகவும் இருந்தது கண்டு, தன் செயலுக்கு பலனின்றி கையொடித்துச் சென்றனர் என்ற செய்தியை அகநானூறு 337-வது பாடலின் வழி அறிய முடிகிறது.

ஆறலைக்கள்வர்கள் செய்யும் கொடுமைகளைக் கண்டு பறவையினங்கள் கூட பறக்காது என்ற செய்தியை கலித்தொகை பாலைக்கலி 6-வது பாடலில் பெறப்படுகிறது.

ஆறலைக்கள்வர்கள் மிகவும் கொடியவர்களாயினும் அவருள்ளும் இரக்கம் உடையவர்கள் இருந்தனர் என்பதை அகம் 109-வது பாடலின் மூலம் அறியமுடிகிறது. பொருளற்ற வழிபோக்கர்களைப் பிடித்துக்கொண்ட ஆறலைக்கள்வர்கள் அவர்களிடம் பொருளில்லை என்பதை அறிந்ததும் அவர்களின் உயிர்க்கும், உடலுக்கும் தீங்கு விளைவிக்காமல் விட்டனர். அவ்வாறு விடுத்த ஆறலைக்கள்வர்களுக்கு அவர்களது தலைவன் யானைத்தந்தமும், புலித்தோலும் தண்டம் தருமாறு தண்டம் விதித்தான் என்ற செய்தியை

**''கைப்பொருள் இல்லை ஆயினும் மெய்க்கொண்டு
இன் உயிர் செகாஅர் விட்டு அகல் தப்பற்குப்
பெருங்களிற்று மருப்பொடு வரி அதள் இறுக்கும்
அறன் இல்வேந்தன்''**[43]

என்ற பாடலின் மூலம் அறிய முடிகிறது.

வலிமை பொருந்திய வில்லையும் அன்பில்லாத வாழ்க்கையையும் கொண்ட ஆறலைக்கள்வர்களின் தலைவன், கள் விற்கும் இடத்தில், கள்ளிற்கு விலையாக யானையின் தந்தங்களைக் கொடுக்க எண்ணி, அவ்விடத்தில் விளையாடித் திரியும் தன் மகனின் தலையை தடவி வீட்டிற்குச் சென்று தந்தங்களை எடுத்து வரும்படி ஏவினான் என்ற செய்தியும் அறிய முடிகிறது.

கள்வர்களின் தலைவனாக இருந்தாலும், அவனிடமே பொருள் இல்லை என்றாலும் கள் கொடுக்க மறுப்பர் என்பதையும் பெற முடிகிறது.

ஆறலைக்கள்வர்கள் நடுகல்லில் தம் அம்புகளைக் கூர் செய்து கொண்டனர் என்பதை அகம் 297 -வது பாடல் குறிப்பிடுகிறது. வெம்மையான பாறையின் மீது அம்பைக் கூர் தீட்டிக்கொண்டனர் என்ற செய்தியை குறுந்தொகை 12-வது பாடலும், இரும்பினால் செய்யப்பட்ட அம்பின் கூர்மையைத் தம் கைவிரல் நகங்களால் ஒலி எழச் செய்து சரி செய்து கொண்டனர் என்ற செய்தியை குறுந்தொகை 16-வது பாடலின் மூலம் நாம் தெரிந்துகொள்ள முடிகிறது.

வழியில் செல்லும் வணிகர்கள் மீது அம்பு எய்து, அவர்களது பொருட்களைப் பறிக்கும் போது, தண்ணுமை ஒலி எழுப்புவர் என்ற செய்தியை நற்றிணை 298வது பாடலின் மூலமும், குறுந்தொகை 390வது பாடலின் மூலமும் நாம் அறிய முடிகிறது.

### 1.20.3 பறவைகளுக்கு இரை

உகாய் மரத்தில் ஏறி வழி வருவோரைப் பார்த்திருப்பர். தம் அம்பு விடும் திறமையை அறிந்து கொள்வதற்கு, வழியில் வரும் புதியவர்களிடம் அணிகலன்கள் ஏதும் இல்லை என்றாலும், அவர்களைக் கொன்று பறவைகளுக்கு இரையாக இட்டுள்ளனர் என்பதை அகம் 375-வது பாடலின் வழி தெரிந்துகொள்ள முடிகிறது.

### 1.20.4 பகிர்ந்து அளித்தல்

கள்வர்களின் உணவு பற்றியும், சில பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. வெள்ளை ஊன் தின்ற மறவர்கள் கழுதைகள் சுமந்து வந்த மூட்டைகளோடு வரும் வணிகர்களைக் கொன்று, வெற்றி பெற்றவராய் தம் குறும்பில் தான் கொள்ளையடித்தப் பொருட்களை அனைவர்க்கும் பகிர்ந்து கொடுத்தனர் என்பதை

''விளர் ஊன் தின்ற வீங்கு சிலை மறவர்
மை படுதிண்தோள் மலிர வாட்டி
பொறை மலி கழுதை நெடு நிரை தழீஇய
திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த
படு புலாக் கமழும் ஞாட்பில் துடி இருத்து
அருங்கலம் தெறுத்த பெரும் புகல் வளத்தர்
வில் கெழு குறும்பில் கோள் முறை பகுக்கும்''[44]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது.

பாலைப் பாடல்களில் சுட்டப் பெற்றுள்ள ஆறலைக்கள்வர்கள் முழுக்க முழுக்க கொள்ளையிடுதலில் மட்டுமே ஈடுபட்டிருக்கவில்லை. விலங்குகளையும் அவர்கள் வேட்டையாடி உள்ளனர். அவர்கள் மான் வேட்டையாடியதை

''அவ்விளிம்பு உரீஇய விசைஅமை நோன்சிலை
செவ்வாய்ப் பகழி செயிர்நோக்கு ஆடவர்
கணை இடக் கழிந்ததன் வீழ்துணை உள்ளி
குறுநெடுந்துணையை மறிபுடை ஆட
புன்கண் கொண்ட திரிமருப்பு இரலை''[45]

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

இச்சான்றுகளை வைத்துப்பார்க்கும் போது, விலங்குகளை வேட்டையாடுவோரே சில நேரங்களில், வறுமையால் வழிச் செல்வோரையும் வேட்டையாடியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

பாலை நிலத்தில் வெப்பத்தினால் உயர்ந்த மரம் உலர்ந்து போனதற்கு கொடிய வேந்தன் குடையின் கீழ் வாழும் உலகு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

''அலவுற்றுக்குடிகூவ ஆறுன்இல் பொருள் வெஃகி
கொலையஞ்சா வினைவராற் கோல் கொடி யவனிழல்
உலகுபோல் உலறிய உயர்மர வெஞ்சுரம்''[46]

என்பதே அவ்வுவமையாகும்.

சுரம் கடந்து செல்பவர்கள் சுரத்தின் வெம்மையை தெய்வத்தின் கோபமெனக் கருதுவர். அவ்வேளைகளில் அடிக்கும் அனல்காற்றை, தெய்வ வருத்தம் என நம்பினர். இவ்வருத்தத்தைப் போக்க சிறிய யாழ் கொண்ட பாணர், நரம்பிசைத்துத் தெய்வசினம் தணிப்பர் என்ற செய்தியை நற்றிணை 189வது பாடலின் வழி புலப்படுகிறது.

பெரிய தூய்மையான வெள்ளோத்திரத்தின் பூக்களை, பூங்கொத்துகளை பாலை நிலத்தில் நடந்து செல்வோர் தலையில் வெப்பம் தாக்காத படி அணிந்து செல்வர் என்பதை ஐங்குறுநூறு 301 வது பாடல் தெளிவுபடுத்துகிறது.

## 1.21 வேடர் பற்றிய செய்திகள்

வேடர்கள் வேட்டுவத் தொழிலைக் கொண்டவர்கள் கல்லாடனார் வேடர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''வேட்டுவத்தொழிலைத் தவிர பிற தொழிலை அறியாதவர்கள்'' என்று குறிப்பிடுகின்றார்.

வேடவர்கள் தலையில் மணம் வீசும் வெண்கடம்பு மலர்களைச் சூடினர் என்றும், அந்நறுமணம் பாலை நிலம் வரை பரவியிருந்தது என்றும் அவர் குறிப்பிடுவார்.

இவ்வேடர்கள் பெண்யானையோடு மகிழ்ந்திருக்கும் ஆண் கன்றுகளைக் கவர்ந்து சென்று கள்ளிற்கு விலையாக கள் விற்கும் இடத்தில் வாயிலில் கட்டுவர். இவற்றைக் கட்டுவதற்கு வெண்கடம்ப மரத்தின் கொம்பை ஒடித்து, அதனின்ற நாரைப் பிரித்தெடுத்துக் கொண்டு வருவர். பின்னர் யானைக்கன்றைக் கட்டி வைத்து விட்டு, கள்ளைப்பருகிச் செல்வர்.

வேட்டுவர்கள் சிவந்த கொம்புடைய காட்டுப்பசுவின் இறைச்சியையும், யானைத்தந்தத்தையும் எடுத்துக்கொண்டு தாம் வாங்கும் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பர் என்பதை பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. இதனை,

"செங்கோட்டு ஆமான் ஊனொடுகாட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்"[47]

என்ற பாடல் அடிமூலம் அறியமுடிகிறது.

வேடர்கள் பண்டமாற்று முறை செய்யும் அளவிற்கு பசு இறைச்சி பயன்பட்டிருக்கிறது என்பதும், பசு இறைச்சியை வேட்டுவர்கள் மட்டுமின்றி பிற மக்களும் பயன்படுத்தினர் என்பது தெரிகிறது.

கள்ளுக்கு மாற்றாக யானைக்குட்டியைக் கொடுத்தனர் என்பதால், அவ்வேடர்கள் நிறைய கள்ளை விரும்பிப் பருகுவர் என்பதை உணரமுடிகிறது.

கள்ளுக்குப் பதிலாக நெல்லும் பண்டமாற்றுமுறையில் பயன்பட்டது என்பது அகம் 61-வது பாடலின் மூலம் அறிய முடிகிறது.

பாலை நிலத்தில் ஆறலைக்கள்வர், மறைந்து நின்று வழிப் போக்கரைத் துன்புறுத்தலும், கொலை புரிதலும், கொலையைக் கண்டு மகிழ்தலும் வழக்கம். இதனால் தமிழ் மன்னர் எயினருள் தக்கவரைப் போர் வீரராக்கி நாடு காவற்பணியில் அமர்த்தினர். பாலைவழிகளில் குடிமக்கட்குத் தீங்கு நேராமல் பார்ப்பதே அவர்தம் தலையாயக்கடமையாகும்.

பாலை வழிகளைக் காவல் காத்தவர் இளைஞர் வில்லேந்திய கையினர் தழைவிரவின கண்ணியை அணிந்தனர் கடிய சொற்களை உடையவர், வலிமை மிகுந்தவர் என்பன போன்ற செய்திகளை மலைபடுகடாம் 310-314 பாடலின் வழி அறிய முடிகிறது.

## 1.22 பாலை மக்கள் வாழிடம்

பாலை நிலத்தில் வாழும் மக்கள் மறவர், எயினர் எனப்படுவர். இவர்கள் வாழும் ஊர் 'குறும்பு' எனப்படும். 'கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்' எனக் கற்கள் நிரம்பிய பகுதியில் குறும்பு அமைந்திருந்தமையை

அறிய முடிகிறது. இவர்தம் குடிசை ஈந்தின் இலையால் வேயப்பட்டிருக்கும், இதனால் இவை முள்ளம்பன்றியின் முதுகுபோல் காட்சி தரும். இதனால் அணிலும், எலியும் இதனை நெருங்குவதில்லை. நாணைக் கோர்த்து அமைத்த வில்லும் அம்பும், இவ்வீடுகளில் இருக்கும். அம்புக்கட்டும் துடியும், துங்கும், பந்தரும் இங்குண்டு, நாய்களைக் கட்டி வைத்திருப்பர் இதனால் அவ்வீடுகள் எளிதில் பிறர் நெருங்க இயலாதபடி இருக்கும். ஊகம் புல்லால் வேய்ந்த உயர்ந்த மதிலும் இங்கு காணப்படும். இவர் வாழும் ஊரைச் சுற்றிலும் முள்ளையுடைய வாழ்வேலியும், காவற்காடும் அமைந்திருக்கும். ஊரின் வாசலில் கூரிய கழுக்களை வரிசையாக வைத்திருப்பர் இதனை,

''நிள் கரை இலவத்து அலங்குசினை பயந்த
பூளைஅம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற அணிலோடு கருப்பை ஆடாது
யாற்று அறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேற்றலை அன்ன வைந்நுதி நெடுந்தேகர்
ஈத்துஇலை வேய்ந்த யெப்புறக் குரம்பை''[48]

என்பதை பெரும்பாணாற்றுப்படை வரிகளில் அறிந்து கொள்ள முடிகிறது.

## 1.23 பாலை நிலத்து மகளிர்

பாலை நில மகளிராகிய எயிற்றியர் கரம்புகளில், எறும்பு சேர்த்து வைத்திருக்கும் புல்லரிசியை எடுத்து வருவர். மகவு ஈன்ற மகளிர் மான் தோல் படுக்கைகளில் இல்லில் இருக்க, ஏனையோர் கரம்பை தோண்டிக் கிளைப்பதற்குரிய இரும்பை தலையில் கொண்ட கருவியுடன் செல்வர். புல்லரிசி கிடைக்குமிடம் அறிந்து, கரம்பைக் கிளைத்து உள்ளிருக்கும் புல்லரிசிகளைச் சுமந்து வருவர். இதனை கொண்டு வந்து நிலவுரலில் பெய்து உலக்கையால் குற்றுவர். ஆழ்ந்த கிணற்றில் ஊறும் நீரை முகர்ந்து வருவர். பழைய பானையிலே வார்த்துச் சோறாக்குவர். வாடிய ஊனாகிய உப்புக்கண்டமும் சமைப்பர். இந்த உணவை விருந்தினர்க்கு தேக்கிலையில் வைத்துத் தருவர்.

பாலை நில மக்கள் நினைத்துப் பார்க்கவே முடியாத வறுமையில் அவர்கள் உழன்றுள்ளனர். பொதுவாக உணவுப்பொருட்களை எதிர் காலத்திற்குச் சேமித்து வைத்துக்கொள்வது என்பது, மக்களின் இயல்பாக உள்ளது. ஆனால் பாலை நில மகளோ பருத்திக் கொட்டைகளை எதிர்கால உணவாகச் சேமிக்கிறாள், அதுவும் அவளுக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை அங்கு பறவைகளும் போட்டியிடுகின்றன என்பதை,

> "......................... **கோழிவை பருத்திப்**
> **பொதிவயிற் நிளங்காய் பேடையூட்டிப்**
> **போகில் பிளந்திட்ட பொங்கல் வெண்தாழ்**
> **நல்கூர் பெண்டிர் யல்கற் கூட்டுங்**
> **கலங்குமுனைச் சீறூர்"**[49]

என்ற பாடலடி மூலம் அறிய முடிகிறது.

பாலை நில மக்களின் வறுமை நிலையை, அகநானூறு சுட்டுகிறது. பறவைகள் உண்டு எஞ்சிய பருத்திக் கொட்டையையே, பாலைநிலப் பெண் சேகரித்து வைக்கிறாள் என்பது அவர்களுடைய வறுமை நிலையைக் காட்டுகிறது.

பாலை நில மக்கள் செல்வச் செழிப்பால் திளைத்தவர்கள் அல்ல வறுமையில் வாடியவர்கள், சேற்று நீரை உண்டார்கள். உண்பதற்காக பருத்தி விதையை சேகரித்து வைத்திருந்தார்கள். இருப்பினும் அவர்கள் விருந்தினரை நன்கு போற்றியுள்ளனர் என்பது பெறப்படுகிறது.

கூரிய நல்ல கம்பினையும், கொடிய வில்லினையும் உடைய வேடர்கள் வழிச்செல்வோர்க்கு தசைகளையும், கிழங்குகளையும் தந்து உண்ணுமாறு வற்புறுத்துவர் என்பதை மலைபடுகடாம். 422-வது பாடலடி உணர்த்துகிறது.

எயினர் குலப்பெண் புளிச்சோற்றை ஆமான் சூட்டிறைச்சியுடன் விருந்தினர்க்குக் கொடுத்தாள் என்பதை சிறுபாணாற்றுப்படை 175-வது பாடலடி மூலம் உணர்த்துகிறது.

எயினர் வறுமை தெளிவாகப் புலப்படுகிறது எந்த தானியமும் கிடைக்காத நிலையில், புல்லரிசியை எடுத்தனர். தண்ணீர் மிகக் குறைந்துள்ள கிணற்றில் உவர்நீர் எடுக்கப்பட்டது என்பதும் பெறப்படுகிறது.

பாலைப் பாடல்களில் எல்லை மீறிய கோடையின் வெப்பம் வறட்சி, விலங்குகளின் தொல்லை, கொடிய ஆறலைக்கள்வர்கள், உணவு தங்குமிடம் ஆகியவற்றின் அருமைப்பாடு, நெடுந்தொலைவு, வழியெங்கும் குழிகள், தடைகள் என்பனவற்றின் வருணனைக் காணப்படுகிறது.

துன்பங்களையும் கவலைகளையும் எடுத்துரைக்க வறண்ட வழிகளைக் கொண்ட, பாலை நிலத்தின் வருணனையே பொருத்தமாக உள்ளது.

பாலைத்திணையில், காதலர் தம் பிரிவைப் புனைவதன் வழி அவர்களிடையே நிலவும் அன்பின் நெருக்கத்தை மிகுதியாகக் காட்ட முடியும் என்ற நிலையிலேயே, பாலைப் பாடல்கள் மிகுதியாகப் பாடப்பட்டுள்ளன.

போர்ச்செயல், பகற்சூரையாடல், வன்புறை, பகற்குறி, அறத்தொடு நிற்றல், செலவழுங்குதல், ஒருவழித்தணத்தல், வரைவிடைவைத்துப் பொருள் வயிற்பிரிதல், உடன்போக்கு, கற்பொடு புணர்ந்த கௌவை என்று பல துறைகளைக் கொண்ட திணையாக பாலைத் திணை அமைகிறது.

தொல்காப்பியர் ஒட்டகம் பற்றி மரபியலில் (18,53) குறித்துள்ளார். ஒட்டகம் குறிஞ்சி நில, முல்லை நில விலங்கு அன்று நிலைத்த பாலைக்கே உரிய விலங்கு. அத்தகு விலங்கைப்பற்றி தொல்காப்பியர் குறித்தமை ஆய்தற்குரியது.

## 1.24 தொகுப்புரை

1. பாலைத்திணையை தொல்காப்பியர் நேரடியாகச் சுட்டாமல் 'நடுவண் ஐந்திணை' என்றே குறிப்பிட்டுள்ளார்.

2. முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் மழையின்மையால் திரிந்து தத்தமது நிலையை இழந்து, பாலையாக மாறும் என்று சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. சிறுபாணாற்றுப்படையிலும், நம்மாழ்வார் பாடலிலும் இதே கருத்தே காணப்படுகிறது.

3. பாலைத்திணைக்குரிய பெரும்பொழுது இளவேனில், முதுவேனில், பின்பனி. சிறுபொழுது நண்பகல், உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் ஆகும்.

4. 'செம்புலம்' என்பது பாலை நிலத்தையே குறிக்கும்.

5. பாலைத்திணையிலேயே வாழ்வியல் உண்மைகள் அதிகமாகக் காணப்படுகின்றன.

6. பாலை நிலத்தின் வெம்மை 'சுரம்' எனப்படும் சுரத்தில் 'கானல்நீர்' காணப்படும்.

7. பாலை நிலத்தின் வெம்மையை பெரும்பாலான பாடல்கள் விலங்குகளைச் சுட்டிக்காட்டியும், பறவைகளைச் சுட்டிக்காட்டியும், இயற்கைச் சீரழிவைச் சுட்டிக் காட்டியுமே விளக்கியுள்ளன.

8. வெம்மையால் உருவானது மட்டும் பாலை நிலமாகக் கருதப்படவில்லை. ஒன்றுக்கும் உதவாத களர்நிலங்களும் பாலை என்றே அழைக்கப்பட்டன.

9. பிணங்களை எரிக்கும் இடம், போரால் பாழ்ப்பட்ட நிலம், பகைவர்களால் தீயிட்டுக் கொளுத்தப்பட்ட நிலப் பகுதிகளும் பாலை என்றே பெயர் பெறுகிறது.

10. கோல் கோடிய மன்னனின் செங்கோலாட்சிக்கு பாலை நிலமே உவமையாகக் கூறப்பட்டுள்ளன.

11. பாலை நில தெய்வம் கொற்றவை.

12. பாலை நிலத்தில் ஆறலைக்கள்வர்கள் வறுமையின் காரணமாக கொள்ளையடித்து கொலை செய்வர் கொன்றவர்களை பறவைகளுக்கு இரையாக்குவர் வேட்டையாடுதலும் அவர்கள் தொழில்களாகும்.

13. பாலை நிலத்தில் வேடவர்களும் இருந்தனர்.

# அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணை இயல், நூ. 16
2. சிலப்பதிகாரம் - காடுகாண்காதை 61-62
3. சிறுபாணாற்றுப்படை 9-11
4. நம்மாழ்வார் திருவிருத்தம் 26
5. பத்துப்பாட்டு ஆராய்ச்சி - மா. ராசமாணிக்கணார் - ப.30
6. புலவர் குழந்தை = தொல்காப்பியர் காலத்தமிழர் - ப. 63
7. கலித்தொகை - பாலைக்கலி - 32
8. மேலது - 33
9. மேலது - 34
10. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணை இயல், நூ.9
11. அற்றை நாட்காதலும் வீரமும் - க.ப. அறவாணன் - ப. 44
12. பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை - மு.வ. - ப.120
13. குறுந்தொகை - 40
14. இலக்கிய இலக்கணம் புரிதல் - செல்வராசு - ப. 46
15. அற்றைநாட் காதலும் வீரமும் - க.ப. அறவாணன் - ப. 46
16. குறுந்தொகை - 215
17. நற்றிணை -14
18. மேலது - 18
19. மேலது - 241
20. அகநானூறு - 47
21, மேலது 327
22. கலித்தொகை 12
23. அகநானூறு - 1
24. மேலது - 65
25. நற்றிணை - 43
26. மேலது - 302
27. மேலது - 177

28. அகநானூறு - 371
29. புறநானூறு - 362
30. அகநானூறு - 247
31. மேலது - 187
32. கலித்தொகை - பாலைக்கலி -8
33. மேலது - 5
34. அகநானூறு - 5
35. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணையியல் - நூ 34
36. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர் உரை
37. அகநானூறு - 63
38. நெடுநல்வாடை -166-168
39. குறுந்தொகை - 218
40. நெடுநல்வாடை - 141-142
41. அகநானூறு - 265
42. மேலது - 363
43. மேலது - 109
44. மேலது - 89
45. மேலது - 371
46. கலித்தொகை - பாலைக்கலி - 10
47. பதிற்றுப்பத்து 30:10
48. பெரும்பாணாற்றுப்படை 83-88
49. அகநானூறு - 129

# பிரிவின் வகைகள்

2.0 முன்னுரை

2.1 தொல்காப்பியத்தில் பிரிவின் வகைகள்

2.2 நம்பியகப் பொருள் காட்டும் பிரிவின் வகைகள்

2.3 இறையனார் அகப்பொருள் காட்டும் பிரிவின் வகைகள்

2.4 மாறனகப் பொருள் காட்டும் பிரிவின் வகைகள்

2.4.1 ஓதற்பிரிவு

2.4.2 பகைவயிற்பிரிவு

2.4.3 தூதுப்பிரிவு

2.4.4 காவற்பிரிவு

2.4.5 பரத்தையர் பிரிவு

2.4.6 பொருள் வயிற்பிரிவு

2.4.6.1 பொருள் பிரிவின் வகைகள்

2.5 பொதுநலப் பிரிவு

2.6 துறவு மேற்கொண்ட வாழ்க்கை

2.7 இல்லறம்

2.7.1 துறவறம்

2.8 களவொழுக்கத்தின் கண் நிகழும் பிரிவு

2.8.1 ஒருவழித்தணத்தல்

2.8.2 வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல்

2.9 பிரிதலின் வேறுவகை

2.9.1 உடன்போக்கு

2.9.2 உடன்போக்கும் திருமணமும்

2.9.3 உடன்போக்கைப் பாலைத்திணையில் வைத்ததன் பொருத்தம்

2.10 தொகுப்புரை

# பிரிவின் வகைகள்

## 2.0 முன்னுரை

காதல் வாழ்க்கை உடையார்க்குக் கடமையும் உண்டு. எனவே அகவாழ்க்கையில், காதல் தலைவன் தலைவியர் எப்பொழுதும் சேர்ந்திருத்தலாகக் கூறப்படுதல் இல்லை. கடமை ஆற்றுவதற்காகத் தலைவன் தலைவியை விட்டு, பிரிவும் நிகழ்த்துவான். புணர்ச்சி இல்லாது பிரிதலும் இல்லை.

பிரிவு என்பது ஏதாவது ஒரு செயல்வினை நிமித்தத்தின் பொருட்டு தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து அயலிடம் செல்வதாகும். பிரிவின் வகைகளைப் பற்றி ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 2.1 தொல்காப்பியத்தில் பிரிவின் வகைகள்

தொல்காப்பியத்தில் சில பிரிவுகள் நேரடியாகவும், சில பிரிவுகள் குறிப்பாகவும் கூறப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து பிரிவின் வகைகள் ஆறு என்பது பெறப்படுகிறது.

''ஓதல் பகையே தூது இவை பிரிவே''[1]

என்ற நூற்பாவின் படியும், குறிப்பாக பிரிவு ஆறு காரணங்களுக்காக நடை பெறும் என்பதும்

1. ஓதல் பிரிவு
2. பகைப்பிரிவு
3. தூதுப் பிரிவு
4. காவற் பிரிவு
5. பொருள் வயிற்பிரிவு
6. பரத்தையர் பிரிவு

என்பது பெறப்படுகிறது.

ஓதற் பிரிவு, பகைவயிற்பிரிவு, தூதுப்பிரிவு, பரத்தையர் பிரிவு என்ற நான்கும் கற்புகாலத்து நிகழும். வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிவு என்பது களவு காலத்து நிகழும், காவற்பிரிவு, பொருட்வயிற் பிரிவு களவு, கற்பு இருவகைக் காலத்தும் நிகழும்.

## 2.2 நம்பியகப் பொருள் காட்டும் பிரிவின் வகைகள்

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வதற்காக ஆறு நிமித்தங்கள் கூறப்பட்டுள்ளன.

> ''பரத்தையிற் பிரிதல் ஓதற்குப்படர்தல்
> அருள்தகு காவலொடு தூதிற்கு அகல்தல்
> உதவிக்கு ஏகல் நிதியிற்கு இகத்தல் என்று
> உரைபெறு கற்பின் பிரிவு அறு வகைத்தே'' [2]

என்ற நூற்பாவின் படி

1. பரத்தையிற் பிரிதல்
2. ஓதல் பிரிவு
3. நாடு காத்தல் பிரிவு
4. தூதுப்பிரிவு
5. பிறர்க்கு உதவிபுரிய பிரியும் பிரிவு
6. பொருள் ஈட்டும் பிரிவு

என்பது பெறப்படுகிறது.

## 2.3 இறையனார் அகப்பொருள் காட்டும் பிரிவின் வகைகள்

பிரிவின் வகைகளை இறையனார் அகப்பொருளும் ஆறு என்றே கூறுகிறது.

> ''ஓதல் காவல் பகைதணி வினையே
> வேந்தர்க்குற்றுழி பொருட்பிணி பரத்தை என்று
> ஆங்கவாறே அவ்வயிற்பிரிவே'' [3]

என்ற நூற்பாவின்படி

1. ஓதற்பிரிவு
2. காவற் பிரிவு
3. பகை தணிவினைப்பிரிவு
4. வேந்தர்க்குற்றுழிப்பிரிவு
5. பொருட்பிணி பிரிவு
6. பரத்தையர்பிரிவு

என்பதும் பெறப்படுகிறது.

## 2.4 மாறனகப் பொருள் காட்டும் பிரிவின் வகைகள்

பிரிவின் வகைகளை மாறனகப் பொருளும் ஆறு என்றே குறிப்பிடுகிறது.

''பரத்தையிற் துறத்தல் பகைவயிற்படர்தல்
புரத்தலி னிகத்தல் பொருள் வயிற் றணத்த
லொருதலை தூதிற் கொருப்படுத் தியதுக்
லிருநிதிக் கல்விக் கேருதலுடனே
பெருமிதக் கற்பின் பிரிவது வகைத்தே''[4]

என்ற நூற்பாவின் படி

1. பரத்தையர் பிரிவு
2. பகைவயிற்பிரிவு
3. பொருள் வயிற்பிரிவு
4. தூதுப்பிரிவு
5. கல்விப் பிரிவு
6. காவல் பிரிவு

என்ற ஆறு பிரிவுகளை உடையது என்பது அறியலாகிறது.

புலவர் குழந்தை அவர்கள் தனது 'தொல்காப்பியர் காலத் தமிழர்' என்ற நூலில், பிரிவின் வகைகளை ஒன்பது என்று குறிப்பிட்டுள்ளார்.

1. ஓதற் பிரிவு
2. பகைப்பிரிவு
3. துணைப்பிரிவு
4. தூதுப் பிரிவு
5. காவற்பிரிவு
6. பொருட் பிரிவு
7. வரைவிடை வைத்துப் பொருட் பிரிவு
8. இட்டுப் பிரிவு
9. பரத்தையர் பிரிவு

இதில் ஓதற்பிரிவு, பகைப்பிரிவு, தூதிற்பிரிவு, பரத்தையர் பிரிவு என்னும் நான்கும் கற்புக் காலத்து நிகழும். அதாவது இல்லறம் நடத்தும் போது நிகழும். பரத்தையர் பிரிவும், மருத ஒழுக்கமாகிய ஊடலைச் சிறப்பிக்க நிகழும் பிரிவாகும். வரைவிடைப் பிரிவும், இட்டுப் பிரிவும் களவுக்காலத்து நிகழும்.

துணைப்பிரிவும், காவற்பிரிவும், பொருட்பிரிவும் களவு, கற்பு ஆகிய இரு காலத்தும் நிகழும்.

எனவே துணைப்பிரிவு, காவற்பிரிவு, பொருட்பிரிவு, வரைவிடைப்பிரிவு, இட்டுப்பிரிவு ஆகிய ஐந்தும் களவுக் காலத்தும், வடைவிடைப் பிரிவுமல்லாத ஏனை ஏழு பிரிவுகளும் கற்பு காலத்தும் நிகழும் என்பது பெறப்படுகிறது.

7. வரைவிடைப் பிரிவு }
8. இட்டுப் பிரிவு } களவிற்கே உரியவை

1. ஓதற் பிரிவு
2. பகைப்பிரிவு
4. தூதிற் பிரிவு
9. பரத்தையிற் பிரிவு

} கற்பிற்கே உரியவை

3. துணைப்பிரிவு
5. காவற்பிரிவு
6. பொருட்பிரிவு

} களவு, கற்பு இரண்டிற்கும் உரியவை

வரைவிடைப்பிரிவு பொருட்பிரிவிலும், துணைப்பிரிவு பகைப்பிரிவிலும் அடங்கும் தலைவன் அரசனும், சிற்றரசனுமானால் களவில் காவற்பிரிவு நிகழும். துணைப்பிரிவும், பொருட்பிரிவும் எல்லோர்க்கும் நிகழும். களவொழுக்கமொழுகும் போது, கைச்செலவுக்கு வேண்டிய பொருளுக்காகத் தலைவன் தலைவியைப் பிரிந்து தன்னூர்க்குச் செல்வதும், பொருளுக்காகப் பிரிவதால் பொருட்பிரிவெனப்படும். இட்டுப்பிரிவில் அடங்காது, வாணிகத்தின் பொருட்டு உள்நாட்டில் பிரிதலும் பொருட்பிரிவேயாம்.

### 2.4.1 ஓதற்பிரிவு

ஓதற்பிரிதலாவது தன் நாட்டகத்து வழங்காது, பிற நாட்டகத்து வழங்கும் நூல் உள்ளது. அவற்றைக் கற்றல் வேண்டி தலைவன் தலைவியை விட்டுப் பிரிவது ஆகும்.

**''வேண்டிய கல்வி யாண்டு மூன்றிறவாது''**[5]

ஓதற்பிரிவின் கால அளவு, மூன்று ஆண்டைக் கடந்து செல்லக்கூடாது என தொல்காப்பியம் கூறுகிறது. வெளிநாடுகட்குக் கடல் கடந்து சென்று, அந்நாடுகளைச் சுற்றிப்பார்த்து, அந்நாட்டு நாகரிகச் சிறப்பினைத் தெரிந்து கொண்டு வரவேண்டுமாகையால், ஓதற்பிரிவுக்கு ஓராண்டுக்கு மேல் வேண்டியதாயிற்று.

செல்வமும் அறிழுள்ள உயர்ந்தோரே, ஓதல், தூது என்னும் இரு பிரிவுக்கும் உரியவராவர், உயர்ந்தோர் என்பது பெரியோர் என்பது போல பெயர் பெறும், அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்பர்.

கல்விக்குரிய பிரிவு இருவகையோரினும் உயர்ந்தோராகிய வணிகர்க்கும் உரியது என்பதை

**''உயர்ந்தோர்க்குரிய ஓத்தினான''**[6]

என்ற நூற்பாவால் அறியமுடிகிது.

### 2.4.2 பகைவயிற் பிரிவு

அரசு என்னும் பெயருக்கு முரணாக பொது நன்மையின் மாறுபட்டு நாட்டின்அமைதி குலைய, மக்கள் அச்சம் கொள்ளும்படியாகப் போர் தொடங்கினாரை அடக்கப்பிரிதல் 'பகைத்தணிவினைப்பிரிவு' என்று வழங்கப்படுகிறது.

தன்மீது பகைக்கொண்டு போரிட வந்தவனோடு, தன் நாட்டின் மீது படையெடுத்து வந்தவனோடு தான் சென்று போரிடுவதன்றி, மன்னர் இருவர் தங்களுக்குள் பகைக்கொண்டு போர்த் தொடங்கும்போது அவர்களில் ஒருவனுக்கு, படைத்துணையைச் செல்லுதல் 'வேந்தனுக்குற்றுளிப்பிரிவு' அல்லது 'துணைவயிற்பிரிவு' என்று வழங்கப்படுகிறது. இத்துணைப்பிரிவும் பகைப்பிரிவேயாகும்.

### 2.4.3 தூதுப்பிரிவு

பகைக்கொண்ட இருவரை அப்பகை நீக்கி ஒன்று கூட்டப்பிரிதலாகும். இது 'சந்து செய்தல்' என்றும் பொருள்படும்.

இதனால் பழந்தமிழரசர்கள் போர் வெற்றியே புகழ் வெற்றியெனக் கருதாமல், போர் உண்டாகாமல் எவ்வளவு தடுக்க முடியுமோ, அவ்வளவு தடுத்து, நாட்டில் அமைதி நிலவச் செய்தனர் என்பது தெரிகிறது.

தூது செல்வது என்பது அரசர்க்கு, அந்தணர்க்கு பெரும்பான்மையும், வணிகர், வேளாளர்க்கு சிறுபான்மையும் உரித்தாகும்.

ஓதல், பகை, தூது என்னும் இம்மூன்று பிரிவும் நாட்டு மக்களின் நலவுரிமையைப் பாதுகாக்கும் பொதுநலப்பிரிவாகும். வெளிநாட்டிற்குச் சென்று கற்றறிந்தவற்றைத் தன் நாட்டிற்குப் பயன்படச் செய்தலின் ஓதற்பிரிவும் பொதுநலத் தொண்டாகும்.

### 2.4.4 காவற்பிரிவு

காவற்பிரிவு என்பது வேந்தனுக்காகத் தன் பாதுகாத்தற்பொருட்டு பிரியும் பிரிவாகும்.

ஒரு நாட்டில் எப்போதும் நல்லவரும், பொல்லரும், இருப்பது இயல்பே. இவ்வேறுபாட்டால் நாட்டு மக்களிடையே உண்டாகும் சீர்கேட்டைத் திருத்தியமைத்து, பின்னர் அத்தகைய சீர்கேடு உண்டாகாமலும், அரசியல் அலுவலர்களால் நாட்டு மக்களுக்கு இடையூறு உண்டாகாமலும் காத்தற் பொருட்டும், தன்னால் ஏற்படுத்தப்பட்டுள்ள வரியை ஒழுங்காக வாங்குதற் பொருட்டும், அரசர்க்குப் பிரிவு ஏற்படும். இவை காவற்பிரிவும் பொருட்பிரிவும் என்பதை

**''மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய**
**முல்லை முதலாச் சொல்லிய முறையால்**
**பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்**
**இழைத்த ஒண் பொருள் முடியவும் பிரிவே''**[7]

என்ற நூற்பா மூலம் அறியமுடிகிறது.

**''வேந்துறு தொழிலேயாண்டினது அகமே''**[8]

என்ற நூற்பா அரசனுக்காக பகைவயிற்பிரிவு, தூதுப்பிரிவு போன்றன ஓர் ஆண்டிற்கு உட்பட்டே நிகழும் என்பதைத் தெளிவாக்குகின்றன.

காவற்பிரிவை நம்பியகப்பொருள் இருவகையாக எடுத்துக் கூறுகிறது. அவை

1. நாடு காவல்
2. அறங்காவல்

என்பனவாகும். நாடுகாவல் என்பது பகைவரிடமிருந்து தம் நாட்டை காப்பது ஆகும்.

அறங்காவலில் தெய்வத்தை வழிபடல், விழா எடுத்தல் போன்றவை நிகழும். இருப்பினும் அறங்காவல் என்பது காவற்பிரிவின் வகையாகும். தெய்வத்தை வழிபடச் செய்வதற்கு, தலைவன் தலைவியை விடுத்து பிரிந்து சென்றுள்ளான் என யாதொரு பாடலும் சங்க இலக்கியங்களில் இல்லை.

இளம்பூரணர் தேவர்பிரிவிற்குச் சான்று காட்டும் பாடலும், பகைவயிற் பிரிவிலேயே அடங்குகிறது.

பாலைநிலம் பிரிவு என்ற உரிப்பொருளை, உள்ளடக்கியதால் பிரிவு பற்றிய நூற்பாக்கள் தொடர்ச்சியாக வருவதை வைத்து, பிரிவு வகைகளுள் தேவர்பிரிவையும் சேர்த்துள்ளார் எனலாம்.

தேவர்பிரிவு என்பதே இல்லை. இதற்கு தலைமக்கள் பிரிவு உண்டு என்ற கருத்து ஏற்புடையதாகத் தோன்றவில்லை.

### 2.4.5 பரத்தையர் பிரிவு

தலைவனுக்குக் கூறப்படும் பிரிவுகளில் ஒன்று பரத்தையர் பிரிவாகும். பாலியல் உணர்ச்சி காரணமாகவும், இயல்பூக்கம் காரணமாகவும் சிலர் தம் மனைவியைத்தவிர, பிறபெண்களிடத்தும் இன்பம் துய்த்தனர். தலைவனுக்கு ஆடல் பாடல்களில் அதிக ஈடுபாடு உண்டு. அதன் காரணமாகவும், பரத்தையரிடம் செல்வான்.

"அயலோ ராயினும் அகற்சி மேற்றே"[9]

சேரியினும், சுரத்தினும் மட்டுமின்றி அயலோராயினும், ஓர் ஊரின் கண்ணும் பிரிவிலேயே வரும். எனவே ஓர் ஊரகத்து மனையியற்கண்ணும் பரத்தையர் பிரிவு ஏற்படும்.

பரத்தையர் காரணமாக எழும் கூற்றை, அகத்திணையில் தலைவன் கூற்று தருகிறது.

"பரத்தையின் அகற்சியின் பிரிந்தோள்குறுகி
இரத்தலும் தெளித்தலும் என இருவகையோடு
உரைத்திற நாட்டம் கிழவோன் மேன"[10]

இவ்வாறு காமக்கிழத்தி, பரத்தை ஆகியோர்களால் ஏற்படும் பிரிவும் இடம் பெறுகின்றமையால் காமம் தொடர்பான பிரிவும் உண்டு என்பது பெறப்படுகிறது.

மேற்கூறிய ஓதல் பிரிவு, பகைப்பிரிவு, தூதுப்பிரிவு, பொருள் ஈட்டல் பிரிவு போன்ற பிரிவுகளால் தலைமகனுக்குப் பெருமை. ஆனால் காமக்கிழத்தி, பரத்தையர் தொடர்பான பிரிவுகளால் தலைமகனுக்கு சிறுமையே. பரத்தையர் பிரிதல் நானிலத்தார்க்கு உரியதாகும். அதற்கு நிலத்திரிபு இல்லை என்று அறிவுடையோர் கூறுவர். பரத்தையர் பிரிவுக்குக் காலவரையறைக் கூறப்படவில்லை.

### 2.4.6 பொருள்வயிற்பிரிவு

பொருள் தேட வேண்டும் என்ற எண்ணத்தின் காரணமாகப் பிரியும் பிரிவு பொருள்வயிற் பிரிவாகும்.

தன் பெற்றோர் ஈட்டிய பொருளும், குடிவழியாகப் பெற்ற செல்வமும் ஏராளமாக இருந்தாலும், அவற்றை அனுபவிப்பது ஆண்மைக்கு இழுக்காகும் என்று கருதியும், தன்னுடைய சொந்த முயற்சியால் பொருள் ஈட்டிக் கொண்டு வந்து, வாழ்க்கை நடத்த வேண்டும்

என்று எண்ணியும், தலைவன் தலைவியை விட்டுப் பிரிவான். திருமணத்திற்குப் பிறகு கவலையின்றி இல்வாழ்க்கை நிகழ்த்துவதற்கும், அறம் செய்வதற்கும், பிறரிடம் சென்று இரவாது இருத்தற்கும், இல்லை என்று கூறாமல் காத்தற்கும் சுற்றம் பேணுதற்கும் பொருள் தேவை. அது மட்டுமல்லாமல் 'பொருள் இல்லாத வாழ்க்கை' ஒரு 'பொருளில்லா வாழ்க்கை' ஆகும். எனவே தலைவன் பொருள்வயிற்பிரிவை மேற்கொண்டான்.

வாழ்க்கைக்குப் பொருள் தேவை என்பதை, பல சங்க இலக்கியப்பாடல்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன அவற்றுள் சில

**''இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு''[11]**

**''ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்''[12]**

**''அறன் கடைப்படாஅ வாழ்க்கையும் என்றும்**
**பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்**
**பொருளின் ஆகும்''[13]**

**''இல்லென இரந்தோர்க் கொன்றீயாமை இழிவு''[14]**

**''இரப்போர்க்குக் கொடுக்க முடியாத நாட்களும், கொடுப்போர்க்கு**
**இரப்போர் அகப்படாத நாட்களும் துன்பம் தரும்''[15]**

என்று வருகின்ற சங்க இலக்கிய வரிகளும், அதன் செய்திகளும் பொருளின் தேவையையும், பொருளில்லா வாழ்க்கையின் இளிவையும் நன்கு தெளிவுபடுத்துகிறது.

**''உள்ளது சிதைப்போர் ஊர் எனப்படார் ''[16]**

ஆதலால், உள்ளாரும் இல்லாரும் ஆகிய தலைவர் எல்லோரும் பிரிவர் என்பதையும் காணமுடிகிறது.

தலைவியைவிட வறியவர்க்கு ஒன்று ஈதலேபெரிது என்று எண்ணும் தலைவனின் உயரிய சிந்தனையை,

''இவளினும் சிறந்தன்று ஈதல் நமக்கு''[17]

என்ற அடிகளிலிருந்து நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

ஒருவனும் ஒருத்தியும் இணைந்து வாழ்ந்து தம் மக்களைப் பெற்று வளர்த்தும், சுற்றத்தார்க்கு உதவியளித்தும், விருந்தோம்பியும் இயற்றி வாழும் இல்லமே நல்ல இல்லம் ஆகும்.

''தம்மில் இருந்து தமது பார்த்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு''[18]

இந்த அழகிய மாநிறமுடைய பெண்ணை நான் தழுவிப் பெறும் இன்பமானது, தமக்குரிய இல்லத்தில் வாழ்ந்து கொண்டு, தாம் உழைத்து ஈட்டிய பொருள்களை இல்லாதவர்களுக்கு பங்கிட்டு கொடுத்து, அவர்களோடு சேர்ந்து உண்ணும் போது பெறும் இன்பம் போன்றதாக உள்ளது என்கிறார்.

''தம் இல் தமது உண்டன்ன சினை தோறும்
தீம்பழம் தூங்கும் பலவின்
ஓங்கும் மலை நாடன்''[19]

என்று குறுந்தொகைப் பாடலும் இக்கருத்தையே வலியுறுத்துகிறது.

### 2.4.6.1 பொருட்பிரிவின் வகைகள்

பொருட்பிரிவு என்பது, காலிற்பிரிவு, கலத்திற்பிரிவு என இருவகைப்படும். காலிற்பிரிவு என்பது, உள்நாட்டில் பிரிதலாகும். கலம் - கப்பல். கலத்திற்பிரிவு என்பது, கப்பல் ஏறி கடல் கடந்து வெளிநாட்டிற்குச் சென்று பிரிதலாகும்.

''முந்நீர் வழக்கம் மகடூ உவோ டில்லை''[20]

என்ற நூற்பா மூலம் மனைவியை உடன் அழைத்துக் கொண்டு, கடல் கடந்து வெளிநாட்டிற்குச் செல்லும் வழக்கம் இல்லை என்பது தொல்காப்பியம் மூலம் அறியமுடிகிறது.

பொருள்வயிற்பிரிதலும் தலைவனுக்கு உரியது. உயர்ந்தோர் பொருள்வயிற்பிரிவு அறத்தொடு முறையாக அமையும் என்பதை

''பொருள்வயின் பிரிதலும் அவர் வயின் உரித்தே''
''உயர்ந்தோர் பொருள் வயின் ஒழுக்கத்தான்''[21]

என்ற தொல்காப்பிய நூற்பாவினால் அறிய முடிகிறது.

பொருள் ஈட்ட செல்லும் பிரியும் பிரிவு, ஓர் ஆண்டிற்கு உட்பட்டே அமையும் என்பதை,

''ஏனைப்பிரிவும் அவ்வியல் நிலையும்''[22]

என்ற நூற்பா மூலம் அறியலாம்.

## 2.5 பொதுநலப்பிரிவு

தலைவன் தலைவி இருவரும் இல்லற வாழ்க்கையை அனுபவித்து, இன்பம் கண்ட பின்பு, வயது முதிர்ச்சியடைந்து தன் மக்களிடம் குடும்பப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, தலைவன் பொதுநலம் கருதி மக்களுக்குச் சேவை செய்யும் பொருட்டு பிரிவது பொதுநலப்பிரிவாகும்.

## 2.6 துறவு மேற்கொண்ட வாழ்க்கை

தலைவன் வயது முதிர்ந்து இறுதிக் கட்டத்தில் தலைவியைவிட்டுப் பிரிந்து துறவறம் மேற்கொண்டான். ஆனால் தலைவி துறவறம் மேற்கொண்டதாக சான்று இல்லை. 'காமம் சான்ற கடைக்கோள் காலை' என்பதற்கு இல்லறம் நிகழ்த்திய தலைவன் தலைவியை விட்டு துறவறம் நிகழ்த்தி வீடுபேறு பெறுதலையே குறிக்கிறது.

தொல்காப்பியர் வாழ்க்கையை இரண்டு வகையாகப் பிரித்துள்ளார். அவை இல்லறம், துறவறம் என்பதாகும்.

## 2.7 இல்லறம்

இல்லறம் என்பது, குடும்பத்தில் இருந்து கொண்டு தமக்கென வாழ்வது ஆகும்,

### 2.7.1 துறவறம்

துறவறம் என்பது, இல்லறத்தில் இருந்துகொண்டு பிறர்க்கென்று வாழ்வதாகும்.

''ஒரு ஆணும் பெண்ணும் கூடி வாழ்வது இயற்கை. இங்ஙனம் கூடி வாழ்வதால் உலகம் நிலைத்திருக்கிறது. இல்லற வாழ்க்கையை அனுபவித்த பின்னரே, துறவறம் மேற்கொள்ள வேண்டும். இல்லறம் அனுபவிக்காமல் துறவு வாழ்க்கை மேற்கொண்டால் அவர்களின் துறவு வாழ்க்கை சிறந்ததாக அமையாது எனலாம்''.

தொல்காப்பியர் களவிற்கும், கற்பிற்கும் பிரிவுகள் உண்டு என்று குறிப்பிட்டாரேயன்றி, இவற்றை வகைப்படுத்திக் கூறவில்லை. பல நூற்பாக்களில் அவை பற்றிய செய்திகளை மட்டுமே கூறிச்சென்றுள்ளார். இறையனார் களவியலுரையும் தொல்காப்பியரை அடியொற்றி பிரிவுகள் ஆறு என்றே குறிப்பிட்டுச் செல்கிறது. இவ்விரு நூல்களும் அப்பிரிவுகள் எந்த ஒழுக்கத்திற்கு என்பதை தெளிவாக கூறவில்லை. நம்பியகப்பொருள் மட்டுமே அப்பிரிவுகளில் இவை களவிற்குரியன, இவை கற்பிற்குரியன என வகைப்படுத்திக் கூறுகிறது.

பிரிவின் வகைகள் களவின் கண் நிகழும் பிரிவு, கற்பின்கண் நிகழும் பிரிவு என இருவகைப்படும்.

## 2.8 களவொழுக்கத்தின் கண் நிகழும் பிரிவு

களவொழுக்கத்தின் கண் நிகழும் பிரிவினை நம்பியகப்பொருள் விளக்கமாகக் கூறுகிறது என்பதை

> ''ஒரு வழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
> பொருள்வயின் பிரிதல் என்று இருவகைத்தாகும்
> நிறைதரு காதல் மறையினிற் பிரிவே''[23]

என்ற நூற்பா மூலம் அறிய முடிகிறது.

1. ஒரு வழித்தணத்தல்
2. வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல்

என்று இரு வகைப்படும்

### 2.8.1 ஒரு வழித்தணத்தல்

ஒருவழித்தணத்தலாவது ஓரூரின் கண்ணும் அல்லது ஒரு நாட்டின் கண்ணும் பிரிதலாம், இப்பிரிவுக்குக் காலம் கூறமாட்டார்கள். ஒரே ஊரின் கண்ணும், அல்லது ஒரே நாட்டின் கண்ணும் நிகழ்வதால் பருவம் கூறப்படவில்லை.

இருவகைக் குறியிடத்தும் இடையறாது புணர்ந்து வரும் தலைவன் அக்கூட்டம் தெவிட்டாமல் இருத்தற் பொருட்டுச் சில நாள் குறியிடம் சொல்லாமல் பிரிந்திருப்பான். இது 'இட்டுப்பிரிவு' எனப்படும். இட்டுப்பிரிவு - சிறுபிரிவு ஒரு வழித்தணத்தலாகிய இட்டுப்பிரிவு அடிக்கடி நிகழும் இவ்வொரு வழித் தணத்தலாகிய இட்டுப்பிரிவுக் காலத்தையும் தலைமகள் ஆற்றாது வருந்துவாள் தோழி தலைவியை ஆற்றுவிப்பாள்.

### 2.8.2 வரைவிடை வைத்துப்பொருள் வயிற் பிரிவு

'வரைதல்' என்றால், 'மணத்தல்' என்பது பொருளாகும். இது களவு வெளிப்படாமுன் வரைதல், களவு வெளிப்பட்ட பின் வரைதல் என இரு வகைப்படும்.

தலைவி அறத்தொடு நின்றதை எல்லோரும் ஒப்புக்கொண்டபின், மணந்து கொள்ளுதல் என்பது களவு வெளிப்பட்ட பின் வரைதலாகும்.

தலைமகள் அறத்தொடு நில்லா முன் தலைவன் தலைவியை உடன் கொண்டு சென்று, தன்னூரில் மணந்து கொள்ளுதல் என்பது களவு வெளிப்படாமுன் வரைதலாகும்.

இரவுக்குறி, பகற்குறி இரண்டிலும், தலைவியைப் பெற்று மகிழ இயலாத அந்நிலையில், தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலை மேற்கொள்வான், .தலைவியின் அருமையை உணர்ந்தபின்னரே இச்செயலை புரிவான்.

மணம் உறுதியான பிறகு அத்திருமணச் செலவுக்கு வேண்டிய பொருள் கொண்டு வர, தலைவன் தன்னூருக்குச் செல்வான் இது 'வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிவு' எனப்படும்.

வரைவு மணம் இடை வைத்து மணத்திற்கு முன் பொருளுக்காகத் தலைவியைப் பிரிந்து செல்வதெல்லாம் பொருட்பிரிவு எனப்படும். தலைவன் பொருள் கொண்டு வந்ததும் திருமணம் நடைபெறும்.

வரைவினை அடிப்படையாகக் கொண்டு பொருள் ஈட்டும் வகையில் ஏற்படும் பிரிவினை நம்பியகப்பொருள்

> **''வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிவோர்**
> **இருதுவின் கண்ணுடைத்து என்மனார் புலவர்''**[24]

என்ற நூற்பாவிலிருந்து இரண்டு மாதங்களுக்கு மிகாமல் இருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது.

பெண் பேசச் செல்லுங்கால் சான்றோர் அணிகலன்களை சுமந்து சென்று பெண்ணுக்குத் தரும் வழக்கம் உண்டென்பது சங்க இலக்கியத்தால் அறியமுடிகிறது. இதற்கு, 'முலைவிலை' என்று பெயர். சில ஆண்டுகளுக்கு முன்பு இது 'பரிசம்' என்ற பெயரால் பெண்களுக்கு கொடுக்கப்பட்டு வந்தது. இக்கருத்தை சங்க இலக்கியத்தில் நற்றிணைப் பாடலில் தோழி ஒருத்தி கூறுவதாக உள்ளது.

## 2.9 பிரிதலின் வேறு வகை

தலைவன் தலைவியை, தன்னுடன் உடன் கொண்டு செல்லுதலும், சுற்றத்தினர் வந்து பிரித்த வழி, பிரிந்த வழிக்கலங்குதலும் சில வேளைகளில் உண்டு என்பதை

> "கொண்டுதலைக் கழிதலும் பிரிந்து அவன் இரங்கலும்
> உண்டென மொழிப ஓரிடத்தான்"[25]

என வரும் தொல்காப்பிய நூற்பா வழி அறியமுடிகிறது.

### 2.9.1 உடன்போக்கு

தலைவனும் தலைவியும், தம் காதலுக்கு எதிர்ப்பு வந்த காலத்து, பெற்றோரின் ஒப்புதலின்றி, ஒருமித்தக் கருத்துடன், வீட்டை விட்டு வெளியேறும் செயலே 'உடன் போக்கு' எனப்படும்.

தலைவி தலைவனுடன் போதல், தலைவன் தலைவியை உடன் கொண்டு செல்லுதல் ஆகும். இது 'கொண்டு தலைக்கழிதல்' என்றும் வழங்கப்படும்.

தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் காதலித்து, களவொழுக்கம் ஒழுகி, இருவரும் மணம் செய்து கொள்ள விரும்புவதைத்

தலைவியின் பெற்றோர் அறிந்து, அவள் விருப்பத்தின் படி அவனுக்கே மணம் செய்து கொடுப்பர்.

ஒரு சில பெற்றோர் களவொழுக்கத்தை அறியாதும், அறிந்தும் அதற்கு உடன்படாதும், தலைவியை தலைவனைச் சந்திக்கக்கூடாது என்பதற்காக வெளியே செல்லவிடாது, வீட்டிற்குள் வைத்து காவல் காத்து வருவர். இதனால், தலைவனைக் காண முடியாத தலைவி, பிரிவாற்றாமையால் பெரிதும் வருந்துவாள், தலைவியின் விருப்பத்தின்படியே தோழி தலைவியை தலைவனுடன் உடன் அனுப்புவாள்.

### 2.9.2 உடன் போக்குத்திருமணம்

களவொழுக்கம் என்ற நாடகத்தின் இறுதிக் காட்சியாக அமைவது உடன்போக்கு இதனையும் ஒரு வகைத் திருமணம் என்றே கொள்வர் தொல்காப்பியர்.

> **''கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**
> **புணர்ந்துடன் போகிய காலையான''**[26]

என்ற நூற்பா மூலம் உடன்போக்கும் ஒரு வகையான திருமணமே என்பதும் பெறப்படுகிறது.

உடன்போக்கு பற்றிய செய்திகளாக வ.சுப மாணிக்கம் அவர்கள் ''படிகடவா இளமங்கை பிறந்த வீட்டைத் துறந்து, பெற்றோரை மறந்து, முன்பின் அறியா ஆடவனை காதற்கொழுநன் என நம்பிக் கரடு முரடான வழியில் உடன்போக்கு துணிந்த போது, அக இலக்கியம் புதினம் போலும் சாயலைப் பெறுகிறது. கற்பவர்க்கும் உணர்ச்சிக் கூர்மையை விளைக்கிறது என்று எழுதுவது இதன் அவசியத்தை எடுத்துரைக்கும்''.

ஏனெனில் உடன்போக்கு நிகழாவிடில், அகத்திணைத் தலைவியின் கற்புக்கு மாசுபடும். உடன்போக்கு என்ற சொற்றொடர், ''உடன்

அழைத்துப் போதல் என்றே பொருள்படும்'' களவொழுக்கத்தின் இறுதிக்காட்சி உடன்போக்காக அமைவதுண்டு இதனை இச்செறிப்பு, ஊரலர், வெறியாட்டு, நொதுமலர் என்ற இன்னாச் சூழ்நிலைகளைக் கடத்திற்கு இரண்டு வழிகள் உள்ளன. அவற்றில் ஒன்று நிகழ்ந்தால் மற்றது நிகழாது. அறத்தொடு நின்றபின் உடன்போகார், உடன்போன பின் அறத்தோடு நிற்றலால் பயனில்லை என்று விளக்குவார்.

### 2.9.3 உடன்போக்கை பாலைத் திணையில் வைத்ததன் பொருத்தம்

தலைவனும் தலைவியும் உடன் செல்லும் நிலையில் வழியிடைப்பருவம் திங்களும், எதிர்கால அறைக்கூவல்களும் அவர்களின் நெஞ்சங்களில் அச்சத்தையே தோற்றுவிக்கின்றன எனவேதான் தலைவனும் தலைவியும் பிரியாது செல்லும் உடன்போக்கு பாலைத்திணையாயிற்று.

தலைவன் தலைவியர் ஆகிய இருவர் நெஞ்சிலும் கவலையும் அச்சமும் குடிகொண்டிருக்கும். இவ்வுணர்ச்சிகளுக்கு இடையில் அவர்களின் மனஉறுதி விளங்கும்.

உடன்போக்கு மேற்கொள்ளும் முன்பு தோழியிடத்து மனம் கவன்று பேசும் தலைவி, உடன்போக்கில் பேசாது செல்கிறாள். தலைவியின் சிந்தனை தன் பிறந்த வீட்டையே சுற்றிவருகிறது. பெற்றோர் விருப்பத்தோடு தன் திருமணம் நடைபெறவேண்டுமென்று கருதுகிறாள். தன் காதலை ஏற்காத பெற்றோரைப் பார்த்து வருந்தும் வருத்தம் அவளிடையே வருகிறது.

உடன்போக்கு மேற்கொண்டவர்கள் பெற்றோர் ஏற்ற நிலையில், திரும்பி வந்து, ஊரார் பேசிய அலர்மொழிகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கின்றனர்.

பெற்றோர் மட்டுமல்லர் ஊரார், கண்டோர் என யாவரும் காதல் மணத்தை ஏற்று போற்றுவதாக உடன்போக்குத்துறை பாலைத்திணை பாடல்கள் அமைகின்றன.

தொல்காப்பிய புறனடை நூற்பாவில், உடன்போக்கு பாலைக்குரியதென கருதப்பெற வேண்டுமென்கிறார் உரையாசிரியரும் தொல்காப்பியர் அவ்வாறு கூறுவதற்கான காரணத்தைத் தெளிவுபடுத்துகிறார். அவர் கூறும் காரணங்களுள் ஒன்று ''வைகுபுலர் விடிவதற்கு முன் இரவில் இருளில் விரைகின்ற காதலர், காதலியின் பெற்றோர் தம்மைப் பார்த்து விடுவாராயின் வீட்டுக்கு மீளத்தலைவியைக் கொண்டு சென்று இல்லச் சிறைக்கண் இருத்தி விடுவாரென்ற கவலையே காதலர் தம்முள் பிரிவு வந்து விடக் கூடுமே என, அப்போது அஞ்சுகின்றனர் அவர்கள் ஒருவரை ஒருவர் நீங்காது உடன் சென்றாலும் வலிய பிரிக்கப்பட்டு விடுவோமோ என்ற கவலையே அவர்களை ஆட்கொள்வதால்'' இத்துறை பாலைக்குரியது என்பது சரியானது எனலாம்.

தம் நாட்டகத்து வழங்கப்படாத கல்வி வேற்றிடத்து வழங்கப்பட்டபோது அவ்விடம் சென்று அக்கல்வியைக் கற்று வந்த பான்மையும், தன்னலம்பாராது வீரம் வளர்த்த தன்மையும் தன்னிலையுணராது பகையுணர்வினை வளர்த்து, தமக்கு மட்டுமின்றி தம்மினத்திற்கே கேடு தேடிய தலைவர்களை நன்னெறிபடுத்த நடுநின்று சந்து செய்வித்த செயலும், தன் நாட்டின் கண் நிகழும் அறமில்லாத செயல்களைக் களைந்து அறத்தைக் காத்தற்கு முற்பட்ட காவற் செயலும், பிற நாடுகளுக்குச் சென்று பொருளீட்டி வந்து தாம் மட்டுமில்லாது தம் நாடும் சிறக்க வழி செய்த தன்மையும், தமிழனின் தன்னலம் கருதாத சமுதாயப் பொறுப்புமிக்க செயல்களாக விளங்கியதை நாம் அறிய முடிகிறது.

## 2.10 தொகுப்புரை

1. பிரிவு என்பது ஏதாவது ஒரு செயல் வினை நிமித்தத்தின் பொருட்டு தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து அயலிடம் செல்வதாகும்.

2. ஓதல்பிரிவு, பகைப்பிரிவு, தூதுப்பிரிவு, காவற்பிரிவு, பொருள் வயிற்பிரிவு, பரத்தையர் பிரிவு என்று பிரிவு பற்றி தொல்காப்பியர் வகைப்படுத்தியுள்ளார்.

3. நம்பியகப்பொருள் ஆசிரியர் களவுகாலப்பிரிவின் வகைகளாக ஒரு வழித்தணத்தல், வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிவு என்று வகைப்படுத்தியுள்ளனர்.

4. கற்பு கால பிரிவின் வகைகளாக தொல்காப்பியர் கூறிய ஆறு பிரிவுகளையே ஏற்றுக்கொண்டுள்ளார்.

5. மாறனகப்பொருள் கற்பு கால பிரிவின் வகைகளாக ஆறு பிரிவுகளையே குறிப்பிடுகிறது.

6. புலவர் குழந்தை களவு, கற்பு இரண்டின் பிரிவுகளை ஒன்பது என்று வகைப்படுத்தியுள்ளார்.

7. ஓதற்பிரிவு, தூதுப்பிரிவுக்கு உயர்ந்தோர் செய்வர்.

8. காவற்பிரிவு அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் நால்வர்க்கும் உரியது.

9. கல்விப் பிரிவுக்குரிய காலம் மூன்று வருடங்கள்.

10. ஏனைய பிரிவுக்குரிய காலம் ஒரு வருடம்.

11. உடன்போக்கும் ஒரு வகைப்பிரிவேயாகும்.

12. உடன்போக்கைப் பாலைத்திணையில் வைத்ததன் பொருத்தமேயாகும்.

# அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையியல், நூ.25
2. நம்பியகப்பொருள், நூ.62
3. இறையனார் அகப்பொருள், நூ.35
4. மாறனகப்பொருள், நூ.71
5. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ.47
6. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையியல், நூ.31
7. மேலது, நூ.28
8. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ.48
9. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையியல், நூ.38
10. மேலது, நூ.41
11. குறுந்தொகை 283
12. மேலது, 63
13. அகநானூறு, 155
14. கலித்தொகை
15. நற்றிணை, 138
16. குறுந்தொகை, 383
17. அகநானூறு, 131:5
18. திருக்குறள் 1107
19. குறுந்தொகை 83
20. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையில், நூ.34
21. மேலது நூ.33
22. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ.49
23. நம்பியகப்பொருள், நூ.39
24. மேலது, நூ.41
25. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையியல், நூ.15
26. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ.2

# தலைமக்களின் பிரிவாற்றாமை

3.0 முன்னுரை

3.1 தலைமக்கள் பிரிதல்

3.2 நெஞ்சொடு கிளத்தல்

3.2.1 நெஞ்சொடு கிளத்தல் நிகழக் காரணம்

3.3 தலைவியின் பிரிவாற்றாமை

3.4 தலைவியின் மனநிலை

3.4.1 பசலை படர்தல்

3.4.2 நுதல் பசத்தல்

3.4.3 நெற்றி பசத்தல் தோள் நெகிழ்தல்

3.4.4 மேனி முழுவதும் பசத்தல்

3.4.5 கண்ணீர் வடித்தல்

3.4.6 காமநோய்

3.4.7 காமம் மிக்க கழிபடர் கிளவி

3.4.8 மக்கள் அல்லாதோர் கேட்பனவாகக் கூறல்

3.5 எப்பொழுதும் துன்பமே

3.5.1 இரவையும் பகலையும் வெறுத்தல்

3.6 காமத்தில் புலத்தல்

3.6.1 முயலிடம் சினத்தல்

3.6.2 கடலையே நீரற்றுப்போகச் செய்வேன்

3.7 தலைவனையும் வருத்தும் காமநோய்

3.8 மெலிதலாள் வளை நெகிழ்தல்

3.8.1 தொய்யில் எழுதுதல்

3.9 வெப்பப் பெருமூச்சு

3.10 தென்றலும் கூற்றுவன்

3.11 தலைவன் இருக்குமிடம் தேடிச் செல்லாமை

3.12 பல்லி சொல் கேட்டல்

3.13 வாடைக்காற்று

# தலைமக்களின் பிரிவாற்றாமை

## 3.0 முன்னுரை

சங்க இலக்கியங்களில் மற்ற திணைகளை விடப் பாலைத்திணைப் பாடல்களே அதிகமாகக் காணப்படுகின்றன. தலைவன் தலைவியரிடையேயுள்ள அன்பு, அவர்கள் கூடி இன்புற்றிருந்த காலத்தை விடவும், பிரிந்து இருக்கும்போது தான் அதிக விளக்கம் பெறுகிறது. தலைமக்களின் பிரிவாற்றாமை பற்றிய கருத்துக்களை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 3.1 தலைமக்கள் புரிதல்

முன்னர், தலைவன் தலைவியர் கூடியிருக்கும் போது, அவர்களுக்கு இன்பத்தை அளித்த சூழ்நிலையும், நுகர்ச்சிப் பொருளும் அவர்கள் பிரிந்திருக்கும் வேளையில் துன்பத்தை மிகுவிக்கும் கருவிகளாக மாறுகின்றன.

அப்பிரிவு காலத்தில்தான், அவர்கள் ஒருவருக்கொருவர் இன்றியமையாதவர் என்ற உண்மையை, அவர்கள் நன்கு உணர்கின்றனர். முன்னர் அவர்கள் மனதிலிருந்த, குறைகளும் வருத்தங்களும், இப்பிரிவில் ஏற்படும் ஆற்றாமையாகிய வெம்மையால் வெந்து, சாம்பல் நீராகித் தூய அன்பு ஒன்றே உள்ளத்தில் நிலை பெறுகின்றது.

மேலும், தலைவனும் தலைவியும் பிரிந்திருக்கும் வேளையில், அவர்கள் உள்ளத்தில் நிகழும் வருத்தங்களும், மீண்டும் கூடப்பெறும் நாளினை ஆவலோடு எதிர்பார்க்கும் போது இன்பம் தோன்றும் என்று உ.கருப்பதேவன் தாம் எழுதிய ''சங்க இலக்கியச் சோலையில்'' குறிப்பிட்டுள்ளார்.

காதலர்கள் சேர்ந்திருக்கின்றபோது, தம்மை, இந்த உலகத்தையே மறந்திருப்பர். கால நிகழ்வையும்கூட உணராதிருப்பர்.

''பொழுது இடை தெரியின் பொய்யே காமம்''[1]

உலகத்து எல்லாப் பொருளும் அவர்களுக்கு இன்பமாய், இன்பம் சேர்ப்பதாய் உணர்வர், சேர்ந்திராத பிரிவுக்காலத்தில் உலகத்து எல்லாப் பொருளும் எல்லா நிகழ்வும் துன்பம் சேர்ப்பதாய் உணர்வர்.

பிரிவுத்துன்பம் தலைவன், தலைவி இருவருக்கும் பொதுவானது எனினும், தலைவி உற்றாருடன், தன் மகனுடன் இல்லத்தில் இருந்து, தலைவனை மட்டுமே பிரிந்திருக்கிறாள். அவளை ஆற்றுப்படுத்த மற்றவர்கள் வீட்டில் இருப்பார்கள்.

ஆனால் தலைவன், உறவு அனைத்தையும் பிரிந்து, கடமை உணர்வோடு செயலாற்றச் செல்கிறான். தனது தனிமைத் துயரைவிட, தலைவியின் துன்பத்தையே பெரிதென எண்ணி, வினைமேற் செல்லும் வழியிலும், வினை செய்யும் இடத்திலும் துயருறுகிறான்.

தலைவிக்குப் பிரிவுத்துயரால் மனம் மட்டுமே தொல்லைப்படுகின்றது. தலைவனுக்கு யானையாலும், ஆறலைக்கள்வர்களாலும், உடலுக்கும், மனத்திற்கும் ஒரு சேர துன்பம் வாய்க்கின்றது. இத்துன்பத்தோடு தலைவியைப் பிரிந்த துயரமும் சேர்த்து, அவனை வாட்டுகிறது.

தலைவன் சென்ற பாதையை நினைக்கும் போதும், தலைவனின் நலம் ஏற்றி எண்ணும்போதும், இற்செறிப்பின் போதும், தோழி ஆற்றுவிக்கும் போதும் தலைவிக்கு ஆற்றாமை மீதுறுகின்றது.

கண்டு காதல் செய்து இல்வாழ்க்கையில் ஈடுபட்டு சிலகாலமே கழிந்த நிலையில் இளம் பருவத்துத் தலைவன் தலைவியர் பிரிவு, அவராலேயும் பிறராலேயும் தாங்க முடியாதது ஆகும். சங்க அகப்பாடல்களில்

காட்டப்படுகின்ற தலைவன் தலைவியர் இளம்பருவத்தினர் என்பதும் அவர்க்குப் பிரிவு என்பது கடமையால் வருவது என்பதும் அப்பிரிவில் தலைவனைப் பிரிந்து இல்லில் இருக்கும் தலைவியின் துன்பம் பெரிதாகக் கூறப்படும்.

## 3.2 நெஞ்சொடு கிளத்தல்

மாந்தர் தமக்குத்தாமே பேசிக் கொள்வது, அகவாழ்வில் முக்கிய அங்கமாகத் திகழும் அத்துறை 'நெஞ்சொடு கிளத்தலாகும்'.

மாந்தர் தமக்குத் தாமே பேசிக் கொள்வதற்குக் காரணம், ஒருவர் மீது மற்றொருவர் கொண்ட தணியாத அன்பேயாகும். அவ்வன்பும், உயர்திணை உயிர்களுக்கு மட்டும் உரித்தானதன்று. அஃறிணை உயிர்களுக்கும் உரித்தானது என்பதை செய்யுள்கள் மூலம் அறியமுடிகிறது.

தலைவன் தலைவி மீது கொண்ட அன்பின் முதிர்ச்சியால் தன் நெஞ்சோடு தானே பேசுகிறான். தலைவியும் தலைவன் மீது கொண்ட அன்பால் தவிக்கிறாள். தன் உயரிய அன்பை, தலைவனை அருகில் இருத்தித் தரமுடியவில்லையே, என்ற ஏக்கமும் கொள்கிறாள்.

## 3.3 நெஞ்சோடு கிளத்தல் நிகழக்காரணம்

ஒருவன் தன் நெஞ்சத்தோடு இன்பமாகப் பேசுவதற்கும், ஊடல் மொழி பேசுவதற்கும் காரணங்கள் இருந்தாக வேண்டும். சங்க காலத்தில் அக்காரணங்கள் பிரிவின் நிமித்தமே அதிகம் ஏற்பட்டுள்ளன.

நெஞ்சுக்குச் சொல்லுதல் என்பது அத்தலைமை மாந்தர் பிரிவின் காரணமாகவும், பிரிவின் நிமித்தம் காரணமாகவும் நிகழ்த்தப் பெறுவதாகும். அதாவது தனிமையுறும்போதும், தனிமையுறவிருக்கும் போதும் நிகழ்த்தப் பெறுவதாகும்.

காம உணர்வு பெருகிய நிலையில், காதலர்களாகிய தலைவனும் தலைவியும், அக்காம உணர்வு வெளிப்படும் வகையில் தம் மனத்துடன் பேசுவர்.

தலைவனுக்கும் தலைவியின் பிரிவினால் வருத்தம் இருப்பினும், வினையில் ஈடுபடுவதாலும், தோழி போன்று நெருக்கமானவர்கள் இல்லாததாலும், மற்றவர்களிடம் கூறுவதை ஆண்மைக்குறைவாக நினைப்பதாலும், தலைவியின் பிரிவைத் தவிர வேறு காரணம் இன்மையாலும் அவனுடைய ஆற்றாமை உணர்ச்சி அதிகமாகக் கூறப்படுவதில்லை. அது பெரும்பாலும் நெஞ்சுடன் கூறுவதாகவே அமைகிறது.

தலைவிக்கோ தலைவனுடைய அன்பே பெரிதாதலாலும், வேறு வினையில்லாததால் காமம் அதிகமாவதாலும், மென்மை உள்ளத்தினள் ஆதலாலும், அலர், தமர் மறுத்தல், வரைவு நீட்டிப்பு, இற்செறிப்பு முதலிய காரணங்களாலும் தன் உயிரனைய தோழியிடமும் தன் ஆற்றாமையைக் கூறுகின்றாள். காமம்மிக்க கழிபடர்கிளவியும் நெஞ்சுடன் கூறும் இடங்களும் மிகக் குறைவாகவே உள்ளன.

பிரிவுக் காலத்தே, தலைவன் தலைவி இருவருமே ஒருவரைவிட்டு, ஒருவர் பிரிவாரேனும், பரத்தையிற் பிரிவில் தலைவன் இன்பம் நுகர்வதால் அவனுக்கு பிரிவுத் துன்பம் இல்லை ஏனையப் பிரிவுகளிலும், அவன் வினைவயிற் கருத்துடைமையால் பிரிவுத்துன்பம் தலைவனை அவ்வளவு அதிகமாக வருத்துவதில்லை. தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியே பிரிவுத் துன்பத்தால் மிகவும் வருந்துபவள் ஆகிறாள்.

புணர்ந்த தலைவன் வரையாமையால் தோன்றும் மனப்போராட்டங்கள் களவிலும், பிரிந்த தலைவன் வாராமையால் தோன்றும் மனப்போராட்டங்கள் கற்பிலும் கூறப்பட்டுள்ளன.

சமுதாயத்தில் களவில் புணர்ந்த தலைவியை நோக்கும் எள்ளற்பார்வையும், கற்பில் பிரிந்து வாடும் தலைவியை நோக்கும் இகழ்ச்சி கலந்த இரக்கப் பார்வையும் அவளுடைய உள்ளத்தை புண்படுத்தும்.

தாங்கொணாது துன்புறுத்தும் பிரிவும், தலைவன் கொள்ளும் தகாத உறவும் (பரத்தையர் ஒழுக்கம்) தலைவியின் பிரிவுத் துன்பத்திற்குக் காரணங்களாகின்றன.

## 3.3 தலைவியின் பிரிவாற்றாமை

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லும் போது, தலைவி பிரிவாற்றாமையால் மிகவும் துன்பப்படுவாள். தன்னுடைய பிரிவாற்றாமையை தனது உடல் மொழிகளால் வெளிப்படுத்துவாள்.

சங்க இலக்கியங்களில் உடல் மொழியானது உள்ளத்தின் கழிபடர்க் கலக்கம், புதுக்கவின் இழத்தல், கால் விரலால் நிலத்தைக் கீறல், கால் நிலையாமை, நாநடுக்கம், நவிலாக்கிளவி, பசலை, மேனிநலம் தொலைத்து, மெலிதல், உறக்கமின்மை, வெப்பப்பெருமூச்சு என்பனவாகும். இவற்றை வெளிப்படுத்தும் கூறுகளாகக் கூந்தல், கண்கள், நெற்றி, தோள், மார்பு, கைகள், முகம் போன்றவை செயல்படுகின்றன. சங்க இலக்கியங்களில் தலைவியின் உடல் மொழியானது (பிரிவுத் துன்பத்தினால் ஏற்படுவது) முடி முதல் அடிவரை வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## 3.4 தலைவியின் மனநிலை

பொதுவாகவே பெண்கள் மன எழுச்சிமிக்கவர்கள். சிறு நிகழ்வுகளுக்குக்கூட எளிதில் உணர்ச்சிவசப்படக்கூடியவர்கள். தலைவனைக் காட்டிலும் தலைவியே பிரிவாற்றாமையின் துன்பத்தை தனது உடல் மொழிகளால் வெளிப்படுத்துவாள் என்பதை, சங்க இலக்கியங்களில் பல இடங்களில் பார்க்க முடிகிறது.

தலைவன் பிரிகின்ற சூழலில், துன்ப உணர்வை வெளிப்படுத்துவதற்கு, தலைவிக்கு வாய்ச்சொற்கள் தேவையில்லை. விழியசை, முகபாவனை போன்ற உடல்மொழிகளே போதுமானவையாகும். கண்களாலும், செவிகளாலும், உடல் உணர்த்தும் உண்மைகளை, நுட்பமாக அறிந்து கொள்ளும் ஆற்றல் படைத்தவர்களுக்கேயன்றி மற்றவர்களால் உடல் மொழி என்பதன் உட்பொருளை அறிந்து கொள்ள இயலாது.

### 3.4.1 பசலைப் படர்தல்

பசலைப்படர்தல் என்பது, தலைவன் தலைவியைப் பிரிந்ததும், தலைவியின் உடலில் ஏற்படும் நிறமாற்றமாகும். உள்ளம் நோயுற்ற காலத்தில் மேனியில் ஏற்படும் மாறுபாடுகளில் முதன்மையானதாகத் தமிழ் புலவர்கள் நிறமாற்றத்தையே குறிப்பிடுகின்றனர்.

சங்க இலக்கியப் பாடல்களில், கண்ணிலும், நெற்றியிலும், பசலைப்படர்தலைப் பற்றிய குறிப்புகள் பல பாடல்களில் காணப்படுகின்றன.

கண்ணிலும், நெற்றியிலும் மட்டுமின்றி தோள்களிலும், மேனி முழுவதுமே பசலைப்படர்தல் பற்றி பல பாடல்கள் சுட்டிக் காட்டியுள்ளன.

### 3.4.2 நுதல் பசத்தல்

நுதல் பசத்தல் பற்றிய பாடல்களில்,

> **''நல் மலை நாடன் பிரிந்தென**
> **ஒன் நுதல் பசப்பது எவன்கொல்''**[2]

> **''சில் நிரை ஓதி என் நுதல் பசப்பதுவே''**[3]

என ஒளி பொருந்திய நுதல் பசத்தல் பற்றி சில பாடல்களில் கூறப்பட்டுள்ளன என்பது தெரிகிறது.

### 3.4.3 நெற்றி பசத்தல் தோள் நெகிழ்தல்

சில பாடல்களில் நெற்றி பசத்தல் பற்றியும், தோள்கள் நெகிழ்தல் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன என்பதை,

"அம்மவாழி தோழி நாளும்
நல் நுதல் பசப்பவும் நறுந்தோள் நெகிழவும்"[4]

"மென்தோள் ஞெகிழவும் திருநுதல் பசப்பவும்"[5]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 3.4.4 மேனி முழுவதும் பசத்தல்

சில பாடல்களில், மேனி முழுவதும் பசலைப் படர்ந்து நலம் தொலைவது பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. தலைவன் தலைவியைப் பிரிந்து, பொருளீட்டச் செல்வேன் என்று கூறியவுடனே தலைவியின் உள்ளத்தில் ஏற்பட்ட கவலையில் அவளது மேனியில் பசலை நோய் படர்ந்து, அவளின் அழகு தொலைந்துவிட்டதை தலைவி தோழியிடம்,

"அம்ம வாழி தோழி காதலர்
பாவையன்ன என் ஆய்கவின் தொலைய
நல்மாமேனி பசப்ப
செல்வல் என்பதம் மலை கெழுநாட்டே"[6]

என்று கூறுவதிலிருந்து பெறப்படுகிறது.

தலைவன் பிரிவால் தலைவியின் அழகு கெடும், தலைவன் வந்தால் தொலைந்த அழகு மீண்டும் வரும் என்பதை,

"மென் தோள் நெகிழவும் திருநுதல் பசப்பவும்
பொன் போல் விறற்கவின் தொலைத்த
குன்ற நாடற்கு அயர்வர்நன் மணணே"[7]

என்ற பாடலடி உணர்த்துகிறது.

பிரிவுத்துயரால் படரும் பசலை நிறத்திற்கு பீர்க்கம் பூவின் நிறமும், கொன்றைப் பூவின் வண்ணமும் உவமைகளாகப் பேசப்படுகின்றன என்பதை அகநானூறு *135, 398*வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

தலைவனைக் காணும் பொழுதினும், காணாத பொழுதே தலைவிக்கு பெரும்பொழுது, அவனைக் காணும் பொழுதெல்லாம் சிறுபொழுது. எனவே, பொருள்வினைக் கருதியும், போர்வினைக் கருதியும் பிரிகின்ற தலைவன், சிறிது காலம் கழித்து, வினைமுடித்து விரைவில் வருவேன் என்றும், முல்லை மலரும் பருவத்து வருவேன் என்றெல்லாம் ஆறுதல் செய்து செல்வான்.

தலைவன் அவன் குறித்துச் சென்ற பருவம் வருவதற்கு முன்னேயே வருதலும், குறித்தக் காலத்து வருதலும், குறித்தக் காலத்து வராமலும் இருத்தலுண்டு. வராமையால் துன்பத்தை ஆற்றாதவளாகி பேதுறும் நிலையைத் தலைவி அடைவாள்.

கண்துயிலாதிருத்தல், புலம்புதல், அழுதல் இவை எல்லாம் உயிர் பிரி நிலையினை உணர்த்துவன.

**''நள்ளென் யாமத் துயஉத் துணையாக**
**.....**
**வரம்பன் அடன்முனைக் கலங்கிய**
**வுடைமதில் ஓரரண் போல**
**வஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே''[8]**

**''கார் தொடங்கின்றால் காலையதனால்**
**நீர்த் தொடங்கினவால் நெடுங்கண்''[9]**

**''பிரிந்தும் வாழ்துமோ நாமே''[10]**

**''இன்ன சில்நாள் கழியின் பன்னாள்**
**வாழவேன் வாழி தோழி''[11]**

**''இன்னும் வாராராயின் என் ஆம் தோழி நம் இஈன் உயிர்நிலையே**
**என் இன்னுயிர் நிலையே''[12]**

என்றெல்லாம் கூறி தலைவி வருந்தினாள்.

### 3.4.5 கண்ணீர் வடித்தல்

தலைவன் பிரிவின், நிலையைத் தலைவி எடுத்துரைக்க இயலாதபோது அவளது கண்ணீர் மார்பகத்தை நனைத்தது என்பதை அகநானூறு 161வது பாடலின் வழி அறியமுடிகிறது.

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றுவிட்டான். தலைவி, தோழியிடம், ''நான் தலைவனின் பிரிவாற்றாமைத் துன்பம் பெரிது அல்ல என்றும், சென்றுள்ள வெளிநாட்டில் ஒரு துன்பமும் இல்லாமல் அவர் நலமாகத் திரும்புவார் என்று தெரியுமானால், என் கண்கள் இவ்வாறு கலங்கி அழவேண்டிய நிலை இல்லையே'' என்கிறாள். காதலர் சென்றுள்ள தொலைதூர நாட்டிலிருந்து, அவரைப் பற்றி ஒன்றும் அறிய முடியாத நிலை காரணமாகவே கண்கள் கலங்குவதாகக் கூறுகிறாள்.

தான் எவ்வளவு துன்பத்திற்கு ஆளானாலும் கவலை இல்லை; தன் காதலன் துன்பம் இல்லாமல் இருந்தால் அதுவே போதும் என்கிறாள். தன்னலம் மறந்து, தலைவனுடைய நலனையே, நாடுகின்ற தலைவியின் நெஞ்சத்தை அறியமுடிகிறது.

### 3.4.6 காம நோய்

உயிர்களின் பாலியல் உறவுக்கு அடிப்படையாக இருப்பது காமம் ஆகும். அக்காமத்தின், விளைவாக மனிதர்கள் காதலைப் பெறுகிறார்கள். அக்காதலில் ஒருவரை ஒருவர் பிரியும் நிலையில் அக்காதலே நோயாகிறது. காமத்துன்பம் உற்றார், உண்ணாது உறங்காது கலங்கி நிற்பர் என்பது பற்றி சங்க இலக்கியங்களில் ஏராளமான குறிப்புகள் காணப்படுகின்றன.

தலைவனைப் பிரிந்தமையால் தலைவிக்கு ஏற்பட்டிருந்த காமநோய் மனநோயாக மாற்றம் பெற்று வருத்துகின்றது. தலைவியின் காமநோய் தலைவன் தலைவியைச் சேர்ந்ததும் காணாமல் போய்விட்டது. தலைவிக்கு காதலால் ஏற்பட்டக் காமநோய்க்கு காதலனே மருந்து. அவன்

பார்வையிட்டதும் காமநோய் குணமாகும். காதல்வழி ஏற்பட்ட நோய்க்கு காதலே மருந்தாகிறது.

### 3.4.7 காமம் மிக்க கழிபடர் கிளவி

பிரிவுத்துயரின் உச்சநிலையில் தோன்றும் காமம் மிக்கக் கழிபடர்கிளவியால், தலைவி குருவி, கிளி, சேவல், அலவன் போலும் உயிருள்ள அல்லது கடல், மலை, திங்கள், ஞாயிறு, போலும் உயிரற்றவைகளை விளித்து ஆற்றாது புலம்புவாள். இந்நிலையில் தலைவியின் உணர்வுகள் எல்லைமீறியவையாகவும், சொற்கள் நாணம் கடந்தனவாகவும் அமைதல் கூடும்.

காரணமின்றி சிரித்தல், துயரை அடக்காமல் தன் நிலையைப் புறத்தார்க்கு எடுத்துரைத்தல், மதிமயங்கி புலம்புதல் போன்றன காமம் மீக்கூர்ந்த நிலையில் தலைவியின் செயல்களாகக் கூறப்பட்டுள்ளன.

### 3.4.8 மக்கள் அல்லாதோர் கேட்பனவாக கூறல்

மக்கள் அல்லாதோரும் கேட்பனவாக கூறப்பெறும் என்பதை தொல்காப்பியர் செய்யுளியலில்

> ''ஞாயிறு, திங்கள், அறிவே நாணே
> கடலே, கானல், விலங்கே, மரனே
> புலம்புறு பொழுதே, புள்ளே நெஞ்சே
> அவையல பிறவும் நுதலிய நெறியால்
> சொல்லுந போலவும் கேட்டுந போலவும்
> சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர்''[13]

என்ற நூற்பாவின்படி ஞாயிறு, திங்கள், அறிவு, நாண், கடற்கரைச் சோலை, விலங்கு, மரங்கள், பொழுது, பறவைகள், நெஞ்சு இவையும் இவை போன்றன பிறவும், அவை பேசுவதை போலவும், கேட்பன போலவும் செய்யுள்களில் அமைதல் இயல்பாகும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

## 3.5 எப்பொழுதும் துன்பமே

மாலைப் பொழுது மட்டுமல்ல, எந்நேரமும் காமஉணர்வு ஏற்பட்டு தன்னை வருத்துவதாகத் தலைவி

> "காலையும் பகலும் கையறு மாலையும்
> ஊர்துஞ்சு யாமமும் விடியலும் என்றுஇப்
> பொழுது இடைத்தெரியின் பொய்யே காமம்"[14]

என்ற பாடலின் மூலம் காலை, நண்பகல் பிரிந்ததால் செயலற்று வருந்தும் மாலை ஊரார் துயிலும் நள்ளிரவு, விடியற்காலம் என்று இச்சிறு பொழுதுகளிடையே தோன்றுமாயின் அத்தகையோரிடம் தோன்றும் காமம் உண்மையன்று பொய்யேயாகும். பொழுதின் வேறுபாடு தெரியாது, துய்ப்பது தான் காமம் என மிகுந்து கூறினாள் என்பது தெளிவாகிறது.

### 3.5.1 இரவையும் பகலையும் வெறுத்தல்

தலைவன் தலைவியை விட்டு பிரிந்து சென்றதால், பிரிவாற்றாதத் தலைவி, என்னைக் கூடிய தலைவர் வந்து கூடுங்காலம் இரவோ, பகலோ என்று அறியேன். ஆதலால், என்னை வருத்தும் பகல் போய் இராப்பொழுது ஆகுக என்று கருதி பகலை வெறுப்பேன். அது சென்று இரவு வந்தவிடத்து அவ்விரவையும் வெறுப்பேன். கடலே யான் எய்திய வருத்தத்தைப் போக்குவார் வேறு யாரும் இல்லேன் என்று பிரிவில் கடலை நோக்கிப் புலம்பினாள்.

தலைவனும், தலைவியைப் பிரிந்ததால் இரவில் உறங்கவில்லை என்பதை

> "இரவினானும் இன்துயில் அறியாது
> அரவு உறு துயரம் எய்துப"[15]

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. இராப்பொழுதில் உறக்கம் கொள்ளாது. பாம்பு தீண்டினாற் போன்ற துன்பத்தைத் தான் கொண்டதாகத் தலைவன் தன்னுள் கூறினான் என்பது பெறப்படுகிறது.

### 3.6 காமத்தில் புலம்பல்

தலைவன் தலைவியைப் பிரிந்தமையால், பிரிவாற்றாமையால், காமம் மிகுதியாகி புலம்பினாள் என்பதை,

> ''மைஇல் சுடரே மலை சேர்தி நீ ஆயின்
> பௌவநீர்த் தோன்றிப் பகல் செய்யும் மாத்திரை
> கை விளக்காகக் கதிர்சில தாராய் என்
> தெய்யில் சிதைத்தானை தேர்கு''[16]

என்ற பாடலடி மூலம் அறிய முடிகிறது.

கதிரவனிடம் நீ மலையில் தோன்றினாய். ஆனால் நீ கடல் நீரிடத்து மீண்டும் வந்து தோன்றிப் பகற்பொழுதை உண்டாக்கும் அளவும் உன் கதிர்கள் சிலவற்றை நான் கை விளக்காகக் கொண்டு என் மேனியில் எழுதிய தொய்யிலை எழுதாமற் சென்றவனைத் தேடுதற்குத் தருவாயாக எனத் தலைவி, கதிரவனை நோக்கிக் காமம் மிகுதியால் கலங்கி மொழிகின்றாள்.

#### 3.6.1 முயலிடம் சினத்தல்

குறுமுயலைப் பார்த்து, என் காதலன் இருக்குமிடத்தைக் காட்டுவாயாக. அவன் இருக்குமிடத்தைக் காட்டாயாயின், உனக்குப் பகையாகிய சினமுடைய நாயை உன்னைப் பிடிக்குமாறு ஏவுவேன் என்று தலைவி கூறுவதாக கலித்தொகை 144வது பாடலின் வழி அறியமுடிகிறது.

#### 3.6.2 கடலையே நீரற்றுப் போகச் செய்வேன்

தலைவி தலைவனின் பிரிவால் வாடிய போது கடலிடம்,

> ''பேணான் துறந்தானை நாடுமிடம் விடாயாயின்
> பிறங்கு இருமுந்நீர் வெறு மண லாகப்
> புறங்காலின் போக இறைப்பேன் முயலின்
> அறம் புணையாகலும் உண்டு''[17]

என்னைப் பாதுகாவாது, பிரிந்த தலைவனைத் தேடி நான் கடலை நோக்கிச் செல்லுமிடத்து, நீ அதனை விட்டுப் போகாமல் இருந்தால் கடலின் இடமெல்லாம் நீர் அற்று, வெண்மணல் தோன்றும்படி என் புறங்காலால் இறைப்பேன். அது முடியுமோ எனின் அவ்வாறு முயன்றால் அறக்கடவுள் உதவியாதலும் உண்டு என்று கடலை நோக்கித் தலைவி துயர் மிகுதியால் கலங்கி மொழிகிறாள் என்பது பெறப்படுகிறது.

மேலும், கடலே ஊரையெல்லாம் தனக்குள்ளாக்கிக் கொண்டு காந்தும் கடுமையான நெருப்பில் நீர் ஊற்றினால் சீற்றம் குறையும். ஆனால் அது போலன்றி, அருளற்ற என் தலைவன் என்னை உறுத்திய இக்காமத்தீயோ தனக்கும் பகையாகிற நீருக்குள் புகுந்தாலும் வேகும்படி சுடும் என்று தலைவி நாணிறந்து கலங்கி மொழிவதை கலித்தொகை 144வது பாடலின் வழி தெரிந்துகொள்ள முடிகிறது.

தூர்க்க முடியாத கடலையே தூர்க்கும்படியாக கூறும் மனப்பாங்கு, தலைவி படும் பிரிவாற்றாமையால் ஏற்பட்ட துன்பத்தின் எல்லையைக் காட்டுகிறது.

## 3.7 தலைவனையும் வருத்தும் காமநோய்

தலைவியைப் பிரிந்த தலைவனும், பிரிவு ஆற்றாமையால், காமநோய் வருத்த துன்புற்றான் என்பதை

''அருளினும் அருளாள் ஆயினும் பெரிதாந்து
பின்னிலை முனியல்மா நெஞ்சே என்னதூஉம்
அருந்துயர் அவலம் தீர்க்கும்
மருந்து பிறிது இல்லையான் உற்ற நோய்க்கே''[18]

என்ற பாடலின் மூலம் அன்பில்லாத தலைவி நமக்கு அருள் செய்தாலும், அருள் செய்யாது பிரிந்து போனாலும் நீ மிகவும் உள்ளம் அழிந்து, இரந்து வழிபட்டு நிற்றலை வெறுக்காதே, யான் கொண்ட காம நோயோடு கலந்த துன்பத்தைத் தவிர, வேறொன்றும் சிறிதளவு கூட மருந்தாகும்

தன்மையுடையுது இல்லை என்று தலைவன் தன்நெஞ்சை நோக்கிக் கூறினான் என்பது பெறப்படுகிறது.

காமம் மிகுதியால் ஏற்பட்ட துன்பத்தை வேறு யாரிடமும் கூறமுடியாது. ஆகையால் தலைவி கடலிடமும், தலைவன் தன் நெஞ்சிடமும் கூறிக் கொள்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள முடிகிறது.

## 3.8 மெலிதலால் வளை நெகிழ்தல்

தலைவன் தலைவியை பிரிந்து சென்றமையால், தலைவி தனிமைத் துன்பத்தால் மிகவும் வருந்தியதால், மிகவும் மெலிந்து பொலிவு இழந்து காணப்பட்டாள். அதனால் மென் கை வளை நெகிழ்ந்தது. அந்நெகிழ்வு பிறருக்கு தெரிந்தால் அலர் தூற்றுவார்களே, அம்மெலிவு தெரியாமல், சிறுவளைவிற்கும் கடையில் அவற்றை வாங்கிக் கொண்டு கையில் அணிவோம் என்று தலைவி கூறுவதான குறுந்தொகை 117வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

### 3.8.1 தொய்யில் எழுதுதல்

மகளிர்தம் மார்பில் தொய்யில் எழுதுவர். தலைவன் தலைவிக்கு தொய்யில் வரைவான் என்பதை குறுந்தொகை 276, 384வது பாடலின் மூலம் அறியமுடிகிறது. தலைவனைப் பிரிந்த தலைவி தலைவன் இல்லாததால் தொய்யில் எழுதாமல் வருந்துவாள் என்பது பெறப்படுகிறது.

## 3.9 வெப்பப் பெருமூச்சு

தலைவன் தன்னை விட்டுப் பிரிந்து செல்ல இருக்கிறான் என்பதை உணர்ந்து கொண்ட தலைவி, தன் கண்ணின் பார்வையை மறைத்த நடுக்கத்தைச் செய்யும் நீரையுடைய பார்வையோடு தன் மார்பில் அணைத்த புதல்வனது புல்லிய தலையிலுள்ள செங்கழுநீர் மாலை மோர்ந்து பெருமூச்சு விட்டாள். அதனால் அம்மலர் மாறி பொலிவு இழந்தது என்பதை அகநானூற்று 5 ஆம் பாடல் தெளிவாக்குகிறது.

## 3.10 தென்றலும் கூற்றுவன்

தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்கு தென்றலும் கூற்றுவன் போல உள்ளது.

> "மாலை வந்தன்று மன்ற
> காலை அன்ன காலை முந்துறுத்தே"[19]

என்ற ஐங்குறுநூற்று பாடலின் மூலம் எமனைப் போன்ற தென்றல் காற்றை முன்னிறுத்தி மாலைப்பொழுது வந்தது. இனி வருந்துவது உறுதி என்றாள். மாலை வேளையில் பிரிவுக் காலத்தே தென்றலும் கூற்றுவனைப் போல வருத்தியது என்பதை அறியலாகிறது.

## 3.11 தலைவன் இருக்குமிடம் தேடிச் செல்லாமை

தலைவன் பிரிவால் தலைவியின் உடம்பும் உயிரும் வாடும் காலத்திலும், ஏன் இந்த நிலை என்று தலைவி வருந்துவாளே அன்றித் தலைவன் இருக்குமிடம் தேடிச் செல்வது இல்லை. இதை,

> "உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்
> என் உற்றனகொல் இவையெனின் அல்லது
> கழிவோன் சேர்தல் கிழத்திக்கு இல்லை"[20]

என தொல்காப்பிய நூற்பா குறிப்பிடுகிறது.

தலைவன் பிரிந்து சென்றபின், அப்பிரிவினால் வருந்தி, ஒரு பக்கத்தில் இருந்து, தன் மனத்தோடு தலைவி பேசும்போது தலைவன் இருக்குமிடம் செல்லலாம் என்று தலைவி கூறுவாள்.

தலைவன் இருக்குமிடம் செல்லலாம் எனத் தலைவி கூறுவாளே தவிர செல்லமாட்டாள் என்பார், டாக்டர் தமிழண்ணல் அவர்கள்.

## 3.12 பல்லி சொல் கேட்டல்

வீட்டிலே பல்லியின் ஒலியைக் கேட்டால் அது ஏதோ செய்தியை அல்லது வருங்காலக் குறிப்பை உணர்த்துகிறது என்பது பழங்கால மக்களின் நம்பிக்கை.

இன்ன திசையில் இவ்வாறு பல்லி ஒலித்தால் நன்மை என்றும், வேறு திசையில் வேறு வகையில் ஒலித்தால் தீமை என்றும், அவர்கள் அதன் ஒலிக்கும் பயன்காணும்முறை வைத்திருந்தார்கள்.

காதலனைப் பிரிந்து வாழும் காதலி, மாலையில் தன் படுக்கையில் சோர்ந்து கிடக்கும் நிலையில், பல்லி ஒலி ஒலிக்கிறது. அதைக் கேட்டதும் காதலியின் நெஞ்சம் திடுக்கிடுகிறது.

ஒலி கேட்ட திசை நோக்கித் தொழுகிறாள். என் காதலரைப் பற்றி நல்ல செய்தியாகச் சொல், அவர் நன்றாக இருக்கும் செய்தியாக இருக்க வேண்டுமே என்று நடுங்கியதை

''மையல் கொண்ட மதனழி இருக்கையள்
பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறுஎன நடுங்கிப்
புல்லென் மாலையொடு பொருங்கொல்தானே''[21]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

சுற்றத்தார் வழியனுப்ப வேற்று நாட்டில் பொருளீட்ட வந்து, பெரும் பொருள் ஈட்டி, வினை முடிந்த கையோடு, தலைவியை காணும் ஆவலில் பாலை வழியாக வந்து கொண்டிருக்கிறேன். நான் வரும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்து நாட்களின் எண்ணிக்கையை சுவரில் குறித்து வைத்த தலைவி அச்சுவரும் நனையுமாறு கண்ணீர்விட்டாள். அக்கண்ணீர் அவள் காதணியை நனைக்கும் அளவிற்குத் தெறித்தது. நிமித்தத்திற்காகக் காத்திருக்கும் என் தலைவியின் செவிகளில் பல்லி என் வரவினைச்

சொல்லுமோ? அவள் துயரத்தைப் போக்குமோ என்னும் பொருளில் தலைவன் நினைப்பதை,

''வேற்று நாட்டு உறையுள் விருப்புறப் பேணி
. . . .
உள்ளுதொறு படூஉம் பல்லி
புள்ளுத் தொழுது உறைவி செவி முதலானே''[22]

என்ற அகநானூற்றுப் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

## 3.13 வாடைக் காற்று

வாடைக்காற்று வந்தது. தலைவனைப் பிரிந்திருக்கும் எனக்கு காமவேட்கை நோயைத் தந்தது. இந்நிலை ஆகியும் கூட அவர் வரவில்லையே. என் மனதில் உள்ள மென்மைத் தன்மை, அவர் மனத்தில் இல்லாமல் போனதேன். அவர் உள்ளத்தை நான் எவ்வாறு அறிவேன் என்று தலைவி உரைக்கின்றாள் என்பதை

''விசும்பு விசைத்து எழுந்த கூதளங் கோதையின்
பசுங்கால் வெண்குருகு வாய்பறை வளைஇ
. . .
அலர் அரும்பு ஊழ்ப்பவும் வாராதோரே''[23]

என்ற அகநானூற்றுப் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

தலைவன் இல்லாத போது வாடைக்காற்று தொல்லை தருகின்றது. உன்னை நினையுந்தோறும் வீட்டு வாயிலில் உள்ள மரம் வளையும்படியாக அதனைப் பிடித்துக் கொண்டு, பலரும் உறங்குகின்ற நள்ளிரவில் நெடுநேரம் நிற்கின்ற நிலை உள்ளது. அதுவும் இனிமைதான் என்று கூறுவதை,

''நும்மில் புலம்பின் நும் உள்ளுதோறும் நலியும்
தன் வரலசைஇய பண்பு இல் வாடை
பதம்பெறு கல்லாதிடம் பார்த்து நீடி
மனை மரமொசிய ஒற்றிப்
பலர் மடி கங்குல் நெடும்புறநிலையே''[24]

என்ற பாடல்வரி மனை மரமுமாகிய என்ற சொல்லாட்சி தலைவியின் ஆற்றாமையை நுட்பமாக விளக்குகிறது.

பிரிந்து மீள்பவன் வாடைக்காற்றைப் பார்த்து பேசுகின்றான். இதோ நான் ஊருக்கு வந்துவிட்டேன். அதுவரை, "வாடையே நல்லோள் ஊரை நாடாதே" என்று வேண்டுகோள் விடுக்கிறான் என்பதை குறுந்தொகை 235வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, அன்பின் வயப்பட்டதால் பிரிவுத் துன்பத்தைத் தாங்க முடியவில்லை. எந்தெந்த பொருளையோ கண்டு வருந்துகிறாள். சீற்றமுங் கொள்கிறாள். முடிவாக காற்று தன் உடம்பில் பட்டவுடன் அவளது கோபம் காற்றின் மீது பாய்கிறது.

"ஏ காற்றே, உன்னைக் கொன்று விடுகிறேன் பார். உனக்கு எதிரிடையாகப் போகும் கதிர்களைக் கொண்ட கதிரவன் பக்கமெல்லாம் சென்று, என்னுடைய இயற்கை அழகைப் போற்றி அனுபவித்துப் போன காதலனை கண்டு வந்து இங்கு சேர்ப்பிக்கவில்லை. அப்படி சேர்ப்பிக்கவில்லையானால் என் உள்ளத்திலிருந்து எழுகின்ற கவலைக்குரிய கண்ணீரை உன்மீது தெளித்து, அந்த அழலின் வெம்மையால் மண்ணகமெங்கும் பரவி நிற்கின்ற உன்னைச் சுட்டு விடுகிறேன் பார்" என்று சூளுரைக்கின்றாள் என்பதை கலித்தொகை 144வது பாடலடி மூலம் அறியலாம்.

### 3.14 கிளியோடு பேசுதல்

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். தலைவிக்கு பிரிவுத்துன்பம் ஏற்பட்டது. பிரிவாற்றாமையினால் தலைவி தான் வளர்த்த பைங்கிளியை முன் கையில் ஏந்திக் கொண்டு, வீட்டார் யாரும் அறியாதபடி அதனோடு மெல்ல பேசுகிறாள், "தலைவர் இன்று வருவார் என்று சொல், அவரைப் பற்றி சொல்" என்று மெல்லச் சொல்கிறாள் என்பதை

''சொந்தாரப் பைங்கிளி முன் கை ஏந்தி
இன்று வரல் உரைமோ சென்றிசினோர் திறத்து என
இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென
மழலை இன் சொல் பயிற்றும்
நாணுடை அரிவை மாண் நலம் பெறவே''[25]

இப்பாடலில் தலைவி யாருக்கும் தெரியாமல் மழலை பேசும் தன் வளர்ப்பு பிள்ளையாகிய கிளியிடம் ரகசியமாக உரையாடுகிறாள் என்பது பெறப்படுகிறது.

### 3.14.1 சுவரில் கோடிடுதல், வட்டமிடுதல்

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றுவிட்டான். தலைவன் தம்மைப் பிரிந்து சென்ற நாட்களை கணக்கிட, தலைவி சுவரில் *(1111)* கோடு வரைவாள் என்பதையும், வட்டக்குறி *(0000)* செய்தும் கணக்கிட்டு வருந்தியிருப்பாள் என்பதை அகநானூறு **351** வது பாடல் மூலமும் அறியமுடிகிறது.

## 3.15 கடலின் அலைகள்

தன் பக்கத்தில் தலைவன் இல்லையென்றால், அவனை மணந்தவளின் மனநிலை பிரிவாற்றாமையால் பலவாறாக எண்ணி எண்ணி ஏக்கத்தால் மோதுகிறது.

நெய்தல், நிலத்தைச் சார்ந்துள்ள கடற்கரையில் தலைவி ஆழ்ந்த துயரத்துடன், நள்ளிரவு என்றும் பாராமல் தனித்துநின்று, கடற்கரையில் கடலின் ஓசையைக் கேட்கிறாள். ஓசையைக் கேட்ட அவளுக்கு நம்மைப் போலவே தலைவனை பிரிந்த காரணத்தால் தான் இப்படி ஓயாது ஓலமிடுகிறதோ? அதனால்தான் என்னைப் போலவே தூக்கமின்றி அலைந்து கொண்டிருக்கிறதா? என்று நெஞ்சினுள் கேட்கிறாள் என்பதை

''அன்னை வாழி வேண்டு அன்னை - என் தோழி
சுடர் நுதல் பசப்பச் சாஅய் படர் மெலிந்து
தண் கடற் படுதிரை கேட்டொறும்
துஞ்சாள் ஆகுதல் நோகோயானே''[26]

என்ற ஐங்குறுநூற்று பாடலடி மூலம் அறியமுடிகிறது.

உயிரும் உடலும் போல் ஆகிவிட்ட இருவருள் ஒருவர் பிரிந்து சென்று வெளியில் தங்கியிருந்தாலும், அவர்களிடையே துன்பம் மேலிடுகிறது.

தலைவனொருவனும் பல்லாண்டு காலமாக பிரிவாற்றாமையினால் துயில் கொள்ளாது இருக்கும் கடல் போல, தானும் துயில் கொள்ளாது இருப்பதாகக் கூறினான் என்பதை

**''உரவுக்கடல் ஒலித்திரை போல**
**இரவினானும் துயில் அறியேனே''**[27]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

## 3.16 நிலா முகம்

தலைவன் தன் மனம் விரும்பும் காதலியை இங்கு நிலவினுக்கு ஒப்பிடுகின்றான்.

**''அனிமுகம் மதி ஏய்ப்ப அம்மதியை நனி ஏய்க்கும்**
**மனிமுக மாமழை நின்பின் ஒப்ப''**[28]

அன்பின் மிகுதியால் தன் காதலியின் முகம், முழுநிலாவைப் போல் தோன்றுகிறது என்று கூறுவதை கலித்தொகை பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 3.16.1 பாலையில் நிலவு

வறண்ட பாலை நிலத்திலே, மூங்கில் முறிந்து விழும்படியாக பலத்தக் காற்று வீசுகிறது. அப்பகுதியில் இரவு நேரத்தில் தலைவன் தனியாகச் செல்கிறான். அவன் கண் எதிரே இடம் விட்டு இடம் செல்லும் நிலவு தென்படுகிறது. அதைப் பார்த்தவுடன் அவனுக்கு தன் ஊரில் தன் வீட்டில் இருக்கும் மற்றொரு நிலா, நினைவிற்கு வருகிறது. அந்நிலா அவன் தலைவியே.

ஒரே இடத்தில் நிலைபெற்று வாழும் தேய்தல் இல்லாத முழுநிலவு தன் தலைவி அவள் மீது அவனுள்ளத்தில் ஏக்கம் பிறக்கிறது.

**''திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்**
**எய்துஉண்டு ஓர் மதிநாள் திங்கள்''[29]**

என்ற நற்றிணைப் பாடலடி மூலம், இவ்வாறு மனைவியைப் பிரிந்து சென்று பொருள் தேடப் போகும் வெளியிடத்திலும், அவள்மேல் கொண்ட அன்பு சிறிதும் குறையாமல், அவள் நினைவாகவே தலைவன் இருக்கிறான் என்பதைத் தெளிவாக்குகிறது.

### 3.16.2 இன்னல் தரும் நில்வு

களவுக் காலத்தில், நிலவின் ஒளிக்கதிர்கள் இரவு நேரத்தில் தலைவியைக் காண வருகின்ற தலைவனின் வரவிற்கு பெருந்தடையாக இருக்கின்றது. இதனால் தலைவனைக் காணமுடியாத தலைவி,

**''எல்லி வருநர் களவிற்கு**
**நல்லை அல்லை நெடு வெண்ணிலவே''[30]**

என்ற குறுந்தொகை பாடல்வரி மூலம் நிலவிடம் பேசுகிற செய்தியை அறியமுடிகிறது.

நிலா வராமல் இருந்துவிட்டாலோ, அல்லது சென்றுவிட்டாலோ தலைவன் தலைவியைக் காண்பதில் தடையேதும் இருக்காது. அவ்வாறு சென்றுவிட்ட நிலவைக் கண்டு மகிழ்ந்ததை,

**''நெடுநிலா திறந்துண்ண நிரை இதழ்வாய்விட்ட**
**கடிமலர் கமழ்நாற்றம் கங்குல் வந்து அலைத்தரூஉம்''[31]**

**''நிலவும் மறைந்தன்று இருளும் பட்டன்று''[32]**

என்ற கலித்தொகை, நற்றிணைப் பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது.

### 3.16.3 நிலவும் தூதும்

தலைவி தலைவனைக் காணச் செல்ல இங்கு நிலவு தூதாக வருகின்றது.

"கானமும்
நனிநன்று ஆகிய பனி நீங்குவழிநாள்
பால்எனப் பரத்தரும் நிலவின் மாலைப்
போது வந்தன்று தூதே"[33]

இச்செறிக்கப்பட்ட தலைவி உடன்போக்கிலே காதலனுடன் செல்ல, தோழி துணிவு கொள்ளச் செய்கிறாள். நிலவினைக் கொண்ட மாலைப்பொழுதும் தலைவனிடமிருந்து தூதாக வருகின்றது.

இரவு நேரத்தில் எல்லோரும் உறங்கும் வேளையில், உறக்கம் வராமல் தவிக்கும் பொழுது தனிமை அவளைப் பெரிதும் வாட்டுகிறது. அந்த நேரம் தன் துன்பத்தை யாரும் அறியாமல், அவள் நிலவிடம் பகிர்ந்து கொள்கிறாள். தன் துயர் தீர்க்க வழியும் கேட்கிறாள் என்பதை

".....
மால்பிடர் அறியா நிறையுறு மதியம்
சால்பும் செம்மையும் உடையை ஆதலின்
நிற்கரந்து உறையும் உலகம் இன்மையின்
எற்கரந்து உறைவோர் உள்வழிகாட்டாய்"[34]

என்ற நற்றிணை பாடல் வழி அறியமுடிகிறது. நிலவே இவ்வுலகில் உனக்குத் தெரியாத இடம் எதுவும் இல்லை. உன் ஒளிபடாத பகுதியே இல்லை. எனவே உன் கண்ணில் படாமல் மறைந்து இருக்கும், என் தலைவன் சென்ற பகுதியைக் காட்டமாட்டாயா என அத்தலைவி நிலவிடம் மன்றாடுவதில் அவளின் ஏக்கம் முழுமையும் வெளிப்படுகிறது.

தன் துன்பத்தை நெருங்கிய தோழியிடம் கூட அவள் முழுமையாகப் பகிர்ந்து கொண்டதில்லை. பிறரிடம் சொன்னால், தன் நிலையைக் கண்டு

வருந்தி, அதனால் அவர்கள் அவனைப் பழிப்பார்களோ என்று தலைவி தயங்கியதை அறியமுடிகிறது.

### 3.16.4 நிலவும் துயரும்

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றமையால் தலைவி வாடி தன் பொலிவு இழக்கிறாள் என்பதை

''ஒண்சுடர் ஞாயிற்று விளக்கத்தான் ஒளிசாம்பும்
நண்பகல் மதியம் போல் நலம் சாய்ந்த அணியாட்கு''[35]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. பிரிந்து சென்ற தலைவன் வாரா திருந்தமையால் தலைவி பிரிவாற்றாமையால் புலம்புகிறாள் என்பதை படம் பிடித்துக் காட்டுவதாக உள்ளது.

### 3.16.5 நிலவினை விளித்துக் கூறல்

பிரிந்து சென்ற காதலனைக் காணாது தலைவி பிரிவாற்றாமையால் நிலவினை விளித்து இவ்வாறு கூறுகிறாள்.

''மதியொடு பாம்பு மடுப்பேன் மதிதிரிந்த
என் அல்லல் தீராய் எனின்''[36]

தலைவன் இருக்கும் இடத்தைக் காட்டவில்லை எனில் மதியுடன் சேர்த்து பாம்பினை விழுங்கச் செய்வேன் என்று கூறுகிறாள்.

## 3.17 அன்பு நெஞ்சங்கள் கூடி மகிழ்தல்

காதலர்கள் இருவரும் கூடியிருக்கையில் நிலவு வெளிப்படுமாயின் அவர்களின் உள்ளம் மகிழும் ஏன்பதை,

''நிலவுப் பயன்கொள்ளும் நெடுவெண் முற்றத்து''[37]

''வெண்ணிலவின் பயன்துய்த்தும்''[38]

என்ற நெடுநல்வாடை, பட்டினப்பாலை பாடலடிகளின் மூலம் நிலவொளியில் அன்பு நெஞ்சங்கள் கூடி மகிழ்ந்தமையை அறியமுடிகிறது.

### 3.18 பிரிவில் துன்பம்

மாலை நேரத்தில் எல்லா உயிரினங்களும் தத்தம் துணையை சேர்கின்றன. ஆனால் தலைவன் வரவில்லையே என பிரிவாற்றாமையில் தலைவி

> **"இகல் மிகு நேமியான் நிறம் போல இருள்இவர**
> **நிலவுக் காண்பது போல அணிமதி ஏர்தர"**[39]

என்பதை கலித்தொகை பாடலடி மூலம் அறியமுடிகிறது.

உடல் வருந்தி தலைவியின் அழகு நலன் கெடுகிறது என்பதை,

> **"நீள்கதிர் அவிர்மதி நிறைவு போல் நிலையாது**
> **நாளினும் நெகிழ்பு ஓடும் நலம் உடன்நிலையுமோ"**[40]

என்ற கலித்தொகை பாடலடி மூலம் நீண்ட கதிர்களைச் சொரிகின்ற சந்திரனின் நிறைவினைப் போல் நிலைத்து இல்லாமல், நாளுக்கு நாள் அவள் அழகு நிலைத்திராமல் அழிந்து விடுகிறது என்ற கருத்தைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

#### 3.18.1 பொழுது கண்டு இரங்கல்

வைகறை, விடியல், நண்பகல், ஏற்பாடு, மாலை, யாமம் என நாளின் கூறுகளாக சொல்லப்படுகின்ற ஆறு பொழுதுகளில், மாலைப்பொழுது பிரியாது சேர்ந்திருக்கும் தலைவன் தலைவியர்க்கு இன்பம் தரும் பொழுதாகவும், பிரிந்திருக்கும் தலைவன் தலைவியர்க்கு துன்பம் தரும் பொழுதாகவும் அமையும்.

புள்ளினம், விலங்கினம் என்று இவ்வாறான பிற உயிரினங்களும் பிரிந்து சேரும்பொழுது மாலைப்பொழுது ஆகும். தலைவியைப் பிரிகின்ற

தலைவன், தலைவியை வந்து சேரும் பொழுதும் மாலைப்பொழுதே எனக் கூறுவான்.

பிரிந்தவர்க்கு மாலைப் பொழுதன்றி எல்லாப் பொழுதும் துன்பம் தரும் பொழுதாகவே அமையும் என்பதை

**''சுடர் செல் வானம் சேப்பப் படர்கூர்ந்து
எல்லறு பொழுதின் முல்லை மலரும்
மாலை என்மனார் மயங்கியோரே
குடுமிக் கோழி நெடு நகரியம்பும்
பெரும்புலர் விடியலும் மாலை
பகலும் மாலை துணையிலோர்க்கே''**[41]

என்ற குறுந்தொகைப் பாடலின் மூலம் பிரிந்தோருக்கு எல்லாப் பொழுதும் மாலைப்பொழுதாய் அமையும் என்பதால் மாலைப்பொழுதும் பிரிந்தார்க்கு துன்பம் செய்யும்பொழுது என்பதை குறிப்பாகவும் சிறப்பாகவும் கூறுகிறது என்பதை அறியமுடிகிறது.

வினைவயிற் பிரிந்த தலைவன் தலைவியிடம், முதுவேனிற் காலத்தில் பிரிவான் என்பதும் கார்காலத்தில் (ஆவணி, புரட்டாசி) மீண்டும் வருவேன் என்று கூறிச் செல்வதும் அகப்பாடல்கள் வழி தெரியலாகிறது.

பிரிவுக்காலம் பிரிந்தோர்க்கு வரையறுக்கப்பட்டது என்பதை,

**''பிரிவின் நீட்டம் நிலம் பெயர்ந்துறைவோர்க்கு
உரியதன்றே யாண்டு வரை யிறுத்தல்''**[42]

என்ற இறையனார் அகப்பொருள் மூலம் பிரிவின் காலம் இரண்டு மாதங்கள் என்பதைக் குறிக்கும் என்பதை அறியமுடிகிறது.

துன்பம் தரும் மாலைப்பொழுது, தனித்து அவர் பிரிந்து இருக்கும் நாட்டில் இல்லாது போகுமோ, இருப்பின் இம்மாலைப்பொழுதில் சேர்ந்திருந்து பெற்ற இன்பப் பயனை எல்லாம் நினைவில் கொண்டு வருவாரோ என்று தலைவி பிரிவாற்றாமையால் தோழியிடம் புலம்புவதை,

''புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொல் தோழியவர் சென்ற நாடே''[43]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

தலைவன் பொருள் காரணமாகவும், வேந்துவினைக் காரணமாகவும், தனியனாய், தலைவியைப் பிரிந்திருக்கும்போது, வினை முடிந்த பின் மாலைப்பொழுது துன்பத்தை அவனும் உணர்வான் என்பதையும் அம்மாலைப் பொழுதில் தலைவியைச் சேர எண்ணுவான் என்பதையும்,

''கால் இயல் செலவின் மாலை எய்திச்
சின்னிரை வால்வளைக் குறுமகள்
பன்மாணாம் மணந்து உவக்கும்மே''[44]

என்ற பாடலடி மூலம், நாளை அந்திமாலைப் பொழுதின் முன்னரே காற்றின் வேகமாகச் சென்று தலைவியைச் சேரவேண்டும் என்பதாக தலைவன் தன் தேர்ப்பாகனிடம் கூறுகின்றான்.

### 3.18.2 கோவலர் குழலோசையும் குயிலோசையும்

வேனிற்காலமும், குயிலோசையும் இணைந்திருப்பவருக்கு மகிழ்வைத் தரும் காலமாகும். அப்பருவத்தில் தனித்திருக்கும் தலைவியால் பிரிவுத் துயரைத் தாங்கமுடியவில்லை.

பிரிந்தார்க்குத் துன்பத்தைத் தரும் யாழின் கண் செவ்வழிப் பண்ணைப்பாட அறிய உயிர்களை வருத்தும், அவ்வோசையை, மாரிக்காலத்தில், மாலைப்பொழுதில் தனியாளாயிருந்த தலைவி கேட்டு உள்ளம் சோர்ந்தாள்.

விளரிப்பண் ஏக்கத்தையும், இரங்கலையும் தோற்றுவிக்கும் தன்மையது. தலைவியின் இரங்கல் விளரிப்பண்ணுடன் இணைத்துப் பேசப்படுகிறது. பிரிவுத்துயருற்ற தலைவிக்கு, தலைவன் செல்லும் தேர்மணியோசை விளரிப்பண்ணாகக் கேட்கிறது என்று கூறுமிடத்து விளரிப் பண்ணின் இயல்பை உணரலாம்.

தலைவன் தன் மீது அன்பில்லாத காரணத்தினால், தான் பிரிந்து சென்றானோ என்ற நிலையில் தலைவி வருந்துகிறாள். குறித்துச் சென்ற பருவம் வந்தும் தலைவன் வரவில்லை. இப்பருவத்தில் கோவலர்களின் குழலோசையும், குயிலோசையும் கேட்கும்போது துணையைப் பிரிந்தவர்கள் ஆற்றியிருக்க முடியாது என்பதை

**''காமர் வேனில் மன்னிது**
**மாணலம் நுகரும் துணையுடையோர்க்கே''[45]**

என்பதும்

குயில்கள் பாடும் பொழுது, அதைக் கேட்ட தலைவியின் கண்களில் கண்ணீர் பெருகுகிறது. அதைத் துடைத்தல் எளிதல்ல என்பதை

**''புகைப் புரையம் மஞ்சூர**
**நுகர் குயிலக எங்குரல் கேட்போர்க்கே''[46]**

என்பது வேனிற்காலமும் குயிலோசையும் இணைந்திருப்போர்க்கு இன்பம் தரும் காலமாகும். அப்பருவத்தில் தனித்திருக்கும் தலைவியால் பிரிவுத் துயரைத் தாங்க முடியவில்லை என்பது பெறப்படுகிறது.

**''புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோற்**
**கல்லாக் கோவலர் ஊதும்**
**வல்லாய்ச் சிறுகுழல் வருத்தாக்காலே''[47]**

கோவலர்களின் வேங்குழல் ஓசை தலைவியின் ஆற்றாமையை மிகுதிப்படுத்துகிறது என்பதை அறியலாம்.

### 3.18.3 மாலைப் பொழுது

மாலைப்பொழுதில் வானத்தில் பறவைகள் பறந்து செல்கின்றன. இரை தேடிச் சென்ற பறவைகள் மராமரத்தில் கூடுகட்டி வசிக்கின்றன. கூட்டில் இருக்கும் தன் குஞ்சுகளின் வாய்க்குள் செருகுவதற்காக இரையை எடுத்துச் செல்வதால் விரைவாகப் பறந்து செல்கின்றன என்பதை

"ஞாயிறுபட்ட அகல்வாய் வானத்து
அளியதாமே கொடுஞ்சிறைப் பறவை
இறையுற ஓங்கிய நெறிஅயல் பராகத்த
பிள்ளை உள்வாய்ச் செர்இய
இரை கொண்டமையின் விரையுமால் செலவே"[48]

இப்பாடலடி மூலம் அறியமுடிகிறது. பார்க்கும் போது, பறவைகள் பறந்து சென்று தன் குஞ்சுக்காக இரையை ஊட்டுகிறது என்பதும், காதலால் வாடிய காதலி தன் தலைவனுடைய பிரிவால் மிக நைந்து சாயங்காலம் பொழுதுகண்டு வருந்திக் கூறியது என்ற இக்கருத்து 'தமிழ் இலக்கிய வரலாறு' என்ற நூலில் மு.வ.அவர்கள் எழுதியலிருந்து பெறப்படுகிறது.

### 3.18.4 மாலைத் துன்பம்

மாலைப்பொழுது காதலர்க்குத் துன்பம் தருகிறது. போர்க்காரணமாகப் பாசறையில் தங்கியிருக்கும் தலைவன், கார்காலத்தைக் கண்ட நிலையில் வருந்துகிறான். தன்னை நினைத்து வருந்தாது தலைவியின் நிலை குறித்து வருந்துகிறான்.

அரசுனுக்காகப் போர் செய்யும் நிலைக்குத் தள்ளப்பட்டாலும் தன் கடமையிலிருந்து அவன் தவறுவதில்லை. போரில் வெற்றி பெற்றால் தலைவன் வீடு திரும்ப நேரிடும். தோல்வி எனில் தன் இன்னுயிர் துறக்க நேரிடும். இத்தகைய இக்கட்டான சூழலில் சிக்கியிருக்கும் தலைவன், தன்னை எண்ணாது தன் வரவுக்காக காத்திருக்கும் தலைவியை நினைத்து வருந்துகிறான் என்பதை

"யாங்கு ஆகுவள் கொல்தானே - ஓங்குவிடைப்
படுசுவற் கொண்ட பகுவாய்த் தெள்மணி
ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ
பையுள் நல்யாழ் செல்வழி வகுப்ப
ஆர்உயிர் அணங்கும் தெள்இசை
மாரி மாலையும் தமியள் கேட்டே"[49]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. கோவலர் ஆநிரைகளை மேய்ச்சலுக்காக அழைத்துச் சென்றுவிட்டு மாலைப் பொழுதில் திரும்பி

வருவர். உயர்ந்த காளையின் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணியோசை எல்லா இடங்களிலும் கேட்கும். யாழின் ஓசையையும், மணியின் ஓசையையும் கேட்டபடி தனித்திருக்கும் நம் தலைவி பெரிதும் துன்புறுவாளே என்று நெஞ்சிடம் பேசுகிறான்.

பகல் நேரம் மட்டுமல்ல, இரவு நேரத்திலும் கூட போர் நடைபெற்றது என்பதை,

''கழிப்பிணிக் கறைத்தோல் பொழிகணை உதைப்பு
தழங்கு குரல் முரசமொடு முழங்கும் யாமத்து
கழித்து உறை செறியா வாளுடை எறுழ்த்தோள்
இரவுந் துயில் மடிந்த தானை
உரவுச் சின வேந்தன் பாறையேமே''[50]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 3.18.5 முல்லை மலரும் கார்காலம்

தலைவன் தலைவியை பிரிந்து செல்லும் போது, முல்லை மலரும் கார்காலத்தில் வருவேன் என்று கூறிச் சென்றான். கார்காலமும் வந்தது. முல்லையும் மலர்ந்தது. குறித்துச் சென்ற பருவத்தில் தலைவன் வரவில்லை. தலைவி கார்காலத்தில், மாலையில் மலரும் முல்லை தன் அரும்புகளைக் காட்டித் தனித்திருக்கும் தன்னைப் பார்த்து சிரிப்பதாக, எண்ணுகிறாள் என்பதை

''இளமை பாரார் வளம்சை இச் சென்றோர்
இவணும் வாரார் எவணரோ வெனப்
பெயல் புறந் தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை இலங்கெயிறாக
நகுமே தோழி நறுந்தண் காரே''[51]

என்ற குறுந்தொகை பாடலில் தனது பிரிவாற்றாமையை உரைக்கின்றாள்.

தலைவன் வருவதாகச் சொன்ன பருவத்தில், தலைவி அவன் வரவையே எதிர்பார்த்திருப்பாள். அவன் கூறிய பருவத்தின் எல்லா நாளும்

எல்லாப் பொழுதும் அவன் வரும் வழியில் தன் விழியை வைத்துப் பார்த்திருப்பாள் என்பதை,

''வைகல் வைகல் வைகவும் வாரார்
எல்லா எல்லை எல்லவும் தோன்றார்
யாண்டுளர் கொல்லோ தோழி ஈண்டிவர்
சொல்லிய பருவமோ இதுவே பல்லூழ்
புன்புறப் பெடையொடு பயிரிபின் புற
இமைக்கண் ஏதாகின்றதோ ஞெமைத்தலை
ஊனசைஇ யொரு பருந்திருக்கும் உசுக்கும்
வானுயர் பிறங்கல் மலையிறந்தோரே''[52]

என்ற பாடல் வழி அறியமுடிகிறது.

### 3.18.6 தலைவன் பிரிவில் பூக்காரியைக் கண்டு வருந்துதல்

தலைவன் தலைவியை விட்டு பிரிந்து சென்றுவிட்டான். இளவேனில் காலம் வந்தும் தலைவன் வராமையால் பிரிவுத் துன்பத்தில் தலைவி பூக்காரியைக் கண்டு வருந்துகிறாள் என்பதை நற்றிணை 118வது பாடலின் மூலம் அறியமுடிகிறது. பாதிரி மலரின் மணம் மிகுந்து பிரிந்தார்க்குத் துன்பம் செய்வதாகலின் பூ விற்பவளை நோக்கி வருந்திக் கூறினாள் என்பதும் புலப்படுகிறது.

### 3.18.7 முல்லை மலர்

பிரிந்த தலைவனும் வருத்தம் கொள்கிறான். தலைவனை பிரிந்த தலைவி, முல்லை மலர்ந்தது கண்டு எப்படி வருத்தம் கொண்டளோ இதுபோலவே தன்னையும் முல்லை மலர் மலர்ந்து, வருத்தம் செய்வதாகத் தலைவன் கூறுகிறான். இதனை

''முல்லை வாழியோ முல்லை நீநின்
சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை
நகுவை போலக் காட்டல்
தகுமோ மற்றிது தமியோர்மாட்டே''[53]

இப்பாடலின், மூலம் பிரிவால் தலைவிக்கு உளதாய துன்பம் எல்லாம் தலைவனுக்கு உண்டு என்பது தெளிவாகிறது.

### 3.18.8 கார்காலமே கேட்டல்

தலைவன் கூறிச் சென்ற கார்காலத்தில், அவன் வராதபோது தனித்திருக்கின்ற தலைவியைக் கார்காலமே விளித்து, 'நின் தலைவரை எங்ஙனம் பிரிந்திருந்தீர் எனக் கேட்பது' தலைவியின் பிரிவுத் துன்பத்தை மிகுதிப்படுத்துவதாக உள்ளது என்பதை,

> ''வன்பரல் தெள்ளறல் பருகிய இரலைதன்
> இன்புறு துணையொடு மறுவந் துகளத்
> தான்வந் தன்றே தளிதரு தண்கார்
> வாராதுறையுநர் வரனசைஇ
> வருந்தி நொந்துறைய இருந்திரோ எனவே''[54]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. கார்காலத்து மாலைபொழுதில், ஆண் மான் தன் பெண் மானோடு சேர்ந்து துள்ளி விளையாடுகிறது என்பதும் அறியமுடிகிறது.

இல்வாழ்க்கையில், இணைந்தோர் ஒருவர் மற்றொருவர் மீது வைத்திருக்கின்ற நம்பிக்கையின் அடிப்படையிலே தான், அவர்களின் வாழ்க்கை வெற்றி அடைகின்றது. அந்த நம்பிக்கையில் சிறிது அசைவு ஏற்படுகின்ற பொழுது அதனால் வருகின்ற துன்பம் பெரிதாகிறது. சங்க அகப்பாடல்களில் தலைவன் சொல்லில், நம்பிக்கை உடைய தலைவி அது நிறைவேறாத போது இச்சொல் பொய்யாகிப் போகின்ற போது அவளுடைய மனநிலையும் மாறுபடுகிறது.

### 3.18.9 இளவேனில் விழா

உலக உயிர்களுக்குக் காமத்தை உண்டாக்கும் காமனுக்குச் சிறப்புச் செய்யும் இன்பவிழாவாகும். இளவேனில் காலத்தில் இவ்விழா கொண்டாடப்படுவதால் 'இளவேனில் விழா' என்றும் அழைக்கப்பட்டது.

காமனை பெண்களே வழிபடுவர். சிறந்த கணவனைத் தர வேண்டும் எனவும், கணவன் தன் அன்பிலிருந்து பிரியக் கூடாது எனவும், காமனை வழிபடுவர். தலைவி ஊரில் காமன் விழா நடப்பதைக் கண்டால் மிகவும் கலங்குவாள் எனக் கருதிய தலைவன், தேர் ஏறி வந்ததாகத் தோழி குறிப்பிடுவதை கலித்தொகை 27வது பாடலின் மூலம் தெளிவாகிறது.

காமவேள் விழாக் கொண்டாடும்போது, காதலர்கள் களித்துக் கொண்டாடினர் என்றும் காமனுக்கு விழா எடுக்கும் காலமும் வந்துவிட்டது. ஆனால் நம் தலைவர் மட்டும் இன்னும் வரவில்லை என்பதைத் தலைவி வருத்தத்துடன் குறிப்பிட்டாள் என்பதும் சங்க இலக்கியப்பாடல்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

### 3.19 சொல் தவறாமை

தலைவர் தம் அன்புடைமை அவர்தம் சொல் திறம்பாமை என்னும் பண்பினாலும் ஆனது என்பதும் தலைவியால் எடுத்துரைக்கப்படுகிறது. தலைவன் சொன்ன சொற்படி நடக்கும் வாழ்க்கை உடையவன் என்பதை தலைவி,

> **''நிலம்புடை பெயர்வதாயினும் கூறிய**
> **சொற்புடை பெயர்த்தலோ இலரே''[55]**

என்ற பாடலடி மூலம் சொல்லாலும் செயலாலும் தலைவன் தலைவிக்கு நம்பகமாக வாழ்க்கையே உடைமையாக்குகிறான் என்பதை,

> **''நின் பிழையா நன்மொழி''[56]**

> **''வாய்மை சான்ற நின்சொல் நயந்தோர்க்கே''[57]**

என அமைந்த தோழி கூற்று மொழிகளும் இதனை மெய்ப்பிக்கும்.

தலைவன் தலைவியைப் பிரிந்து, காலம் நீட்டித்தக் காலத்து அவன் அன்பில்லாதவன், அறனில்லாதவன், பொய்வல்லாளன் என தோழி

கூறினும், அதனை மறுத்துத் தலைவனின் அன்பின் பெருமையை தலைவி எடுத்துச் சொல்லுதலும் சங்கப் பாடல்களில் காண முடிகிறது.

தலைவன் பிரிந்தால் தனக்கு மேனி மெலிதல் முதலான துன்பங்கள் நேர்ந்ததாலும் தலைவன் மீண்டும் வந்து அன்பு செய்வான் என்ற நம்பிக்கைத் தலைவனுக்கு உரியதாகக் கூறப்படுகிறது என்பதை,

**''தொல்கவின் தொலைய தோள் நலம் சாஅய**
**நல்கார் நீத்தனர் ஆயினும் நல்குவர்**
**நட்டனர் வாழி தோழி''**[58]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

தாயைப்போல, அன்பு செய்யும் பேரியல்பினை தலைவன் அமைபவன் என்பதை,

**''என் கைக் கொண்டு தன்கண் ஒற்றியும்**
**தன் கைக் கொண்டென் நன்வதல் நீவியும்**
**அன்னை போல இனிய கூறியும்''**[59]

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.

தலைவன் சொன்ன சொல்தவறாதவன் என்றும், குறித்தப் பருவத்தில் வருவான் என்று தலைவி நம்பிய போது, அவன் குறித்துச் சென்ற பருவம் வந்தது. ஆயினும், தலைவன் வரவில்லை. தலைவன் மீது உள்ள நம்பிக்கையில், தலைவி கார்பருவத்தை 'வம்பப் பருவம்' என்றாள்.

பிரிவு என்ற துன்பம் அது நீள்கின்றபோது, பெருந்துன்பமாய் ஆற்ற முடியாததாய் உள்ளது.

### 3.19.1 சொல் தவறாமல் செல்ல முடியவில்லை

பாசறையில் பிரிவு வேதனைத் தாங்காது தலைவன், கார்காலம் முடிந்தவுடன் முன்பனி காலத்தில் வருவேன் என்று தலைவியிடம் சொல்லிப் பிரிந்து வந்ததும், தான் குறித்த காலத்தில் செல்லாவிட்டால்,

'சற்றும் அறவுணர்வு இல்லா தலைவன்' என்று தலைவி கூறுவாளோ, அவளிடம் குறித்த பருவத்தில் தன்னால் செல்ல முடியவில்லையே என்று தலைவன் வருந்தியதை,

> "....
> ஏந்து கோட்டு யானை வேந்தன் பாசறை
> வினையொடு வேறு புலத்து அல்கி நன்றும்
> அறவர் அல்லர் நம் அருளா தோரென
> நம்நோய் தன் வயின் அறியாள்
> எம்நொந்து புலக்குங் கொல் மாஅ யோளே"[60]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

பாசறையில் தனித்திருக்கும் தலைவன், பிரிவாற்றாமையால் வருந்தி தலைவியை பார்க்க வேண்டும் என்று எண்ணுகிறான். பாசறை ஊர் தொலைவில் உள்ளது. உடனே சென்று பார்க்க இயலாது என்பதைக் கூட மறந்துவிடுகிறான். இதனால் தலைவன் கடமை மறந்த நிலையை உணர்த்தவில்லை. தன் பகைவரை வென்று வாகை கொண்ட, பின்னரும் மண்ணாசையால் பின்னும் போர் செய்ய விரும்பி உரைத்தலை உணர்ந்து தலைவியை நினைத்து கூறினான் என்பது, ஐங்குறுநூறு 444, 447, 449 பாடல்கள் உணர்த்துகின்றன.

### 3.20 போருக்காகப் பிரிந்த தலைவனின் உள்ளம்

வினைவயிற் பிரிந்த தலைவன் போர்க்களத்தில் பகைவரை எதிர்த்து போர்வினை மேற்கொண்டு பாசறையில் இருப்பான். அப்போது போர்வினை நீளுமிடத்தில் தலைவியின் நினைவு எழுவதால் ஆற்றாதவனாகி தன் நெஞ்சோடு கூற்று நிகழ்த்துவான். கார் காலம் வந்தும் தலைவன் வராததால் தலைவி மிகவும் வருந்தி, தூதர்களிடம் செய்தி அனுப்பினாள். தூதர்கள் கூறிய தலைவியின் நிலை மற்றும் அன்பிலாதவன், அறனில்லாதவன் தலைவன் என தலைவி கூறிய மொழிகளைக் கேட்டு தலைவன், "தலைவி செயலின்றி வருந்தும் வகையில் நான் பிரிந்தேன்" மழையானது தனித்திருக்கும் எனக்கும் துன்பத்தையே தருகிறது. நான்

படும் துன்பத்தையும் அவள் அறிய வேண்டும் என்று வருந்திக் கூறினான் என்பதை

**" ஐயவாயின செய்யோள் கிளவி**
**கார்நாள் உருமொடு கையறப் பிரிந்தென**
**நோய் நன்கு செய்தன எமக்கே**
**யாம்உ றுதுயரம் அவள் அறியினோநன்றே"[61]**

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

முன்பு ஒருநாள் தலைவி மாலைக் காலத்து, தன் புதல்வனை வைத்துக் கொண்டு நிலவைப் பார்த்து நிலவே நீ என் மகனோடு விளையாட வருவாய் ஆயின் உனக்குப் பால் தருவேன் என்று கூறிய தலைவியைக் காண விரும்புகிறேன் என்று தலைவன் பிரிவாற்றாமையினால் வருந்திக் கூறுகிறான்.

## 3.21 அறனிலாதவன்

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றபோது அவளை ஆற்றியிருக்கும் பொருட்டு கூறி, இன்ன காலத்தில் வருவேன் என்று கூறிப் பிரிந்து செல்கிறான். குறித்தப் பருவமும் வந்தது. ஆனால் தலைவன் வரவில்லை. எனவே, தலைவி தலைவனை அன்பில்லாதவன், அறனில்லாதவன் என்று கூறுகிறாள் என்பதனை,

**"நந்நோய் அறியா அறனிலாளர்"[62]**

என்ற பாடல்வரி மூலம் அறியமுடிகிறது.

தலைவனும் தன் பிரிவால், தலைவி வருந்தியிருப்பாள் என்பதனை உணர்ந்து பார்க்கிறான். தலைவனாகிய தான் உரிய காலத்து வராமல் போனால் தன்னை அறனிலாதவன் என்று தலைவி எண்ணுவாள் என தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறுகிறான் என்பதை, சங்க இலக்கியப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

போர்வயிற்பிரிந்த தலைவனும் தலைவியைப் பிரிந்தமையால் மிகவும் வருந்தி அமைதியற்ற மனநிலையில் உள்ளான் என்பதை

"தாழ் பெயற் பெருநீர் வலனேர்பு வளைஇ
மாதிரம் புதைப்ப பொழிதலின் . . .
. . . . .
நறுவீ முல்லை நாண்மலர் உதிரும்
புறவடைந் திருந்த அருமுனை இயவின்
சீறூரோளே ஒண்ணுதல் யாமே . . . . .
. . . . .
அருந்திறை கொடுப்பவும் கொள்ளான் சினஞ்சிறைந்து
வினைவயின் பெயர்க்குந் தானைப்
புனைதார் வேந்தன் பாசறையேமே"[63]

மழை பொழிகிறது. முல்லை மலர்ந்துவிட்டது. பிரிவாற்றாது தலைவி வருந்துவாள். மன்னனோ திரைப் பொருளைப் பெறாதவனாய் சினம் மிகுந்து போர் செய்யத் துடிக்கிறான். நானோ அவன் பாசறையிலே தங்கியிருக்கிறேன் என்று வருந்திக் கூறினான்.

## 3.22 வெற்றிக்குப் பரிசாகப் பூங்கொத்து வழங்குதல்

போர்ப் பாசறையில் தங்கியுள்ள தலைவன், போர் முடியும் நாளில் தன் உள்ளத்திடம் பேசுகிறான். தலைவியிடம் கார்ப்பருவம் தொடங்குவதற்கு முன்பே வந்து விடுவேன் என்று சொல்லியுள்ளேன். கார்காலமும் வந்துவிட்டது. நானோ இன்னும் தலைவியைச் சென்றடையவில்லை. அரசன் பகையரசனோடு போரிட்டு, இன்று வெற்றி பெற்றுவிட்டான். நாளை தன் வெற்றிக்கு காரணமாக இருந்த வீரர்களுக்கு பூக்கோள் (பூங்கொத்து) கொடுத்துப் போற்றுவான். எனக்கும் அப்பூக்கோள் கிடைக்கும். அப்பூக்கோளுக்காகவும், அரசனது பாராட்டுக்காகவும் காத்திருந்து தலைவியைக் காணும் பொழுதை நான் நீட்டிக்க விரும்பவில்லை. இப்போதே தலைவியைக் காணப்புறப்பட இருக்கிறேன் என்கிறான். இச்செய்தியை

"இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களத்து
ஒரு படைகொண்டு வருபடை பெயர்க்கும்
செல்வம் உடையோர்க்கு நின்றன்று விறல் என
பூக்கோள் ஏய தண்ணுமை விலக்கிச்
செல்வேம் ஆதல் அறியாள்"[64]

என்ற பாடலடி மூலம் பெறப்படுகிறது. தலைவன் தலைவியை விட்டு வினைவயிற் போருக்காகப் பிரிந்து சென்றவன் பிரிவாற்றாமையாலும், தான் சென்ற வினையை சிறப்பாகச் செய்து முடித்ததாலும் அவளை உடனே காணவேண்டும் என்ற ஆசையாலும், கார்காலத்தில் வந்துவிடுவேன் என்று சொன்ன சொல்லைக் காப்பாற்றும் முகமாக மன்னனின் பாராட்டையும் பொருட்படுத்தாது தலைவியைக் காண கிளம்பினான் என்பது பெறப்படுகிறது.

வினைவயிற் பிரிந்த தலைவன், தலைவியுடன் இன்புறும் இளமை நிலையையே தலைவனது மனம் நாடுகிறது. அந்த இன்பத்தை இழப்பது சுரவழியாகச் செல்வதைக் காட்டிலும் கொடியது என்று எண்ணுகிறான்.

தலைவன் பொருள்வயிற் பிரிய எண்ணும்போது பிரியக்கருதும் நெஞ்சிடம், சுரவழியின் கொடுமை தலைவியைப் பிரிய இயலாமை, பிரிந்தால் பிரியக்கூடாத காலத்தில் முன்பு பிரிந்து சென்ற போது அடைந்த வருத்தத்தின் நினைவு, எனப் பல செய்திகளைத் தலைவன் எண்ணுகிறான்.

கார்காலம், கூதிர் காலம், இளவேனிற்காலம் வந்தவுடன் வினை மீது கொண்ட விருப்பத்தைக் குறைத்துக் கொண்டு தலைவியின் நினைவால் வாடுவதை வெளிப்படுத்துமாறு அவனது பாடல்கள் அமைகின்றன.

கடமையும் காதலும் போட்டியிட்டு மோதுகின்றன. தலைவியைப் பிரிந்து போவோம் என்றால், வழி மிகவும் கொடுமையானது. நாமும் அதில் செல்ல முடியாது வழிக் கொடுமையும் அவன் மனத்தே எழுகின்றது.

போர்க்காரணமாகப் பாசறையில் தங்கியிருக்கும் தலைவன் கார்காலத்தைக் கண்ட நிலையில் வருந்துகிறான். தன்னை நினைத்து வருந்தாது தலைவியின் நிலை குறித்து வருந்துகிறான்.

அரசனுக்காகப் போர் செய்யும் நிலைக்குத் தள்ளப்பட்டாலும் தம் கடமையிலிருந்து அவர்கள் தவறுவதில்லை என்று தலைவன் உரைப்பது அவனுடைய மனவீரத்தை நிறுவுவதாய் உள்ளது.

போர் நடைபெறும் காலம் கார்காலத்திற்கு முந்தியது என்பதும் விருப்பமில்லாது போர்வீரர் பலரும் போரில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர் என்பதும் போர் முடிவுற்றாலும் வீரர்கள் எளிதில் இல்லத்திற்கு திருப்பி அனுப்பப்படவில்லை என்பதும் தெரிய வருகின்றன.

## 3.23 பிரிதலைவிட இறத்தலே மேல்

தலைவி சாவதற்கு அஞ்சவில்லை. தலைவனைப் பிரிவதற்கு அஞ்சுகிறாள் என்று நற்றிணை பாடல் குறிப்பிடுகிறது. தலைவியானவள் தலைவன் மீது மிகுந்த அன்பு கொண்டவள் என்பதை

''நிலத்திலும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆர் அளவின்றே - சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடெனொடு நட்பே''[65]

என்ற பாடலடிகளில் அறியலாம். இவ்அன்பால் தலைவனை பிரிந்த சில காலமும் அதாவது நீரின் கண் இருக்கும் மகன்றில் பறவைகளானவை தமக்கிடையில் ஒரு பூ இடையில் வந்த காலத்து பிரிய நேர்ந்த காலமோ பல ஆண்டுகள் கடந்ததாக எண்ணுதலைப் போல நானும் தலைவனைப் பிரிந்து இருத்தலைக் காட்டிலும் இறத்தல் மேல் என்று தலைவி வருந்துகிறாள் என்பதை

''பூவிடைப் படினும் ஆண்டு கழிந்தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரிதாகிய தண்டாக் காமமொ''[66]

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியமுடிகிறது.

தலைவனைப் பிரிந்த தலைவியானவள், அவன்மீது கொண்ட அன்பால் அவனைக் காணாத இடத்து, துயர்மிக்க நெஞ்சத்தோடு சிறு நுரையானது பாறையின் மீது மோதும் போது, மெல்ல மெல்ல கரைந்து இல்லாமல் போவது போல நானும் போவேன் என்கிறாள். இதனால், தலைவிக்குத் தலைவனைப் பிரிந்து இருத்தல் என்னும் செயல் மிகவும் கொடுமையானதாக இருக்கிறது என்பதை மிகவும் நுட்பமாகச் சிறு நுரையைக் காட்டுகிறாள்.

### 3.23.1 பொருள்வயிற் பிரிவை விரும்பும் தலைவி

தன் தந்தை வழி எவ்வளவு தான் செல்வந்தனாக இருந்தாலும் ஒருத்தியை திருமணம் செய்தபின் இல்லறம் நடத்த வேண்டிய பொருளை அவனே ஈட்ட வேண்டும் என்பது சமூதாயக் கோட்பாடாக இருந்தது.

> ". . . . . எல்லா
> பெற்றோம்யா மென்று பிறர் செய்த இல் இருப்பாய்"[67]

என்பது ஒரு முல்லைநிலக் காதலியின் கூற்று, அவள் தன் காதலனை நோக்கி என்னைத் திருமணம் செய்து, தனியே ஓரில்லம் உருவாக்கும் திறனின்றி, சுற்றத்தார் உருவாக்கிய இல்லிலேயே இருந்து மகிழலாம் என நினைப்பவன் அல்லனோ நீ, என நகையாடுவது தெரிகிறது. அவள் இவ்வாறு கூறுவதற்குக் காரணம் அவனுக்குரிய கடமையை அவள் வற்புறுத்துவதற்காகவே என்பதை அறியலாம்.

இப்படி தான் மணந்துகொண்ட பெண்ணிற்காக மட்டுமன்றி, மணக்க இருக்கும் பெண்ணுக்காகவும் அக்காலத் தலைவன் பொருள் தேட வேண்டியவனாக இருந்தான் என்பது புலனாகிறது.

தலைவனே பொருள் வயிற்பிரிவான் அப்படி பிரியவில்லை என்றாலும், தலைவியே பொருள் தேடிச் செல்லச் சொல்வாள் என்பதும் பெறப்படுகிறது.

### 3.24 நற்பண்பில்லாத விலங்குகள்

பொருள் காரணமாக தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றுவிட்டான். அவன் சென்ற பாலை நிலமாயினும் அங்கு வாழும் விலங்குகள் தன் துணையைப் பிரியாது அன்போடு சேர்ந்து வாழக்கூடியவை. அதைக் கண்டும், தன்னை நினையாமல் பிரிந்தான் என்று எண்ணும்போது தலைவிக்குக் கோபம் வருகிறது. அவன் கொடுமையை பிரிவாற்றாமையால் விலங்குகள் மீது ஏற்றிச் சொல்கிறாள். தலைவன் சென்ற காட்டில் வாழும் விலங்குகள் நற்பண்பில்லாத காட்டு விலங்குகள் இவை, பண்புடன் இருந்திருந்தால் தலைவனை நோக்கி அங்ஙனம் பிரிவது தவறு என்று பிரிவைத் தவிர்த்தற் பொருட்டு அறிவுறுத்தியிருக்கும் என்ற பிரிவாற்றாமையால் வருந்திய தலைவி கூறினாள் என்பதை,

> **''அம்ம வாழி தோழி என எதூஉம்**
> **அறன் இல மன்ற தாமே - விறல் மிசைக்**
> **குன்று கெழு கானத்த பண்ப இல் மாக கணம்**
> **கொடிதே காதலிப் பிரிதல்**
> **செல்லல் ஐய என்னாதவ்வே''**[68]

என்ற பாடலின் வழி அறியமுடிகிறது. காட்டு விலங்குகள் கூட பிரியாமல் கூடி வாழ்கின்றன. அதைக் கண்டும் கூடி வாழ வேண்டிய தலைவன் பொருளுக்காக பிரிந்தானே என்றும் பொருளாசை பிணித்ததால் அவன் விலங்கைவிட கொடியவனாகிவிட்டானே என்ற அவளின் உள்ள வெறுப்பைக் கூறினாள்.

### 3.25 பொருளாசையால் என்னை மறந்தான்

பொருள் மீது கொண்ட ஆசையால் தலைவன் தன்னை மறந்தானோ என தலைவி வருத்தம் அடைந்தாள். தன் தோழியிடம் சுற்றத்தின் துன்பத்தைத் தீர்ப்பதற்காக தலைவன் பொருள் தேடுவதையே விருப்பமாகக் கொண்டுள்ளான். அதையே இன்றியமையாதது என்று

இவன் நம்புவதால், மெல்ல மெல்ல நம்மீது கொண்டிருக்கும் அன்பை துறந்து விடுவான் போலும் பொருளாசையால் அவனின் அன்பு உள்ளம் மாறி போதலுக்கே நான் அஞ்சுகிறேன் என பிரிவாற்றாமையால் வருந்தி கூறினாள்.

### 3.26 சென்ற வினையே முடிக்க விருப்பம்

தலைவன் குறித்துச் சென்ற பருவத்திலே அவர் வரவேண்டும் என்பதில்லை. அவர் எண்ணிச் சென்ற வினையினை முடித்து வருதல் வேண்டும் என்பதே தலைவியின் விருப்பம் எனினும் தான் வருந்தக் காரணம் என்ன என்பதை தலைவியே, ''நான் வருந்துவது தலைவன் வராமைக்கன்று. என்மீது அவர் கொண்ட அன்பில் மாறுபாடு கண்டு கூறும் இவ்வூரார்க்குத் தான்''. நான் ஆற்றமாட்டாமல் இல்லை என்று தலைவி கூறுகிறாள். இவையெல்லாம் தம்மீது தலைவர் கொண்ட அன்பிலேயும், தலைவர் மீது தாம் கொண்ட அன்பிலேயும் குற்றம் எவரும் கற்பித்தல் கூடாது என்பதில் தலைவி கவனமாய் இருக்கிறாள் என்பதை குறுந்தொகை 341வது பாடல்வழி அறியமுடிகிறது.

> **''சிறுமை நமக்கு ஒழியச்சேண் சென்றார் உள்ளி**
> **நறுமலர் நாணின் காண்''**[69]

பொருளைத் தேடிச் சென்றவர் எமக்குப் பிரிவுத் துன்பத்தை உண்டாக்கியவர் எம்முடைய வறுமையை ஒழிக்கும் நிமித்தமே பொருள் தேடிச் சென்றுள்ளார் என்கிறாள்.

இதிலிருந்து பொருள் தேடிச் செல்லும் தலைவனாயினும் தலைவியாயினும் பிரிவுத் துன்பம் இருப்பினும் பொருள்வயிற் பிரிவை விரும்பினர் என்பதை தெரிந்துகொள்ள முடிகிறது.

இங்ஙனம் பிரிவால் வருந்தும் தலைவியின் துன்பத்தை கார்காலமும், கூதிர்காலமும், மாலைப்பொழுதும், வாடைக்காற்றும், புள்ளின் ஓசையும், மலரின் மலர்ச்சியும், மணியின் ஓசையும், கடலின் குரலும், கோவலர்

ஊதும் குழலின் ஓசையும் மிகுதிப்படுத்தும் என சங்க இலக்கிய அகப்பாடல்கள் சுட்டுகின்றன. தலைவியைப் பிரிந்திருக்கும் தலைவனின் வருத்தமும் தலைவியின் வருத்தத்திற்கு ஈடாகவே உள்ளது.

### 3.27 களவுகால பிரிவு

தலைவன் தலைவி இருவருக்கும் களவு காலத்திலும் பிரிவு ஏற்படும். இப்பிரிவில் தலைமக்களுக்கு ஏற்படும் பிரிவாற்றாமை பற்றிகாண்போம்.

தலைவியைக் காதலித்த தலைவன் திருமணம் செய்ய வேண்டிய பொருள் தேட வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிந்து சென்றான். தலைவி பிரிவுத் துன்பம் தாளாமல் கண்ணீர் வடித்தாள்.

திருமணம் முடித்துப் பிரியும் பிரிவைக் காட்டிலும் திருமணத்திற்காகப் பிரியும் பிரிவு மிகவும் கொடுமையானது. இப்பிரிவு தலைவனை விட தலைவியையே வாட்டுகிறது.

பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வராமலே ஏதாவது நேர்ந்து விட்டால், தலைவியின் நிலைமை மிகவும் இரங்கத்தக்கதாகி விடும். பிரிவுத்துன்பமும், தலைவனுக்கு ஏதாவது நேருமோ என்ற எண்ணமும் தலைவியை மிகவும் வருத்தும். தலைவனுக்கு ஏதாவது ஏற்பட்டு விடுமோ என்ற எண்ணத்தில் மற்றவர்களுக்குத் தெரியுமாறு அழவும் முடியாது. கவலையுடன் கலங்கியிருக்கவும் முடியாது.

தலைவியின் களவு வாழ்வைப் பற்றி ஏதும் அறியாத தாய், ஏன் இப்படி இருக்கிறாள் என்றாலோ, வீட்டில் உள்ள மற்றவர்கள் விசாரித்தாலோ என்ன சொல்ல முடியும் தலைவன் பொருள் சேர்த்து வந்து, விரைவில் திருமணம் முடிய வேண்டும் என்று தலைவி வருந்தியே இருப்பாள்.

தலைவனை மறக்கவும் முடியவில்லை அவனை நினைத்து புலம்பவும் முடியவில்லை. பிரிவுத்துன்பத்தால் அழுகையும் வருகிறது. அந்த அழுகையையும் கட்டுப் படுத்த முடியவில்லை.

கற்புகால பிரிவை விட களவு காலப் பிரிவிலேயே தலைவி பிரிவாற்றாமையால் மிகவும் துன்பப்படுகிறாள்.

இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர், களவுக்காலத்தில் தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் பிரிந்து இருக்க முடியாமல் துன்புறுகின்றனர். தலைவியின் துன்பத்தைத் தோழி, தலைவன் வாழும் நாட்டில் இருந்து வீழும் அருவியைப் பார்த்து, தலைவனைப் பார்ப்பதாகவே தலைவி நினைத்தாள் என்பதாகும்.

**''அன்னாய் வாழி வேண்டு அன்னை நீ மற்று**
**யான் அவர் மறத்தல் வேண்டுதியாயின்**
**கொண்டல் அவரைப் பூவின் இன்ன**
**வெண்தலை மாமழை சூடி**
**தோன்றல் ஆனாது அவர் நெடுங்குன்றே''**[70]

என்ற பாடலில் தலைவியின் நோய் நீங்க வேண்டுமானால், தலைவன் வாழுகின்ற பூங்கெழுகுன்றம் பார்த்துநின்றால் நீங்கும் என்றாள்.

### 3.27.1 கனவில் காணல்

தலைவன் தலைவியிடம் கூடியிருக்கும் காலத்தைவிட பிரிந்திருக்கும் காலமே அதிகம். மேலும், காதல் ஏக்கத்தால் அவள் கண்கள் உறங்கவில்லை. எப்போதாவது உறங்கினாலும் கனவில், தலைவனைக் கண்ட அவள் விழித்தவுடன் அவனைக் காணாமல் வருந்துகிறாள். கனவிலும் நனவிலும் அவளைப் பிரியாமல் இருக்க உடனே மணந்து கொள் என தோழி தலைவனிடம் கூறினாள்.

தலைவனைக் கண்டபோதெல்லாம் உடல் பூரித்து பொலிவு பெறும் தலைவி, காணாத போது பொலிவிழந்து போவாள்.

களவில் பிரிவுத் துயர் வாட்டும்போது தலைவியின் நினைவுக்கு கனவே விருந்தாகின்றது என்கிறாள்.

**"நனவினால் நல்கா தவரைக் கனவினால்**
**காண்டலின் உண்டென் உயிர்"**[71]

களவின் போது, இணைந்து உறவாடிய இன்பத்தை நினைத்து பிரிவின்போது ஆற்றியிருப்பாள் தலைவி என்பதை தொல்காப்பியர்

**"நிகழ்ந்தது நினைத்ததற்கு ஏதுமாகும்"**[72]

என்பார்.

### 3.27.2 கண்துயில் மறத்தல்

இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின், தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாமையால் தலைவனையே நினைத்துக் கொண்டேயிருப்பதால் தலைவி உண்ணாமல் இருப்பாள். இதனால் தலைவியின் உடல் மெலிந்து காணப்படும். தலைவன் நினைவாலே உறங்காமல் இருப்பாள் என்பதை

**"நனைந்தலை உலகமும் துஞ்சும்**
**ஓர்யான் மன்ற துஞ்சாதேனே"**[73]

என்ற குறுந்தொகை பாடல்வழி அறியமுடிகிறது.

### 3.27.3 மனம் வெதும்பல்

தலைவிபால் தனியிடத்தே கூடி பேரின்பம் நுகர்ந்த தலைவன் பின், பிரிகின்ற காலத்து விரைவில் வந்து மணம் செய்து கொள்வேன் என்று சூள் உரைத்துச் செல்கிறான். காலம் சில கடந்தும் தலைவன் வரவில்லை என்பதால் தலைவி மிகவும் வருந்தி நாங்கள் இன்பம் துய்த்தபோது ஆற்றில் ஓடிய மீனை விழுங்க காத்திருந்த பறவைதான் கண்டது. வேறு யாருக்கும் தெரியாது. அப்படி இருக்கும்போது தலைவன் இன்னும் வரவில்லை எனில் நான் என்ன செய்ய முடியும் என்று மனம் வெதும்பிக் கூறியதை

''யாரும் இல்லை தானே கள்வன்
தானது பொய்ப்பின் யான்எவன் செய்கோ
தினைத்தாள் அன்ன சிறு பசுங்கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதாம் மணந்த ஞான்றே''[74]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

### 3.27.4 மறுபிறவி

களவு காலத்தில் தலைவனைப் பிரிந்து வருந்தியிருக்கும் தலைவி இப்பிறவியில் அவன் அன்பு கிடைக்காவிட்டாலும், மறுபிறவியிலாவது அவனைக் கணவனாக அடையவேண்டும் என்று வேண்டிக் கொண்டாள்.

### 3.27.5 வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதலில் ஆற்றாமை

இரவுக்குறி, பகற்குறி இரண்டிலும் தலைவியைப் பெற்று மகிழ இயலாத நிலையில், தலைவன் வரைவிடைவைத்துபொருள் வயிற்பிரிதலை மேற்கொள்வான். தலைவியின் அருமையை உணர்ந்த பின்னரே, இச்செயலைச் செய்வான். இவ்வாறு தலைவன் பிரிந்ததால் தலைவியிடம், சில வேறுபாடுகள் உண்டாகும். தன்னுடைய வேறுபாடுகள் தலைவனைப் பிரிந்ததால் ஏற்பட்ட கொடுமையே ஆகும். தலைவன் தலைவியிடம், ''உன்னைப் பிரியேன், பிரிந்தால் உயிர் தரியேன். இது தெய்வத்தின் மேல் ஆணை'' என்று கூறியதால், தலைவன் இப்போது பிரிந்து சென்றதால், தெய்வம் தண்டித்து விடுமோ என்று பயந்து தெய்வத்திடம் முறையிட்டாள்.

### 3.27.6 தூது

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்ற பின், தலைவிக்கு தூது அனுப்பினான். தலைவி மகிழ்ந்து தலைவனது தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்பயின் நயந்தன்று தோழி நாமும் மணந்தது போல் மகிழ்ந்ததாகத் தூது சொல்லியனுப்புவோம் என்று கூறுவாள். இவ்வாறு காதலன் தூதனுப்பிக்

கொண்ட செய்தியை விளக்கும் சங்கப் பாடல்கள் அருகியே காணப்படுகின்றன.

"தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
வந்தன்று வாழி தோழி நாமும்
நெய்பெய் தீயின் எதிர் கொண்டு
தாம் மணந்தனையம் என விடுகம் தூதே"[75]

என்ற குறுந்தொகை பாடல்வரி மூலம் அறியமுடிகிறது.

### 3.28 குன்றினை காணல்

வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிந்த தலைவன், தலைவியை விட்டு பிரிந்து சென்றான். தலைவி பிரிவுத் துன்பத்தால் மிகவும் வருந்தினாள். தலைவனது குன்றினைக் கண்டு தலைவனையே கண்டது போல் எண்ணி மகிழ்ந்தாள். இதனால் பிரிவால் ஏற்பட்ட பசலை மறைந்தது என்று தலைவி கூறுவதை குறுந்தொகை 249வது பாடலின் மூலம் அறியமுடிகிறது. பசலை படர்ந்தாலும் தலைவனிடம் தான் கொண்ட நட்பால் அவை நில்லாது நீங்கிவிடும் என்று தலைவி கூறினாள்.

### 3.29 காந்தளை நடுதல்

தலைவியை விட்டு தலைவன் பிரிந்தான். பிரிவு ஆற்றாமையால் வருந்திய தலைவி, தலைவனது மலையிலிருந்து வந்த காந்தளைப் பெற்று பிரிவுத்துயரை ஆற்றியிருந்தாள் என்பதை குறுந்தொகை 361வது பாடலின் வழி அறியமுடிகிறது. தலைவனது மலையிலிருந்து வந்த காந்தளையே தலைவனாக கருதி வாழ்ந்து தன் பிரிவை ஆற்றியிருந்ததாக தலைவியே கூறியதிலிருந்து அறியமுடிகிறது.

### 3.30 விரிச்சி கேட்டல்

ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன்னர், பிறர் கூறும் சொற்களைச் சகுனமாகக் கொள்ளும் பழக்கம் பண்டு தொட்டே நிலவுகின்றன. இதனையே 'விரிச்சி கேட்டல்' என்று கூறுவர்.

ஒருவர் ஏதேனும் ஒரு செயலைப் பற்றி சிந்திக்கவோ அல்லது செயலாற்ற நினைக்கும் நேரத்தில் அயலிலிருந்தவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் சொற்கள் தாம் சிந்திப்பவற்றிற்கு இயைந்ததாகவோ அமைந்து மேற்கொள்ளப்போகும் செயலின் பயனை நிச்சயிக்கும் என நம்பிக்கை கொள்ளுதலே 'விரிச்சி' எனப்படும்.

**விரிச்சி பற்றி புறப்பொருள் வெண்பா மாலை**

> **''ஏழுவணி சீறூர் இருள் மாலை முன்றில்**
> **குழுவினம் கை கூப்பி நிற்பத் - தொழுவிற்**
> **குடக்கண் கொண்டு வா என்றாள் குணிவிடல்**
> **தடக்கையால் வென்றி தரும்''**[77]

என்று கூறுகிறது.

நற்றிணையில் தலைவன் குறித்த பருவத்து வராமையால் தலைவி வருந்துகிறாள். தோழியானவள், ''அயலகத்து மாதானவள் தான் வேறொருத்தியிடம் உரையாடும் பொழுது அவன் இப்பொழுதே வருகுவன் என வாய்ச் சொற்கூறினாள் ஆதலின் அவள் அமிழ்தம் உண்பாளாக'' என்று கூறினாள்.

> **''அமுதம் உண்கநம் அயல் இலாட்டி**
> . . . . .
> **நற்கோடு நயந்த அன்பில் கானவர்**
> **விற்சுழிப்பட்ட நாமப் பூசல்**
> **உருமிடைக் கடியிடி கரையும்**
> **பெருமலை நாடனை வரூஉம் என்றோளே''**[78]

இதன் மூலம் விரிச்சி கேட்கும் வழக்கம் இருந்தமையும், அதன் மூலம் தலைவி பிரிவுத்துயரத்தை ஆற்றியிருந்தமையும் அறியமுடிகிறது.

களவு காலத்தில் பகற்பொழுதினும், இராப்பொழுதினும் வந்து தலைவியைக் கண்டு அளாவுதலை வழக்கமாகக் கொண்ட தலைவன், பின்னர் இடையீடுபட்டு வரலாயினான். அப்பிரிவைக் கூட ஆற்றாத

தலைவியின் நுதல் பசந்தது. அதாவது சின்னால் பிரிவையும் தான் தாங்குவது அரிது என்கிறாள் என்பதை

> "அம்ம வாழி தோழி நம் ஊர்
> நளிந்து வந்து உறையும் நுறுந்தண் மார்பன்
> இன்னினி வாராமாறு கொல்
> சில் நிரை ஒதி என் நுதல் பசப்பதுவே"[76]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

வரைவிடைவைத்துப்பொருள்வயிற் பிரிய இருக்கும் தலைவன் குறித்த பருவத்து வராமையால் தலைவி உடல் மெலிந்தாள். இக்காலம் நீட்டிக்குமானால் அவளும் தோழியும் இறந்து பட ஏதுவாகும் என்பதை ஐங்குறு நூறு 239 வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

## 3.31 தலைவனிடம் தங்கும் நெஞ்சம்

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிந்து சென்றான். காலம் நீட்டித்து வழி தலைவி மிகவும் வருந்தினாள். தலைவன் சென்றபோதே தலைவியின் நெஞ்சமும் அவனுடன் சென்று விட்டது. அவனோடு சென்றுவிட்ட என் நெஞ்சமானது மீண்டும் என்னிடம் வருமோ அன்றி வராமல், அவன் வாழும் இடத்திலேயே இருத்தலை விரும்பி அவ்விடத்திலேயே தங்கிவிடுமோ என்று பிரிவாற்றாமையால் குறிப்பிட்டாள்.

தலைவியின் நெஞ்சம் இங்கு வர வேண்டுமானால், தலைவன் இங்கு வர வேண்டும் எனவே தலைவன் எப்போது திரும்ப வருவான், அவனைக் காண வேண்டும் என்ற ஆவலிலேயே அவ்வாறு குறிப்பிட்டாள் என்பது பெறப்படுகிறது.

## 3.32 தொகுப்புரை

1. சங்க இலக்கியங்களில் மற்ற திணைகளை விட, பாலைத் திணைப் பாடல்களே அதிகமாகக் காணப்படுகின்றன.

2. தலைவன் தலைவியரிடையே உள்ள அன்பு, அவர்கள் கூடி இன்புற்றிருந்த காலத்தை விடவும், பிரிந்து இருக்கும் போது தான் அதிக விளக்கம் பெறுகிறது.

3. காதலர்கள் சேர்ந்திருக்கின்ற பொழுது தம்மை, இந்த உலகத்தையே மறந்திருப்பர். கால நிகழ்வையும் கூட உணராதிருப்பர்.

4. பிரிவுத் துன்பம் தலைவன் தலைவி இருவருக்கும் பொதுவானது. எனினும் தலைவி உற்றாருடனும், தன் மகனுடனும் இல்லத்தில் இருந்து தலைவனை மட்டுமே பிரிந்திருப்பாள். அவளை ஆற்றுப் படுத்த மற்றவர்கள் வீட்டில் இருப்பார்கள்.

5. தலைவன் உறவுகள் அனைத்தையும் பிரிந்து, கடமை உணர்வோடு செயலாற்றச் செல்கிறான். தனது தனிமைத்துயரைவிட, தலைவியின் துன்பத்தையே பெரிதென எண்ணி, வினைமேற்செல்லும் வழியிலும் வினைசெய்யும் இடத்திலும் துயர் உருகின்றான்.

6. தலைவிக்குப் பிரிவுத்துயரால் மனம் மட்டுமே தொல்லைப்படுகின்றது. ஆனால் தலைவனுக்கு யானையாலும், ஆறலைக்கள்வர்களாலும், உடலுக்கும் மனத்திற்கும் ஒரு சேர துன்பம் வாய்க்கின்றது. இத்துன்பத்தோடு தலைவியைப் பிரிந்த துயரமும் சேர்ந்து அவனை வாட்டுகிறது.

7. மாந்தர் தனக்குத்தானே பேசிக் கொள்வது நெஞ்சொடுகிளத்தலாகும்.

8. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு பசலை படர்கிறது. நெற்றி, நுதல் தோள் மேனி முழுவதும் பசத்தல் ஏற்படுகிறது.

9. பிரிவாற்றாமையால் கண் துயிலாதிருத்தல், அழுதல், புலம்பல் என அவளுக்கு வேதனை மேலிடுகிறது.

10. பல்லி சொல்கேட்டல், கிளியோடு வினவல், கோவலர் ஊதும் குழலின் ஓசையும், துன்பத்தை மிகுதிப் படுத்தும்.

11. கார்காலமும், கூதிர்காலமும், மாலைப்பொழுதும், வாடைக்காற்றும், புள்ளின் ஓசையும், மலர்களின் மலர்ச்சியும், மணியின் ஓசையும், கடலின் குரலும், மக்கள் அல்லாத அஃறிணை உயிர்களிடம் பேசுதல் என பலவகையாலும் தலைவனும் தலைவியும் பிரிவாற்றாமையால் ஒருவரை ஒருவர் பிரிந்து ஆற்றாமையால் துன்பப்படுவர்.

12. தலைவியின் பிரிவுத்துன்பத்திற்கு ஈடாகவே தலைவனின் பிரிவுத் துன்பமும் உள்ளது என்பதை அறியமுடிகிறது.

13. கற்பு காலப் பிரிவை விட, களவு காலப் பிரிவிலேயே தலைவி பிரிவாற்றாமையால் மிகவும் துன்பப்படுகிறாள்.

# அடிக்குறிப்புகள்

1. குறுந்தொகை - 32
2. ஐங்குறுநூறு - குறிஞ்சி 9 - அம்மவாழிப்பத்து
3. மேலது 2
4. ஐங்குறுநூறு 227
5. மேலது 230
6. மேலது 221
7. மேலது 230
8. அகநானூறு 103
9. ஐங்குறுநூறு 453
10. மேலது 111
11. நற்றிணை 364
12. குறுந்தொகை 319
13. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல், நூ.198
14. குறுந்தொகை 32
15. ஐங்குறுநூறு 173
16. கலித்தொகை 142
17. மேலது 144
18. நற்றிணை 140
19. ஐங்குறுநூறு 116
20. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பொருளியல், நூ.9
21. அகநானூறு 289
22. மேலது 351
23. மேலது 273
24. மேலது 58
25. மேலது 34
26. ஐங்குறுநூறு 107
27. மேலது 172

28. கலித்தொகை 64
29. நற்றிணை 62
30. குறுந்தொகை 47
31. கலித்தொகை 29
32. நற்றிணை 182
33. அகநானூறு 259
34. நற்றிணை 196
35. கலித்தொகை 121
36. மேலது 144
37. நெடுநல்வாடை 95
38. பட்டினப்பாலை 114
39. கலித்தொகை 119
40. மேலது 17
41. குறுந்தொகை 234
42. இறையனார் அகப்பொருள், நூ. 41
43. குறுந்தொகை 46
44. மேலது 189
45. அகநானூறு 37
46. மேலது 97
47. மேலது 74
48. குறுந்தொகை 92
49. அகநானூறு 214
50. மேலது 24
51. குறுந்தொகை 126
52. மேலது 285
53. மேலது 162
54. மேலது 65
55. நற்றிணை 289
56. மேலது 10

57. மேலது 283
58. மேலது 14
59. மேலது 28
60. அகநானூறு 304
61. ஐங்குறுநூறு - பாசறைப் பத்து- 441
62. அகநானூறு 294
63. அகநானூறு 84
64. அகநானூறு 174
65. குறுந்தொகை 3
66. மேலது 57
67. கலித்தொகை - முல்லைக்கலி 17
68. ஐங்குறுநூறு 332
69. திருக்குறள் 1231
70. ஐங்குறுநூறு 209
71. திருக்குறள் 1213
72. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையியல், நூ.43
73. குறுந்தொகை 6
74. மேலது 25
75. மேலது 106
76. ஐங்குறுநூறு 222
77. புறப்பொருள் வெண்பாமாலை - வெட்சிப்படலம் 4
78. நற்றிணை 65

# உறவினர்களின் பிரிவாற்றாமை

# உறவினர்களின் பிரிவாற்றாமை

## 4.0 முன்னுரை

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டாள். எனவே தலைவியை பிரிந்த துன்பத்தால், பிரிவாற்றாமையால் நற்றாய், செவிலி, தோழி ஆகிய உறவினர்களின் பிரிவாற்றாமையை எடுத்துரைப்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

களவு நெறியிலிருந்து, கற்பு நெறிக்குச் செல்லும் வாழ்வியல் முறையினைச் சித்தரிப்பதில் தனியிடம் பெறுவது அறத்தொடு நிற்றலும், உடன்போக்குமே ஆகும். உடன்போக்கில் தான் கற்பு மேம்பாடு உள்ளது. பிரிவு தான் தலைவனைக் கடமையுள்ளவனாகவும், தலைவியை கற்புள்ளவளாகவும் காட்ட தேவை.

தலைவனும் தலைவியும் முதுவேனிற் பருவத்தில், அருஞ்சுர வழியில் உடன்போக்கு செல்வதாகக் கூறப்படுதல், சங்க இலக்கிய மரபாகவே உள்ளது. காதல் சிறப்பு காட்டவும், தலைவியின் மென்மை நோக்கி அவலம் எழுப்பவும், பின்புலம் சிறக்கவும், வற்றிய பாலை நிலத்தில் செல்வதாகக் காட்டப்படுவது இலக்கிய உத்தியாக பயன்பட்டது எனலாம்.

பொருட்வயிற்பிரிவில் தலைவன் செல்லும்வழி, அருஞ்சுர வழியாகக் காட்டப்படுதல் போன்று, உடன்போக்கு மேற்கொள்ளும் தலைவன் தலைவி இருவரும் அருஞ்சுர வழியிலேயே, செல்வதாகக் காட்டப்படுதல் மரபாகும்.

கொடுமையான பாலைக் காட்சி படம் பிடிக்கப்பட்ட இவ்வரிய வழியில், மகள் சென்றாளே என்ற தாயின் நெஞ்சம் பேதலிப்பதும் காட்டப்படுகிறது. உடன்போக்கில் தலைவி தலைவன் மீது வைத்திருந்த

மாறாத காதலையும், அதே நேரத்தில் பெற்றோர்கள் மீது வைத்திருந்த மாறாத அன்பையும் வலியுறுத்துகிறாள்.

## 4.1 உடன்போக்கு

அம்பலும் அலரும் களவினை வெளிப்படுத்தும் எனத் தலைவி அஞ்சிய நிலையிலும், இற்செறிப்பு, வெறியாட்டு நொதுமலர் போன்ற காரணங்களாலும் வரைவு மறுக்கப்பட்ட நிலையிலும், தலைவியின் பெற்றோர் மகளது காதலை அறியாது, அயல்மண முயற்சியில் ஈடுபடும்போதும், தலைவன் தோழியோடு ஆராய்ந்து, யாரும் அறியாவண்ணம் தன்னூர்க்கு அழைத்துச் செல்லுதலே 'உடன்போக்கு' ஆகும்.

### 4.1.1 தாயரும் தமரும் வரைவிற்கு உடன்படாததன் காரணம்

மருத நிலத் தலைவன் நெய்தல் நிலத் தோழி ஒருத்தியிடம் குறை வேண்டி நிற்கும்போது, அவளே அவன் தலைவிக்குப் பொருத்தமில்லாதவன் என்று கூறி சேட்படுத்துகிறாள் என்பதை

**" இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி**
**நீலநிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு**
**மீன்ஏறிப் பரதவர் மகளே நீயே**
**நெடுங்கொடி நுடங்கும் நியமமூதூர்க்**
**கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே"**[1]

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது.

தலைவன் நெய்தல் நிலத் தலைவன் என்ற திணை வேறுபாட்டையும், செல்வநிலை வேறுபாட்டையும் கூறுவதன் மூலம் தலைவன் தலைவிக்குப் பொருத்தமில்லாதவன் என்று சேட்படுத்துகிறாள்.

முல்லைக் கலியில், அன்னை தடையின்றி காதலை ஏற்பதற்குரிய தகுதியினைத் தோழி,

''ஆயர் மகனாயின் ஆயமகள் நீயாயின்
நின்வெய்ய னாயின் அவன் வெய்யை நீயாயின்
நின்னை நோ தக்கதோ இல்லைமன்''[2]

என்ற பாடலடி மூலம் இருவரும் ஆயராக ஒரே குலமாக இருத்தல் இன்றியமையாதது என்கிறாள்.

தன் குலத்தொழிலைச் செய்கின்றவர்களோடு மணவினை கொள்ளும் ஒரு முறைமை அக்காலத்தில் இருந்தது. இதிலிருந்து தலைமக்கள் வெவ்வேறு நிலத்தைச் சேர்ந்தவர்களாகவும், செல்வநிலையில் வேறுபட்டவர்களாகவும் இருந்த நிலையில் தாயாராலும், தமராலும் வரைவு மறுக்கப்பட்டதை அறியமுடிகிறது.

இந்த விதிகளோ, வரையறைகளே தலைமக்கள் அன்பிற்கு முன் எடுபடவில்லை. அன்புடை நெஞ்சங்கள் கலந்து விடுகிறது. வரைவு மறுக்கப்படுகிறது. தாயாரால் கட்டுப்பாடுகள், தடைகள் அதிகமாகின்றன. இந்நிலையில் தோழியே தலைமக்களை வழிப்படுத்த, அவர்கள் உடன்போக்கு மேற்கொண்டனர்.

விடலை, காளை என்பது தலைவனைக் குறிக்கும் பெயர்கள். பாலை மறவனுக்கு உரியவையாகும். நம்பியகப்பொருள், பாலை தலை மக்களுக்குரிய பெயர்களில் மீளி, விடலை, காளை ஆகியவற்றைக் குறித்துள்ளமை இதற்குச் சான்றாகும்.

புறநானூற்றில் வெட்சி, கரந்தை போர்களில் ஈடுபடும் பாலைநில மறவரை விடலை, காளை என்றே குறித்துள்ளதை காணலாம்.

''இவண்வேல் விடலை இன்மையின் புலம்பி''[3]

''புலம் புக் கனனே புல் அணற்காளை''[4]

மேலும் அக இலக்கியங்களில் உடன்போக்குப் பாடல்களில் பின் வருவனவற்றுள் சில:

"மை அணற்காளை பொய்ப்புகலாக
அருஞ்சுரம் இறந்தனள்"[5]

"செழங்தண் மனையோடு எம் இவண் ஒழிய
செல் பெருங்காளை பொய்ம் மருண்டு"[6]

"கொண்டு உடன் போக வலித்த
வன்கண்காளையை ஈன்ற தாயே"[7]

"இலங்கு இலை வெள்வேல் விடலையை
விலங்கு மலை ஆர் இடை நலியும் கொல் எனவே"[8]

முதலான அடிகள் தாய் தன் மகள் போர் வீரனுடன் சென்று விட்டதை எண்ணிக் கலங்குவதைக் காட்டுகிறது.

தொல்காப்பியர் இயற்கைப் புணர்ச்சிக்குரிய தலைவனும் தலைவியும் காண்ப என்று கூறுவர். தலைமக்களுக்குரிய பத்து ஒத்த குணங்களை "பிறப்பே குடிமை, ஆண்மை, ஆண்டே" என்ற தொல்காப்பிய 1219-வது நூற்பாவில் கூறியுள்ளார். இதில் ஆண்டு என்பது தலைமக்களின் வயதைக் குறித்துள்ளார். வயது என்பதில் ஒத்த பருவத்ததால் அது குழவி பருவங்கழித்து பதினாறு பிராயத்தானும், பன்னிரண்டு பிராயத்தாளும் ஆதல் வேண்டும் என்பர் இளம்பூரணர். இதனால் தலைமக்கள் ஒத்த பருவத்தினராக இருத்தல் வேண்டும் என்பதை அறியமுடிகிறது.

சங்க அகப்பாடல்கள் ஒன்றில் கூட, தலைமக்களின் வயது வெளிப்படையாகக் கூறப்படவில்லை.

தலைவியை பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்பன போன்ற சொற்களாலும், தலைவனை காளை, மீளி, விடலை போன்ற சொற்களாலும் குறிக்கப்பட்டுள்ளனர். இவ்வாறு குறிக்கப்படும் சொற்களால் தலைமக்களின் வயதை அறிந்து கொள்ளலாம்.

தமிழ் இலக்கியங்களில் வயது அடிப்படையில் பெண்களை, பேதை *(5-7)*, பெதும்பை *(8-11)*, மங்கை *(12-13)*, மடந்தை *(14-19)*, அரிவை *(20-25)*, தெரிவை *(26-32)*, பேரிளம்பெண் *(33-40)* என்றும், ஆண்களை பாலன் *(1-7)*, மீளி *(8-10)*, மறவோன் *(11-14)*, திறவோன் *(15)*, காளை *(16)* விடலை *(17-30)*, முதுமகன் *(31-க்கு மேல்)* என்று பாகுபடுத்தியுள்ளனர். இதனை உலா இலக்கியத்திற்கு இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்கள் குறிப்பிடுகின்றன. இவை 10 ஆம் நூற்றாண்டினவாகக் கருதப்பட்டாலும் இப்போக்கிற்கு அடிப்படை சங்க இலக்கியத்திலேயே காணப்படுகிறது.

தலைவி உடன்போக்கில் தலைவனுடன் சென்று விட்டாள். இதை செவிலி நற்றாயிடம் கூறும்போது, நம்மகளும், அவள் காதலனும் பாலையைக் கடந்து சென்று இதற்குள் மணம் புரிந்திருப்பர். இதனால் அவர்களுடைய நட்பு உலகறிய செய்யப்பட்டது என்று கூறும் பாடல் உள்ளது.

**''சேயிழை வெள்வேல் விடலையொடு**
**தொகுவளை முன்கை மடந்தை நட்பே''**[9]

என்ற பாடல் வரியில் தலைவனை, 'விடலை' என்றும் தலைவியை, 'மடந்தை' என்றும், சுட்டப்பட்டுள்ளது. மற்றொரு பாடலில்

**''தண்மழை தலையீன்றாக நந்நீந்துச்**
**சுடர்வாய் நெடு வேற்காளையொடு**
**மடமா வரிவை போகிய சுரனே''**[10]

தலைவனை, 'காளை' என்றும் தலைவியை, 'அரிவை' என்றும் சுட்டப்பட்டுள்ளது. தலைமக்களின் காதலுக்கு பெற்றோர் உடன்படாத சூழ்நிலையை இப்பாடல்கள் சுட்டுகின்றன.

இப்பாடலில் விடலை, மடந்தை, காளை, அரிவை என்று குறிப்பிடும்போது, தலைமக்கள் வயது அடிப்படையில் பொருத்தமானவர்கள் இல்லை. தலைவன் விடலையாகவும் *(17-30)*

தலைவி மடந்தையாகவும் (14-19) இருத்தலை பார்க்கும்பொழுது, தலைமக்களின் பருவம் கடந்தும், பெற்றோர் அவர்கள் திருமணத்திற்கு உடன்படாமையால் இருவரும் உடன்போக்கு செல்ல முடிவு செய்திருக்க வேண்டும்.

அடுத்தப் பாடலில் தலைவன் காளையாகவும் (16) தலைவி அரிவையாகவும் (20-25) இருத்தலை நோக்கும் போது, இவர்கள் இருவரும் பொருத்தமற்ற இணை எனக் கருதிப் பெற்றோர் திருமணத்திற்கு மறுக்க, தலைமக்கள் தாமே உடன்போக்கில் சென்று திருமணம் செய்து கொள்ள முடிவு செய்திருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது.

இது போன்ற காரணங்களாலும் உடன்போக்கு நடைபெற்றது என்பது பெறப்படுகிறது.

மனம் எண்ணியவனுடன் வாழ்வதையே கற்பாகச் சங்கச் சமூகம் அறிவுறுத்தியதால், அக்கற்பு நெறிகாக்க, உடன்போகிறாள் என்பதை ஐங்குறுநூறு 371 வது பாடல் கூறுகிறது. அயலவர் மணம் பேச வந்ததால் உடன்போகத் துணிந்ததாக அகநானூறு 369வது பாடல் கூறுகிறது. களவில் மெய்யுறுப்புணர்ச்சி நிகழ்ந்ததால் உடன்போகத் துணிந்ததாக குறுந்தொகை 318வது பாடல் கூறுகிறது. பெற்றோர் எதிர்த்ததால் உடன்போகத் துணிந்ததாக ஐங்குறுநூறு 385வது பாடல் வழி அறிய முடிகிறது. இவையே உடன்போக்கு செல்வதற்குக் காரணங்களாக அமைகின்றன.

அவ்வுடன்போக்கிலும் எதிர்ப்பு தொடர்வதை

> **"அமர்வரின் அஞ்சேன் பெயர்குவென்**
> **நுமர்வரின் மறைகு வென் மாயோளே"**[11]

என்ற நற்றிணைப்பாடல் வழி அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற 122 உடன்போக்குப் பாடல்களும், துயரத்தை வெளிப்படுத்துவனவே, ஒரு பாடலில் கூட மகிழ்ச்சித் ததும்பும் கூறுகள் இடம் பெறவில்லை.

தலைவியை உடன் அழைத்துச் செல்லும் தலைவன் பாலை நிலத்தின் வழியே செல்கிறான். பாலை வழி முழுவதும் ஓங்கி உயர்ந்த மலைகள், காடுகள் சூழ்ந்தது. வழிச்செல்வோரின் தலையை மோதியதால், புலிக்குட்டிகள் குருதி தோய்ந்த தலையுடன் காட்சி அளிக்கின்றன. இத்தகைய கொடிய வழியே நள்ளிரவில் அழைத்துக் செல்கிறான். அந்த வழியில் புலியின் கொடூரத் தாக்குதலில் இருந்து, கலைமான் தப்பித்து விடுகிறது. தான் பிழைத்ததைத் தெரிவித்துப் பெண்மானைக் குரல் எழுப்பி அழைக்கிறது. அந்த வழியில் தீயைப் போல, ஞாயிற்றின் வெம்மை சுட்டெரிக்கிறது. தலைவன் தலைவியை அழைத்துச்செல்லும் வழியில் உண்ணுவதற்குக் கூடத் தண்ணீர் இல்லை. செந்நாய் மண்ணைத் தோண்டி நீர் உண்கிறது. அப்பள்ளத்தில் இருந்ததோ அழுக்கு நீர் அதில் மல்லிகையின் இலையும் பூவும் விழுந்து அழுகிக் கிடக்கின்றன. அந்த நீரையே தலைவிக்குத் தர வேண்டும். தலைவனும் தலைவியும் உடன் செல்லும் வழியில் வழிப்போக்கர்கள் வாடுவார்கள், அம்புகள் தைப்பதால் உலர்ந்து வாடும், நாவினுக்குத் தண்ணீர் பெறாமல் உலர்ந்து வாடும், நாவினுக்குத் தண்ணீர் பெறாமல் தடுமாறுவார்கள். அந்தக் கொடிய துன்பத்தில் கண்ணீரையே தண்ணீராகப் பெறுவார்கள்.

இவ்வாறாக தலைவன் தலைவி உடன்போக்கு செல்லும் வழியின் இயல்பு கொடுமை நிறைந்ததாகவே கூறப்பட்டுள்ளது.

உடன்போக்குப் பாடல்கள் பொதுவாகப் பாலைப் பாடல்கள், தலைவன் தலைவி செல்லும் வழிகள் காட்டுவழிகள், ஆறலைக்கள்வர்கள், அலைக்கழிக்கும் பாதைகள், வற்றிய கிணறுகள், வறண்ட பாதைகள், வளம் குன்றிய காடுகள், வெயிலின் கொடுமை தாங்கமுடியாத, நடக்க முடியாத வெம்மை, அதில் நடந்து செல்லும் போது எதிர்கொள்ளும்

துன்பங்கள், துயரங்கள், வேதனைகள், வெதும்பல்கள் போன்றவை எல்லாம் சுட்டிக்காட்டும்.

'பொன்போலும் கள்ளி பொறிபறக்கும் கானல்' எனவும் 'விழுந்த துளி அந்தரத்தே வேம்' எனவும் பாலை நிலத்தன்மை புனைந்துரைக்கப்படும். இப்பாலை நிலத்தின் வழியாகவே தலைவன் தலைவியை உடன் அழைத்துச் செல்லும் உடன்போக்கு நிகழ்வதாகவும், தலைவன் தலைவியைப் பிரிந்து, இப்பாலை நிலத்தைக் கடந்து செல்வதாகவும் செய்யுள் செய்தல் மரபு. இது 'சுரம்' எனவும் வழங்கப்பெறும்.

### 4.1.2 தலைவியின் மகிழ்ச்சி

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்ளும் போது மகிழ்ச்சியாகச் சென்றாள் என்பதை

"முத்துஏர் வெண்பல் முகிழ்நகை மடவரல்"[12]

என்று ஐங்குறுநூற்றுப் பாடலடி உடன்போகும் தலைவி வெண்பல் தெரிய சிரித்து மகிழ்ந்தவாறே, உள்ளக்கழிப்புடன் துள்ளுநடை நடந்து சென்றாள் என்று கூறுகிறது.

### 4.1.3 பாதுகாவலன்

தலைவனும் தலைவியும் உடன்போக்கில் சென்றபொழுது, கள்வர்கள் போர் செய்ய வந்தனர். தலைவன் அவர்களை வென்று துரத்தினான் என்பதை

"......
வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது
அமரிடை உறுதர நீக்கி"[13]

என்ற நற்றிணை அடியால் பெறமுடிகிறது.

### 4.1.4 தலைவன் வீட்டுக்குச் செல்லல்

உடன்போக்கு மேற்கொண்ட தலைவனும் தலைவியும் தலைவனின் வீட்டுக்குச் சென்றனர். தலைவியிடம் தன்னூர்க்குள் நுழைகையில் களைப்பு தீர்ந்து மகிழ்வோடு செல்லுதலைத் தலைவன் விரும்பினான். புதுவோராய் வருவோரை வரவேற்று, உணவு அளித்து மகிழ்வித்தல் மரபாகலானும், தாம் பகலில் செல்லுதலால் விருந்தாகப் புகுவோம். தன் தாய் தம் வீட்டுக்கு வரும் மருமகளை விருந்தாக ஏற்பாள் என்றான் என்பதை

**''சுரத்திடை அயர்ச்சியை ஆறுகம் - மடந்தை**
**கல்கெழு சிறப்பின் நம் ஊர்**
**எல் விருந்து ஆகிப் புகுகம் நாமே''[14]**

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

உடன்போக்கில் சென்ற தலைவனையும், தலைவியையும், தலைவனின் தாய் மருமகளாக ஏற்பாள் என்பது பெறப்படுகிறது.

தாய்ப்பாசமோ அல்லது செல்வச் செழிப்போ அல்லது தோழியர் ஆயமோ அல்லது வீட்டுக்காவலோ அல்லது நகரக்காவலோ அல்லது பாலைவழியின் பயங்கரங்களோ, கூவல் தண்ணீரின் குறைபாடோ இல்லை, இவை போன்ற எதுவுமே காதல் என்பதன் முன்னால் நிற்காது, என்பதை நேரடியாகக் கூறாமல் மறைமுகமாக உணர வைப்பதும் உடன்போக்குத் துறையின் நோக்கமாகும்.

உலகில் வேறு எதுவுமே காதலை விட பெரிது அல்ல என்ற நிலை உருவாகும் போது தான் உடன்போக்கு நடைபெறும். அத்தகைய புனிதமான காதலைக் காட்டுவதற்காகவே உருவாக்கப்பட்ட ஒரு இலக்கிய உத்தியே உடன்போக்குத்துறை எனலாம்.

தாய்ப் பாசத்தைக் காட்டிலும், தாயுடன் மகள் கொண்டிருக்கும் பாசத்தையும், உறவையும் விடவும், தலைவி தலைவனிடம்

கொண்டிருக்கும் பாசமே, காதலே அதிக சக்தி வாய்ந்தது என்பதையே உடன்போக்குத்துறை நிரூபிக்கிறது எனலாம்.

### 4.1.5 அம்பல் அலர்

தலைவன் தலைவியரின் களவு வாழ்வு, கற்பு வாழ்வாக மாறுவதற்குத் துணை புரிவன அம்பல், அலர் என்னும் இவ்விரண்டுமேயாகும். தலைவியின் காதல் ஒழுக்கம் பற்றி, ஊர்ப்பெண்டிர் ஒருவருக்கொருவர் தமக்குள்ளேப் பேசிக் கொள்வது 'அம்பல்' எனவும் வெளிப்படையாகப் பேசுவது 'அலர்' எனவும் பெயர் பெறும். களவை வெளிப்படுத்துவன அம்பலும், அலருமாகும் என்பதையும், இதற்குக் காரணமானவன் தலைவன் என்பதையும் தொல்காப்பியர் குறிப்படுவர். அம்பலும் அலரும் உள்ளூர் பெண்டிராலேயே நிகழும். இத்தகையப் பெண்டிரை 'வெவ்வாய்ப்பெண்டிர், அலர்வாய்ப் பெண்டிர், அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர், அலர்வினை மேவல் அம்பல் பெண்டிர்' என்று சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. களவு வாழ்வில் வரையாத காரணத்தாலும், கற்பு வாழ்வில் பரத்தையாலும் அலர் தோன்றுவதாகப் பேசப்படுகின்றது.

### 4.1.6 அலரால் வரும் நன்மை

அலர் தூற்றியதைக் கண்ட தலைவி வருத்தப்படவில்லை. தன்னை அவனோடுச் சேர்த்துப் பேசப்பேச, அவளுக்கு பெரு மகிழ்ச்சி. ஊருக்கு உண்மை தெரிந்தது என்றும், இனி தன் வீட்டார் அவ்இடையனுக்கே தன்னை மணம் செய்து கொடுப்பர் என்றும், கற்புக்கு ஊறு இல்லை என்றும் நன்முறையிலேயே அலரை மதிக்கிறாள் என்பதை

> ''ஒண்ணுதால்
> இன்ன உவகை பிறிதுயாது யாயென்னைக்
> கண்ணுடைக் கோலள் அலைத்த தற்கென்னை
> மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
> அலர் செய்துவிட்ட இவ்வூர்''[15]

என்று கூறி மகிழ்கிறாள் என்பது புலப்படுகிறது.

**"அலரில் தோன்றும் காமத்து மிகுதி"**[16]

பிறர் அலர் தூற்றிய இடத்து தலைமகளுக்குக் காமம் மிகும் என்று தொல்காப்பிய நூற்பா குறிப்பிடுகிறது.

ஊராரின் அலர் காதலுக்கு எருவாகவும், அன்னையின் கடுஞ்சொல் இதற்கு நீராகவும், பயன்பட்டு இந்த காதல் நோய் செழித்து வளர்கிறது. அலர் தூற்றுவதால் காதலை அமர்த்தி விடுவோம் என்று சிலர் கருதுதல் நெய்யால் நெருப்பை அவிழ்த்து விடுவோம் என்று எண்ணுவது போன்றதாகும் என்கிறாள் தலைவி என்பது திருக்குறள் 1147, 1148 மூலம் அறியமுடிகிறது.

தலைவனும் ஊர் பெண்களால் எழும் அலரை விரும்பினான். கள் வெறியர் கள்ளைக் குடித்து மயங்க மயங்க, அந்தக் கள்ளையே விரும்புவர். அதே போன்று, என் காதல் அலராக வெளிப்பட, வெளிப்பட யாம் அந்த அலரையே விரும்புகிறோம் என்பதாக.

**"களித்தோறும் கள்ளுஉண்டல் வேட்டற்றால் காமம்**
**வெளிப்படும் தோறும் இனிது"**[17]

என்ற குறள் மூலம் அறியமுடிகிறது.

அலரால் தன் காதல் வளர்ச்சி பெற்றதாக உணர்கிறான். அது இல்லைஎனில் தன் தன்மை இழந்து சுருங்கிவிடும் என்றும் (குறள் 144), பிரிவுத் துன்பத்தை மறப்பதற்காக உயிர் நிற்பதற்கு உதவியாக உள்ள அலர் இருப்பது, தன் பாக்கியமாகவே எண்ணுகிறான் என்பதை திருக்குறள் 1141 மூலம் அறியமுடிகிறது.

அம்பலும் அலரும் தலைவனுக்கும் தலைவிக்கும் மகிழ்ச்சியைத் தருகிறது. ஆனால் தாய்க்கோ அவ்வலர் கொடுந்துன்பம் விளைவிக்கின்றது. அம்பலையோ, அலரையோ எவ்வகையிலும்

விரும்புவதில்லை. தன் குடும்பத்தைப் பற்றி பேசுவதற்கு இவர்கள் யார்? தன் மகள் நடத்தைப் பற்றி பேசுவதற்கு ஊரார்க்கு என்ன உரிமையுண்டு என்றெல்லாம் தாய் மனம் கொதிக்கிறது. இதனை

> "கௌவை மேவலராகி இவ்வூர்
> நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ
> புரைய அல்ல வென் மகட்கு"[18]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. இவ்வாறு அலரானது ஒரு வகையில் நன்மையாகவும், மறுவகையில் தீமையாகவும் சங்கப் பாடல்களில் அமைவதைக் காணலாம்.

## 4.2 சிலம்பு கழித்தல்

இளம்பெண்கள் திருமணம் ஆவதற்கு முன்பு சிலம்பு அணிந்திருப்பார்கள். இளம் பருவத்திலிருந்தே அணியப்பட்ட அச்சிலம்பு மணம் முடிவானதற்குப் பின்னரும், மணம் நிகழ்வதற்கு முன்னருமான ஒரு நல்லநாளில் மணமகள் இல்லத்தில் காலில் உள்ள சிலம்பு கழற்றப்படுகிறது. இந்நிகழ்ச்சி 'சிலம்பு கழி நோன்பு' எனப்படும்.

திருமண வாழ்வின் போது பெண்ணுக்கு அவள் காலில் உள்ள சிலம்பு கழற்றப்படுவது 'சிலம்புகழி நோன்பு' என்று சிறப்பானதொரு நிகழ்ச்சியாகச் சங்கச் சமூகம் காட்டுகிறது என்பதை அகநானூற்று 385 வது பாடலின் வழி அறிய முடிகிறது. ஒரு பெண் திருமணம் ஆனவள் என்பதை அறிவிக்கும் ஒரு நிகழ்வாக இன்றியமையாத ஒரு விழாவாக இதனைக் கருதுவர்.

சிலம்பு கழித்தல் நிகழ்ச்சி என்பது பெண்ணின் தாய் வீட்டில் நிகழ வேண்டும் என்பதை அகநானூற்று 315வது பாடலின் வழி அறியமுடிகிறது. இதற்குத் தடை ஏற்படின் கணவன் வீட்டிலாவது நடத்தப்படவேண்டும் என்பது நற்றிணை 279 வது பாடலின் மூலம் பெறப்படுகிறது.

"திருமணத்திற்குப் பின் பெண்ணின் வாழ்வு முழுமையும் அவளுடைய கணவனுடனேயே பின்னிப்பிணைத்து, அவன் இல்லம் பொறுப்புக்குரியவளாக பேரில் கிழத்தி ஆதல் என்பது அகநானூற்று 86வது பாடல் வழி வெளிப்படையாக தெரிகிறது. எனவே பெண், தன் தாய் வீடு மீது கொண்ட பற்றினை முழுமையாகக் களைந்து அவன் வீடு செல்கிறாள் என்பதைக் குறிக்கும் குறியீடாகச் சிலம்பு கழிதலைக் கருதலாம். திருமணத்திற்குப் பின் ஒரு தாய் தன் மகள் வீட்டிற்குச் சென்றதாக குறிப்புகள் இல்லை. மகள் இல்லத்திற்கு செவிலி மட்டும் சென்று வருவதாக ஐங்குறுநூறு 400, 410 பாடல்கள் வழி அறியமுடிகிறது. நற்றாயோ, தந்தையோ, உடன்பிறப்போ சென்றதாக குறிப்பு இன்மையும் இக்கருத்தை வலியுறுத்துகின்றன.

**"சீர்கெழு வெண் முத்தம் அணிபவர்க்கு அல்லதை**
**நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதான் என் செய்யும்**
**தேருங்கால் நும்மகள் நுமக்கு ஆங்கனையனே"**[19]

என்ற கலித்தொகைப் பாடலும் இதனை வலியுறுத்தக் காணலாம் என்பதை 'சங்கச் சமூகத்தில் பெண்டிர் நிலை' என்ற கட்டுரையில் சிவகாமி குறிப்பிட்டுள்ளார்.

## 4.3 களவும் உறவும்

தலைவனும் தலைவியும் சேர்ந்து பழகும் களவு வாழ்வில் இருவரும் உடல் உறவு கொண்டனர் என்றும், கொள்ளவில்லை என்றும் இரு கருத்துக்கள் நிலவுகின்றன. இலக்கியவியலாலும், சமுதாயவியலாலும் இதனை ஆராய்தல் வேண்டும், களவில் 'மெய்த்தொட்டுப் பயிறல் உண்டு' என்ற தொல்காப்பிய நூற்பா 11 'கைப்பட்டு கலங்குவதும் உண்டு' *(12.5)* 'அளவு மிகத் தோன்றினும்' *(25)* என்னும் தொல்காப்பிய நூற்பா தொடருக்கு இளம்பூரணர்உரையும், நச்சினார்க்கினியர்உரையும் கவனத்திற்குரியவை.

''பெதும்மைப் பருவத்தாளாகிய தலைவி
புணர்ச்சியாற் கதிர்த்து வீங்குகின்ற
முலையும் புதிதுற்ற கவினும்''

என்பர் இளம்பூரணர்.

அகநானூற்றுப் பாடல் 150ஐ மேற்கண்ட உரை அரண் செய்யும்

''பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென
ஆகத் தரும்பிய சுணங்கும் வம்புவிடக்
கண்ணுருத் தெழுதரு முலையும் நோக்கி
எல்லினை பெரிதெனப் பன்மாண் கூறிப்
பெருந்தோள் அடைய முயங்கி நீடுநினைந்
அருங்கடிப் படுத்தனள்
.....
தாரார் மார்ப நீ தணந்த ஞான்றே''[20]

அன்றியும் ''நாற்றமும் . . . . எனத் தொடங்கும் தொல்காப்பிய 24 ஆம் நூற்பாவின் பொதுப்போக்கும் ''புணர்ந்தபின் புணர்ச்சி வேண்டினும் புணர்ச்சி உணர்ந்துழி'' என வரும் சொற்றொடர்களும் தலைவி தலைவனுடன் களவில் உறவு கொண்டதை உறுதி செய்கின்றன.

இந்நூற்பா உரையில் நாற்றம் என்பதைத் தலைவன் கூட்டத்தால் மன்மதச்சாந்து முதலியனவும், பல பூக்களும் விரவி நாறுதல் என்றும் தோற்றம் என்பதை தந்நிலை திரிந்து துணைத்து மெல்கிப் பிணைத்துக் காட்டுந் தோளும் முலையும் என்றும் நச்சினார்க்கினியர் கூற்றும் கருதுதற்குரியன.

### 4.3.1 களவும் பூப்பும்

களவில் இடம் பெற்றுள்ள

''முந்நாள் அல்லது துணை இன்று கழியாது
அந்நாள் அகத்தும் அது வரைவின்றே''[21]

என்பது தொல்காப்பிய நூற்பா அதற்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரையும் கவனிக்கத்தக்கவை. கற்பியலில் இடம்பெற வேண்டிய இந்நூற்பா களவியலில் இடம் பெற்றமை எண்ணுதற்குரியது. பூப்புக்குரிய மூன்று நாட்கள் களவுக் காலத்தில் புணர்ச்சிக்குரிய நாட்களாக முற்காலத்துக் கருதப்பட்டிருத்தல் வேண்டும். பூப்புக் காலப் புணர்ச்சி குழந்தைப் பேற்றுக்கு வழி வகுக்காது என்ற பாதுகாப்பு, புணர்ச்சி காரணமாக உருவாகி இருக்க வேண்டும். நச்சினார்க்கினியர் பூப்பெய்திய மூன்று நாளும் அல்லது கூட்டம் இன்றி என்ற உரையும் பூப்பு நிகழும் காலத்து வரையாது (விலக்காது) களவொழுக்கம் நிகழ்த்தினர் என்று சிறப்புரையும் எழுதுவார்.

> ''குக்கூ என்றது கோழி அதனெதிர்
> துட்கென்ற ன்றென் தூஉ நெஞ்சம்
> தோன் தோய் காதலர் பிரிக்கும்
> வான் போல் வைகறை வந்தன்றால் எனவே''[22]

என்ற குறுந்தொகை பாடலைக் காட்டி எழுதும் குறிப்பு எண்ணத்தக்கது. பூப்பு எய்திய தலைமகள் உரைத்தது இது.

முந்நாளைப் பிரிவாகிய பூப்பிடைப் பிரிவு வந்துழித் தலைவி கூறியது என்பது அவர் தரும் குறிப்பாகும்.

## 4.4 களவில் தலைவி வீட்டில் தலைவன்

> ''இரவுக் குறியே இல்லகத் துள்ளும்
> மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே
> மனையகம் புகாஅக் காலையான''[23]

என்ற தொல்காப்பிய நூற்பா உரையில் நச்சினார்க்கினியர், 'அச்சமின்றி உள்மனை சென்று கூடவும் பெறும்' என்று எழுதுவர். எனவே இல்லத்தின் புறத்தும், இரவுக் காலத்தும், இல்லத்தின் அகத்தும் தலைமக்கள் களவில் கூடினர் என்பது தெளிவாகிறது.

"அயத்துவளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன
நகைப் பொலிந்திலங்கும் எயிறுகெழு துவர்வாய்
ஆகத் தரும்பிய முலையள் பணைத்தோள்
மாத்தாட் குவளை மலர்ப்பிணைத்தன்ன
மாயிதழ் மழைக்கண் மாத யோளோடு
பேயும் அறியா மறையமை புணர்ச்சி"[24]

என்ற அகநானூறு பாடல் தலைவன் முதற் புணர்ச்சியை மீண்டும் நினையும் பாட்டு இது. மாநிறத் தலைவியின் செவ்விதழ் சுவைத்து, அரும்பிய மார்பையும், அகன்ற தோளையும் தழுவி நுகர்ந்த மறைத்தற்கரிய முதற் கூட்டுறவை நினைவு கொள்கிறான். பேயும் நடமாட்டம் ஒடுங்கித் தூங்கும் நள்ளிரவில் துய்த்த களவுப் புணர்ச்சி என்று பெருமிதங் கொள்கிறான். உள்ளப் புணர்ச்சிக்கு மறைவிடம் வேண்டியதில்லை. பேயும் அறியா நடுயாமம் வேண்டியதில்லை. ஆதலின் பரணர் இப்பாட்டில் களவுக் காதலரின் மெய்ம் முயக்கத்தைக் கூறுகிறார் என்பது வெளிப்படை முன்பின் யாதொரு உறவும் முகவரியும் இல்லாதார் உள்ளம் அன்புற்று உடன் இன்புற்ற காட்சியை குறுந்தொகைப் பாட்டால் அறிகின்றோம். காதலன் புணர்ச்சி நிறைவில் காதலியை நோக்கி, "இப்போது நம் உடல்களா கலந்தன, அன்புடை நெஞ்சந் தாம் கலந்தனவே" என்று நாகரிகமாக நலம் பாராட்டுகிறான் எனலாம்.

மகட்போக்கிய தாய் / செவிலித்தாய் கூற்றில் பாடிய புலவர்கள் யாவரும் ஆண்பாற் புலவர்களே. அகப்பாடல்களுள்ளும் மகட்போக்கிய தாய் / செவிலி கூற்றில் மிகுதியாகப் பாடியவர் கயமனார். அகம் பாடிய பெண்பாற்புலவர்கள் யாருமே மகட்போக்கிய தாய் / செவிலிகூற்றில் பாடவில்லை என்பது நோக்கத்தக்கது. பாடுவதற்கு வாய்ப்பு ஏற்படவில்லையா? பாட விரும்பவில்லையா? என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

உடன் போக்கைச் சரி என்று சமுதாயம் அக்காலத்தில் ஏற்றுக் கொண்டாலும், மகளுடைய செயல் எல்லை மீறியதாகத் தாயை வருந்தியிருக்கும் அன்னைக்கு சமுதாயத்தில் நாணத்தை ஏற்படுத்திக்,

குடும்பத்திற்கு ஒரு கெட்ட பெயரை ஏற்படுத்தியிருக்கும். மறுநாள் நின் மகள் எங்கே சென்றனள் என்று ஆயமும், பிறரும் கேட்குங்கால் அவள் நிலைமை மிகவும் வருந்தத்தக்காகவே அமையும். தாயின் உள்ளம் படாதபாடுபடும். அதனால் தான் பெண்பாற்புலவர்கள் ''மகட்போக்கிய தாய் கூற்றில் யாதொரு பாடலும் பாடாது விடுத்தனரோ என்று நினைக்கத்தோன்றுகிறது.

## 4.5 ஓம்படைக்கூறுதல் (என்றென்றும் காக்க வேண்டுதல்)

களவொழுக்கம் தொடங்கும்போதே இயற்கைப் புணர்ச்சியாகவேத் தொடங்குகிறது. தலைவியின் அழகைக் கண்டு, தலைவன் காதல் கொள்கிறான். தலைவியும் அவனுடைய எடுப்பான தோற்றத்தையும், மிடுக்கான பார்வையையும் கண்டே, மயங்கி விடுகின்றாள். உள்ளப்புணர்ச்சி நிகழ்ந்து களவு வளருகிறது.

அறத்தொடு நிற்றலால், உடன்போக்கு தேவையில்லை உடன்போக்கிற்குத் தலைவனையும் தலைவியையும் தோழியே, துணிச்சலுடன் நின்று செயல்படுத்துகிறாள். உடன்போக்கு மேற்கொள்ளவிருக்கும் தலைவன், தலைவியைச் செவ்வனே காக்க வேண்டும் என்று அறிவுரை கூறுகிறாள். தலைவன் தலைவியை பேண வேண்டிய முறையைச் சொல்லும் களம் உடன்போக்கேயாகும்.

உடல் வளத்தோடும், கவினோடும், கட்டோடும் இருக்கின்ற தலைவி இன்று, அழகாகத் தெரிகிறாள். தலைவன் தலைவியின் அழகால், தன் மனத்தை இழந்து, தீராத காதலுடையவனாய் இருக்கின்றான். அவளை இன்று நேசிப்பது போல, என்றென்றும் தலைவன் நேசிக்க வேண்டும் என்றே தோழி விரும்புகிறாள்.

இப்போது பல வகையிலும் தலைவி, தலைவனுக்கு இன்பம் அளிப்பவள். இவளால் இப்போது பெரும் இன்பத்தை முதுமையில், தலைவனால் அடையமுடியாது. அந்த முதுமைக் காலத்தும் தலைவன்

தலைவியிடத்தில் உள்ள அன்பு மாறாமல், காத்து வருதல் வேண்டும் என்பதையே தோழி கூறுகிறாள்.

''அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் நாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்பு மதி பூக்கேழுர''[25]

மார்பு தளருதல், கூந்தல் நரைத்தல் என்ற இரண்டிலும் தலைவியின் உடல் நலம் குன்றும். அத்தகைய வயது முதிர்வதாலும், இல்லறக் கடமைகளாலும், தலைவியின் அழகு குன்றி விடுகிறது. இத்தகைய நிலையில் தலைவன் புறத்தொழுக்கம் உடையவனாகின்றான்.

தாம் விரும்பி மணந்து கொண்ட மனைவியைப் புறக்கணிக்கக் கூடாது என்பதேயாகும். மக்கட்பேற்றால் தலைவியின் அழகும், கட்டுக்கோப்பும், குலையும் இதனால் தலைவன் அவளை விடுத்து, புறம் அலைவான் என்பதை அறிந்தமையால் தலைவனுடன் தலைவியை உடன்போக்காக அனுப்பும், தோழி தலைவனிடம், எக்காலத்தும் அன்பு வைத்து காப்பாயாக என்று தலைவனிடம் கூறுகின்றாள்.

''பெரு நன்று ஆற்றின் பேணாரும் உளரே
ஒரு நன்று உடையன் ஆயினம் புரிமாண்டு
புலவி தீர அளிமதி இலைகவர்பு
ஆடுஅமை ஒழுகிய தண் நறுஞ்சாரல்
மென்றடை மரையா துஞ்சும்
நன்மலை நாடன் அலது இவளே''[26]

என்ற பாடலின் மூலம், ''தலைவியை மறவாதே'' என்று தோழி, தலைவனிடம் கூறுகிறாள். களவுக்காலத்தில் தலைவனை நம்பி, தலைவி தன்னையே ஈந்தது செயற்கரிய செயல், அதனாலேயே அது மறக்கக்கூடாத நன்மையாகிறது. தலைவியே புலவி கொண்டதாலும், அப்புலவி தீர்த்து அவளைக் காக்க வேண்டும் என்றாள்.

தலைவனுடன் தலைவி உடன்போக்காக வரும்போதே அவள் அன்னையையும், அத்தனையும் அன்றே நீத்தாள். உறவு

என்று யாருமேயில்லை அனைவரும் பகையாகி விட்டனர். தலைவன் தலைவியை துறந்தாலோ, புறக்கணித்தாளோ யார் காப்பர். தலைவி பாலுறவுக்குத் தகுதியில்லாதக் காலத்தும் முதுமைக் காலத்தும் அவளை தலைவன் பேண வேண்டும் என்கிறாள். எனவே கட்டிய மனைவியை எக்காலத்தும் விட்டுவிடாது பேணுவது கடமையாகும் என்கிறாள். இந்த இல்லறக் கோட்பாடு எக்காலத்திற்கும், எந்தச் சமுதாயத்திற்கும் பொருந்தக்கூடியதாகும்.

அறத்தொடு நின்றபின் அன்னை, தந்தையர் விருப்புடன் திருமணம் நடந்த போது கூட, தலைவனிடம் யாரும் தலைவியை நல்லபடியாக பேணவேண்டும் என்ற அறிவுரை கூறியதற்குச் சான்றுகள் இல்லை. உடன்போக்காகத் தலைவியை தலைவனுடன் அனுப்பும் தோழியே அறிவுரை கூறுகிறாள். தலைவிக்கு இறுதிவரை தலைவனே துணை என்பதையே உடன்போக்குப் பாடல்கள் உணர்த்துகின்றன.

## 4.6 நற்றாய்

தலைவியை ஈன்ற தாய் நற்றாய் ஆவாள். தலைவியை வளர்க்கும் பொறுப்பை செவிலியிடம் விட்டு விட்டாலும், தலைவியை தன்னுடைய இல்லறக் கடமைகளுக்கு இடையேயும், உணவூட்டிப்பேணும் இயல்பு பல பாடல்களில் காணப்படுகிறது.

செவிலியும் நற்றாயும் சேர்ந்து, தலைவியை அளவிலா அன்பு கொண்டு வளர்த்ததால், தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டதை அறிந்து, பிரிவாற்றாமையால் தாங்கமுடியாத துயரம் அடைகின்றாள்.

### 4.6.1 தலைவனைச் சாடுதல்

தலைவன் தலைவியை ‘பொய்ம் மொழிகள்’ கூறி அழைத்துச் சென்று விட்டான் என்றே நற்றாய் கூறினாள். தலைவனைப் பற்றி ’ என்று கூறிச் சாடுகிறாள். தலைவன்

தலைவியைப் பொய்க்கூறி அழைத்துச் சென்றுவிட்டான் என்றும், தலைவியும் அதை உண்மை என்று நம்பிச் சென்றாள் என்பதை

**''பொம்மல் ஓதி எம்மகள் மணன் என**
**வதுவை அயர்ந்தனர் நமரே அதனால்**
**புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்''**[27]

என்ற பாடல்வரி மூலம் அறியலாம்.

### 4.6.2 உயிர்போகாததை எண்ணுதல்

உடன்போக்கு சென்றுவிட்ட தலைவியின் தாயை சிலர் தேற்றுகின்றனர். அதற்குத் தாய், ''என் மகள் உடன்போக்குச் சென்றதற்காக நான் வருந்தவில்லை, அவளைத் துறந்த என் உயிர் இன்னும் போகாமல் இருக்கிறதே'' என்று நினைத்து வருந்துகிறேன் என்றாள். இக்கருத்தை அகநானூறு 55வது பாடல் தெளிவுபடுத்துகிறது.

### 4.6.3 தலைவனின் தாயை சபித்தல்

தலைவனுடைய தாயை நற்றாய் சாடுதல், இரண்டு நிலைகளில் காணப்படுகிறது. தலைவி இல்லாமல் பொலிவிழந்து காணப்படும் ஆயத்தினைக் கண்டு கலங்கும் நற்றாய், தலைவனின் தாயும் இத்தகைய கலக்கம் அடைய வேண்டும் என்று எண்ணுகிறாள் என்பதை

**''பூங்கண் ஆயங்காண்தோறும் எம்போல்**
**பெறுவிதுப் புறுக மாதோ எம் இற்**
. . . .
**வன்கண் காளையை ஈன்றதாயே''**[28]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

தலைவி உடன்போக்கு மேற்கொண்டு, தாயைப் பிரிந்ததால் ஏற்பட்ட பிரிவுத் துயரால், நற்றாய்க்கு மிகுந்த வேதனையைத் தந்தது. மகட்பிரிவு தந்த துயரைவிட, அவள் சுரவழியில் செல்ல நேர்ந்த நிலைக்கு துயரம் அதிகமானது. இத்துன்பம், சினமாக மாறி, சுரத்திடை தலைவியை

அழைத்துச் சென்ற தலைவன் மீதும், அவனை ஈன்ற தாயின் மீதும் பாய்கிறது. இதனால் நற்றாய்,

''நினைத் தொறுங் கவிழு மிடும்பை எய்துக
. . . . . .
வெஞ்சுர மென்மக நெய்த்த
அம்பு அமை வல்வில் விடலை தாயே''[29]

என்று கூறி சாடுகிறாள் என்பதைத் தெளிவாக்குகிறது.

### 4.6.4 தீவினையே காரணம்

தலைவியின் உடன்போக்கை அறிந்த நற்றாய் தீவினையே காரணம் என்று கோபம் கொள்கிறாள். இதனை

''நாடொறும் கவிழு மென்னினும் மிடைநின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ
. . . . .
பூப்புரை யுண்கண் மடவரற்
போக்கிய புணர்த்த அறனில் பாலே''[30]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

செல்வமனையில் வாழ்ந்த தலைவி, வறிய பாலை நிலத்தில் தலைவனுடன் சென்றமை ஊழ்வினையால் நிகழ்ந்தது என்ற எண்ணத்தில் நற்றாய் ஊழ்வினையைத் 'தீயிடைப்பட்டு ஒழிக' என்று சினத்துடன் சாடுகிறாள்.

### 4.6.5 திருமணம் செய்து வைத்திருப்பேன்

தலைவன் மீது தலைவி கொண்ட அன்பு தெரிய வந்திருந்தால், அவர்கள் இருவருக்கும் மணம் செய்து வைத்திருப்பேனே என்று நற்றாய் வேதனைப்படுகிறாள் என்பதனை

''. . . . . வன்கண்காளைக்கு
அவள் துணிபு அறிந்தனென் ஆயின் அன்னோ
. . . . .
வஞ்சியன்ன என் வளநகர் விளங்க
இனிதினிற் புணர்க்குவென்''[31]

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. இப்பாடலில் நற்றாய் தலைவியின் களவொழுக்கம் தனக்குத் தெரியாது என்று வருந்துவதாக இப்பாடல் அமைகிறது.

### 4.6.6 தன்னையும் எண்ணிப்பார்க்க விழைதல்

தலைவி உடன்போக்கின் போது, தன்னையும் எண்ணிப் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறாள். அதனால் அவள்

''என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
. . . . . .
செழும்பல் குன்ற மிகுந்த வெண்மகளே''[32]

என்று கூறுகிறாள்.

சங்க அகப்பாடல்களில் சுரவழிச் செல்லும் தலைவி தன் தாயைப்பற்றியோ, அவளுடைய அன்பைப்பற்றியோ நினைத்துப் பார்ப்பதாகக் காட்டப்படவில்லை. தலைவனுடன் சேர்ந்திருக்கும் இன்பத்தால் நிறைவு பெற்றிருக்கும், தலைவியின் உள்ளத்தில் தாயைப் பற்றிய எண்ணம் ஏற்படவோ, வாய்ப்பேயில்லையோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

### 4.6.7 மனைமருட்சி

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டதை அறிந்த நற்றாய் மிகவும் வருந்தினாள் என்பதை,

''கோதை மயங்கினும் குறுந்தொடி நெகிழினும்
காள் பெயல் அல்குல் காசுமுறை திரியினும்
மாண் நலம் கையறக் கலுழும் என்
மாயக்குறு மகள் மலர்ஏர் கண்ணே''[33]

என்ற பாடலின் மூலம் கூந்தலைச் சிக்கலிலிருந்து விடுவிக்க அறியாத தலைவி, வாழ்க்கைச் சிக்கலிலிருந்து எங்ஙனம் விடுபடுவாள். கையிலிருந்த வளைகழன்றாலும், செறித்துக் கொள்ளத் தெரியாதவள், இடையில் முறை பிறழ்ந்து கிடக்கும் காஞ்சியை ஒழுங்குபடுத்திக் கொள்ளமாட்டாதவள், தன்

கற்பு வாழ்க்கையை எங்ஙனம் சமைத்துக் கொள்வாள் என்று தாய் வருந்துகிறாள் என்பது பெறப்படுகிறது.

மகள் விரும்பி வளர்த்த கிளியும், பூவையும் வைத்து விளையாடிய பந்தும், பாவையும், கிழங்கும் அவள் விளையாடிய திண்ணையும், நொச்சி மரத்தடியையும் அவள் உடன்போக்கு போனபோது, பிரிவை நினைத்து ஆற்றாமையால் வருந்தி புலம்பினாள்.

### 4.6.8 வயலைக் கொடியிடம் புலம்பல்

தலைவி உடன்போக்கு மேற்கொண்டதால் பிரிவாற்றாமையால் வருந்திய தாய், வயலைக் கொடியை நோக்கி, "எம் தலைவிக்கு அழகு செய்யும் அவளுடைய மகளிர் போல, நீயும் துயரத்தால் வாடிக் கிடக்கின்றனை, தண்ணீர் ஊற்றித் தாயைப்போல், நிறைய நீரினை ஊற்றி நின்னைப் பாதுகாக்கும் இனியார் இருக்கின்றார்கள், நீ இரங்கத்தக்காய்" என்று கூறும் செய்தியை அகநானூறு 383 வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

### 4.6.9 தெய்வம் காக்க வேண்டுதல்

தன் மகள் செல்லும் பாலைநிலம் வெப்பமில்லாமல் குளிர்ச்சியாக இருக்கவேண்டும் என்று எண்ணுகிறாள். தலைவி இளமையானவள். விளையாட்டு இயல்பை உடையவளாதலால் தலைவன் தன்னுடைய மகளை நன்கு காக்க வேண்டும் என்று தெய்வத்தை வேண்டுகிறாள் என்பதை

"வாடினை வாழியோ வயலை நாள்தோறும்
பல்கிளைக் கொடிக் கொம்பு அலமர மலர்ந்த
அல்குல் தலைக் கூட்டு அம்குழை உதவிய
. . . . .
. . . . .
ஆரநீர் ஊட்டி புரப்போர்
யார் மற்றுப் பெறுகுவை? அளியைநீயே"[34]

என்ற பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

### 4.6.10 காளையைத் துன்புறுத்துவாள்

பெரும்பாலான தாய்க்கூற்றுப் பாடல்கள் தன் மகளை நினைத்து வருந்துவதாக இருக்க, ஒரு பாடல் மட்டும், சற்று மாறுபட்ட நிலையில் உள்ளது. பாலை வழியில் இந்த காளையை, தலைவனை என் மகள் துன்புறுத்துவாளோ, பாலை வழியில் உள்ள ஏதங்களுக்குப் பயந்து, அவனைத் துன்புறுத்துவாளோ என்று தலைவனை நினைத்து வருந்துவதாக உள்ளது என்பதை,

> "இலங்கு இலை வெள்வேல் விடலையை
> விலங்குமலை ஆர்இடை நலியுங் கொல் எனவே"[35]

என்ற நற்றிணைப் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 4.6.11 தலை மக்கள் விரைவில் வீடு திரும்ப எண்ணுதல்

உடன்போக்கு மேற்கொண்ட பாலை வழியே சென்ற தலைவனும் தலைவியும், விரைவில் வீடு திரும்ப வேண்டும் என்று நற்றாய் ஆசைப்படுகிறாள். தன்னைப் பிரிந்து சென்ற தன் மகள் விரைவில் வீடு திரும்பினாள். அவர்களுக்கு உடனே மணம் முடித்து வைக்கவும் எண்ணுகிறாள்.

### 4.6.12 சிலம்பு கழிக்கும் நிகழ்ச்சி

தலைவனுடன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டாள். அவர்கள் தலைவனின் ஊர் சென்றனர். தலைவனின் தாய் தலைவிக்கு 'சிலம்பு கழி நோன்பு' நிகழ்த்தினாள் என்பதை கேள்விப்பட்ட நற்றாய், தலைவியின் சிலம்பு கழிக்கும் நிகழ்ச்சி தலைவன் வீட்டில் நிகழ்ந்தாலும், அவளது திருமணமாவது தன் வீட்டில் நிகழவேண்டும் என்று விரும்பி தன் ஆற்றாமை மீதுறக் கூறினாள்.

### 4.6.13 வேலனிடம் குறிகேட்டல்

தாய் வேலனை அழைத்து, "என் மகளை அழைத்துக் கொண்டு சென்ற தலைவன், அவன் வரவை எதிர்பார்த்துச் சுவருக்கு செம்மண் பூசியும், முற்றத்தில் மணல் பரப்பியும், மனைக்கண் கோலம் செய்தும் எதிர்பார்த்திருக்கும் அவன் தாய் வீட்டிற்குச் செல்வானோ அல்லது என் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வருவானா என்று பார்த்துச் சொல்" என்று கேட்கிறாள் என்பதை,

> "மாறாது வருபனி கலுழுங் கங்குலில்
> ஆனாது துயருமெங் கண்ணினிது படீஇயர்
> எம் மனை முந்துறத் தருமோ
> தன் மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே"[36]

என்ற அகநானூற்றுப் பாடல் வரிமூலம் அறியமுடிகிறது.

### 4.6.14 காகம் கரைய வேண்டுதல்

காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் என்பது நம்பிக்கை. தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டதால், பிரிவாற்றாமையால் வருந்திய நற்றாய், தலைமக்கள் திரும்பி வந்துவிட வேண்டும் என்ற ஆசையால், காகத்துக்கு உணவு தந்து இதனிடம் விருந்தினர் வர கரையுமாறு வேண்டுகிறாள் என்பதை,

> "......
> வெஞ்சின விரல்வேல் காளையொடு
> அஞ்சி லோதியை வரக் கரைந்தீமே"[37]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 4.6.15 உடன்போதல் அறநெறி

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றாள் என்பதை அறிந்த தாய் முதலில் பிரிவாற்றாமையால் புலம்பி, அழுது, இறுதியில் உடன் சென்றது அறநெறியே என்று தெளிந்து கூறினாள் என்பதை,

"அறநெறி இது எனத் தெளிந்த என்
பிறை நுதற் குறுமகள் போகிய சுரனே"[38]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

தலைவனை, நற்றாய் முதலில் சாடுவதற்குக் காரணம் தன் மகளாகிய தலைவியை சிறுமியாகவே, பெற்ற தாய் நினைத்ததால், நன்மை தீமைகளைப் பற்றியும், பிரித்தறியும் திறன் பெற்றிருக்க மாட்டாள் என்றே எண்ணியிருக்கலாம். அதனாலேயே ஒன்றுமறியாத தன் மகளை தலைவன் பொய்க்கூறி ஏமாற்றி அழைத்துச் சென்றதாகக் கலங்குகிறாள்.

பின்பு தலைவனுடன் சென்றது அறநெறியே என்று கூறுவதும், பொய் சொன்னதை நம்பிப் போனாள் என்று கூறுவதும் முரணாகவே உள்ளது. தான் அருமையாகப் பெற்று வளர்த்த மகளைப் பிரிந்து வருந்தும், வருத்தம், தாயின் உள்ளத்தில் ஏற்படும் தடுமாற்றமே இப்படிப் பேசக் காரணம் என்று நினைக்கத் தோன்றுகிறது.

### 4.6.16 தாயின் மனநிலை

தலைவியின் தாயொருத்தி தன் மகள் உடன்போக்கு சென்றதைத் தோழியிடம் கூறும்போது, "அவள் சென்றது எனக்கு மகிழ்ச்சி தான் என்றாலும், பலரறிய இங்கே மணவிழா நடைபெற்றிருப்பின் அதைவிட மகிழ்ச்சியாக இருந்திருக்கும்" என்று கூறுகின்ற செய்தி ஐங்குறுநூறு 379 வது பாடல் புலப்படுத்துகிறது.

### 4.6.17 சுற்றத்தினரை அழைக்கின்றாள்

உடன்போக்கு மேற்கொண்ட தலைவன், தலைவியை மீண்டும் தன் இல்லத்திற்கே அழைத்து மணவினை நிகழ்த்த முயல்கிறாள். தலைவனும் இசைவு சொல்லி, "இன்ன நாளில் நாங்கள் வருவோம்" என்று கூறி வருகின்றான், வாயில்கள் மூலம் அறிந்த நற்றாய், கற்புக்கடம் பூண்ட மகளிர்க்கு அறநெறியென உடன்போக்கினால் சென்ற என் மகள் மீண்டும் வருகின்றாள். "அவளை வந்து காண்க" என்று தன் சுற்றத்தினரை

அழைக்கின்றாள். ஊரும் தலைவன் தலைவியரை ஆதரிக்க வேண்டும் என்று துடிக்கும் தாயின் மனம் படபடப்பதை

''மாண்பு இல் கொள்கையொடு மயங்கு துயர் செய்த
அன்பு இல் அறனும் அருளிற்று மன்ற
வெஞ்சுரம் இறந்த அம் சில் ஓதி
பெருமட மான் பிணை அலைத்த
சிறு நுதற் குறுமகட் காட்டிய வம்மே''[39]

என்ற ஐங்குறுநூற்றில் பாடல் மூலம் அறியமுடிகிறது. இது சமுதாயம் அவர்களை விரும்பி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று தாய் விரும்புகிறாள் என்பது பெறப்படுகிறது.

### 4.6.18 தோழியை ஆற்றுவிக்கும் நற்றாய்

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டதால் நற்றாய் மிகவும் வருந்தினாள். தோழியின் ஆற்றாமையைக் கண்ட நற்றாய், ''நாம் தனிமையுற்று வருந்துமாறு நம்மை விட்டுப் போன என் மகட்காக நான் அவ்வளவாக வருந்தேன், யான் இப்போது வருத்தப்படுவதோ நின் பொருட்டுத்தான்'' என்று தோழியை, நற்றாய் ஆற்றுவித்தது பற்றிய செய்தியை ஐங்குறுநூறு 378 வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

### 4.6.19 மறைமுகமாகக் கேட்டல்

தலைவியின் களவை அலர்வழி அறிந்தவுடன் நற்றாய் முதலில் தலைவியிடம் கேட்கத் தயங்குவாள். ஆனால் ஊரில் அலர் மிகுதியான போது, தலைவியிடம் நேரடியாகக் கேட்காமல் 'நின் கூந்தலின் மணம்' வேறுபடுகிறதே என்ற குறிப்பை மட்டும் கேட்கிறாள் என்பதை

''அன்பன் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்
இன்னா இன்னுடை கேட்ட சின்னாள்
அறியேன் போல உயிரேன்
நறிய நாறும்நின் கதுப்பென் றேனே''[40]

என்ற பாடலின் மூலம் தெரிந்துகொள்ள முடியும்.

### 4.6.20 தாய் துக்கத்தால் தலை கவிழ்தல்

மகள் மேல் வரும் அலரைக் கேட்டதாய், தன் மகள் ஆற்றிய திணைப்புனங்காவல் நடைபெறாமல் தவறியது கண்டு அவளது செலவினைக் குறித்து கடிந்த போது, தலைவி, ''மலை நாடனைக் காதாலும் கேட்டறிந்திலேன், கண்ணாலும் கண்டிலேன், அவனொடு சுனையில் நீராடல் செய்திலேன்'' என்று கூறினாள். அதனைக் கேட்ட தாய் வெட்கித் தலைகவிழ்ந்தனள் என்பதை

''அருவி ஆர்க்கும் பெரு வரை நாடனை
அறியலும் அறியேன் காண்டலம் இலனே
வெதிர் புனை தட்டையேன் மலர்ப்பூக் கொய்து
தலை இறைஞ்சினளே அன்னை
செலவு ஒழிந்தனையால் அளியை நீ புனத்தே''[41]

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது.

தலைவியைப் பற்றி ஊர் மக்கள் பேசிய அலரைக் கேட்டதாய், அதனால் சினம் மிகுந்து சிறிய கோலினை ஏந்தி அது சுழலும்படியாக வீசி அடித்தனள் என்பதை

''மறுகில் பெண்டிர் அம்பல் தூற்ற
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப''[42]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

ஊர்மக்கள் அலர் தூற்றியதைத் தொடர்ந்து குறிப்பால் வினவல், தலைவியிடம் கேட்டு உண்மையை அறிந்து, கோலால் அடித்தாள் என்பதும் பெறப்படுகிறது. எனவே தலைவி தலைவனை விரும்புகிறாள் என்பது நற்றாய்க்கு தெரியும் என்பதும், தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டு தலைவன் வீட்டுக்குச் செல்வாள் என்பதையே நற்றாய் எதிர்பார்க்கவில்லை என்பது தெளிவாகிறது.

### 4.6.21 தாயின் அச்சம்

காதலர்கள் கலந்து உறவாடும் களவொழுக்கத்தில், எங்கோ சில தவறு நேர்வதுண்டு. அதைத் தடுக்கவே பலர் அறிய மணமாகிய கரணம் தமிழ்ச் சான்றோர்களால் நடத்தப்பட்டது.

தவறு பெரும்பாலும் நிகழ்வதில்லை, ஆனால் நிகழ்தலும் உண்டு.

உள்ளூரில் ஒரு கன்னிப் பெண்ணைக் களவில் சந்தித்துக் கூடி மகிழ்ந்த ஒருவன் அவளது நலம் துய்த்தபின்னர் அவள் யாரோ, தான் யாரோ என்ற கூறி, அவளைப் பிரிந்தான் உறவு இல்லை என்று சூள் செய்தான். ஊர்ச்சான்றோர்கள் அவனை அழைத்துத் தக்கபடி விசாரித்து உறவுண்டு என்பதனை அறிந்தனர். காதலறம் பொய்த்த அக்கயவனைக் கயிற்றால் மரத்தில் பிணித்துத் தலையில் நீற்றினைக் கொட்டினர் என்பதை

''தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனி
கரும்பு அமல் படப்பை, பெரும்பெயர்க் கள்ளூர்
திருநுதற் குறுமகள், அணிநலம் வவ்விய
அறனி லாளன் அறியேன் என்ற
திறன் இல் வெஞ்சூள் அறிகரிகடாஅய்
முறிஆர் பெருங்கிளை செறியப்பற்றி
நீறுதலைப் பெய்த ஞான்றை''[43]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. இக்கருத்தினால் தலைவி, தலைவனுடன் உடன்போக்கில் சென்றதை அறிந்த நற்றாய் மிகவும் பயந்தாள். தலைவியை தலைவன் திருமணம் செய்து கொள்ள வேண்டுமே என்றும் எண்ணி கவலைப்பட்டாள் என்பதை தெரிந்து கொள்ளமுடிகிறது.

### 4.6.22 முதுபாலை

ஐந்திணை மாந்தர்கள் களவு நிகழ்ச்சிக்கிடையே இறந்தார்கள் என்றும் இறப்பில் புலம்பி அழுதார்கள் என்றும் கூறுதல் இல்லை, இருப்பினும் உடன்போக்கின் போதும், பிரிவின் போதும் தலைவன் இறந்துபட அவலச் சுவை கொண்டும் முடியலாம் என்பதை தொல்காப்பியம்.

"நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபாலை"[44]

கூறுகிறது. உடன்போக்கில் தலைவன் இறந்து விடுகிறான், தலைவி "நின்னை இங்கே மாளவிட்டுவிட்டு, யான் தனித்து எப்படி ஊர் செல்வேன்? நின் இறப்பை நின் தாயிடம் எப்படி உரைப்பேன்" என்று புலம்புகிறாள் என்ற புறநானூற்று 245-வது பாடலில் இது உடன்போக்கில் நிகழ்ந்த இறப்பு அகம் ஆகாது, புறமாய் முதுபாலையாய் ஆயிற்று என்பர் வ.சுப.மாணிக்கம். இதனால் உடன்போக்கு மேற்கொண்ட தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் ஏதும் ஆகிவிடக்கூடாதே என்றும் வருந்தினாள் என்பது பெறப்படுகிறது.

உடன்போக்கில் தலைவன் இறந்துவிடுகிறான் தலைவி "நின்னை இங்கே மாளவிட்டுவிட்டு, யான் தனித்து எப்படி ஊர் செல்வேன்? நின் இறப்பை நின் தாயிடம் எப்படி உரைப்பேன்" என்று புலம்புகிறாள். என்ற புறநானூற்று 245-வது பாடலில் இது உடன் போக்கில் நிகழ்ந்த இறப்பு, அகமாகாது புறமாய் முதுபாலை ஆயிற்று என்பர் வ.சுப. மாணிக்கம்.

## 4.7 செவிலி

தலைவியை அவளது இளமைப்பருவம் முதற்கொண்டு பேணி வளர்ப்பவள் செவிலி. தலைவியை வளர்ப்பதில் நற்றாயை விட, செவிலிக்கு அதிகப் பொறுப்பும் பங்கும் உண்டு. தன் மகளென தலைவியைப் போற்றி வளர்த்ததால், தலைவியின் உடன்போக்கு செவிலிக்கு, பெரும் பாதிப்பைத் தருகிறது. மகட்போக்கிய சூழலில் செவிலி நிகழ்த்தும் கூற்றுகள் அவளது பிரிவுத்துயரை, ஆற்றாமையை, தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன. "மகட் போக்கிய செவிலி கூற்றுப்பாடல்கள்" வழி மகளைப் பிரிந்த நிலையில் செவிலி கொண்டிருந்த பல்வேறு எண்ண நிலைகளை ஆய்வோம்.

தலைவியை வளர்த்த காரணத்தாலும் அவள் மேல் உள்ள அன்பு காரணமாகவும், செவிலி தலைவியை 'என் மகள்' என்றே குறிப்பிடுகின்றாள்.

சங்க இலக்கியத்தில் அமையும் மகட்போக்கிய செவிலியின் கூற்றை விளக்குவனவாக 29 பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவியின் மீது கொண்ட அன்பினால் செவிலியின் நினைப்புகள் எண்ணங்கள், தலைவியைச் சுற்றிச்சுற்றி வருகின்றன அதையே நினைத்துப் பார்க்கின்றாள்.

தலைவியை வளர்ப்பதிலிருந்து, உடன் போக்கு சென்ற தலைவியை தாமே தேடிச் செல்லும் நிலை வரை, செவிலி மேற்கொள்ளும் அரும்பணிகள், அவளின் அன்பின் வெளிப்பாட்டைக் காட்டியுள்ளன என்பது சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறியமுடிகிறது.

### 4.7.1 தலைவனைக் கடிதல்

தலைவனும் தலைவியும் உடன்போக்கு சென்றனர். தலைவியைத் தன்னிடமிருந்து பிரித்துச் சென்றுவிட்டக் காரணத்தினால், செவிலிக்கு தலைவன் மீது சினம் ஏற்படுகிறது. இதனால் செவிலி ஏதிலன் அறனிலான் என்று தலைவனைச் சாடுவதன் வழி தெரிந்துகொள்ள முடிகிறது.

பாலை வழியில் நடக்க வைத்துவிட்டான் என்பதற்காக அன்னை அறனிலான், பொய்ம் மொழிகள் கூறி தலைவியை அழைத்துச் சென்று விட்டான் என்று புலம்புகிறாள் என்பதை

> **''வண்கணாளன் மார்புற வளைஇ**
> **இன்சொற் பிணிப்ப நம்பி நம் கண்''**[45]

என்ற பாடலடி உணர்த்துகிறது.

வளமனையில் வாழ்ந்த தலைவியை, வருத்தும் பாலையில் அழைத்துச் சென்றதால் தலைவனை, செவிலி சாடுகிறாள்.

### 4.7.2 தலைவியைக் கடிதல்

செவிலி தலைவியை 'சிறுவன் கண்ணி' அவனோடு சென்று 'பிறளாயினாள்' என்று பலவாறு கடிவதைப் பாடல் மூலம் அறிய முடிகிறது. அதே பாடலில் பிரிவினால் வருந்தும் செவிலியின் நிலையும் காணப்படுகிறது.

### 4.7.3 மாறுபாடுகளை எண்ணிப் பார்த்தல்

மகட்போக்கியநிலையில், கடந்த கால நினைவுகளில் மூழ்கும் செவிலி, தலைவியிடம் காணப்பட்ட சில வேறுபாடுகளை எண்ணிப் பார்க்கிறாள். தான் அரவணைத்த போது, விலக்கிய தலைவியின் செயலை நினைத்துப் பார்க்கும் செவிலி அதற்குக் காரணம் களவொழுக்கம் என்று தான் உணராத நிலைக்கு வருந்துகிறாள் என்பதை

> **''பெயர்த்தனென் முயங்கயான் வியர்தனன் என்றனள்**
> **இனியறிந் தேனது துணி ஆகுதலே''[46]**

என்ற குறுந்தொகை பாடலடி மூலம் செவிலியின் தழுவலை வெறுத்த தலைவியின் செயல் காட்டப்படுகிறது.

சில வேளைகளில் வேறுபட்டு செவிலியை விடாது தழுவிய படி இருந்த தலைவியின் செயலை

> **''மெல்லெனத் தழீஇயி னேனாக என்மகள்**
> **நன்னராகத் திடைமுலை வியர்ப்ப**
> **பன் கால் முயங்கினெள் மன்னே''[47]**

என்ற அகநானூற்றுப் பாடலடி செவிலி தன்னைப் பிரியப் போகிறோம் என்ற ஏக்கத்தால் தான் தலைவி விடாது தழுவினாளோ என்று வருந்திப் புலம்பினாள் என்பதைக் காட்டுகிறது. விளையாட்டாயங்களை விடுத்து, இயல்பு நிலையிலிருந்து தலைவி வேறுபட்டிருந்ததை செவிலி பார்த்தாள் என்பதை,

> ''கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்
> அளியும் அன்புஞ்சாயலு மியல்பு
> முனாள் போலா ளிறீஇயர்''[48]

என்ற பாடலடி மூலம் பெறப்படுகிறது. தலைவி வேறுபட்டிருந்ததை அறிந்திருந்தும், அதற்கானக் காரணத்தை அந்நிலையில் சிந்தித்துப் பார்க்கவில்லை. தலைவி விளையாட்டியல்பு கொண்ட சிறுமி என்பது செவிலியின் கணிப்பாக இருந்ததால் அவள் களவொழுக்கத்தில் ஈடுபடுவாள் என்று செவிலியின் தாயுள்ளத்தால் எண்ணிப் பார்க்கவே முடிந்திருக்காது. எனவே தலைவியின் செயல்வேறுபாடு செவிலிக்கு ஐயத்தை தோற்றுவித்திருக்காது என்றும் கருத இடமுண்டு.

இதனால்தான் செவிலி தலைவியின் மாறுபட்ட ஒழுகலாறுகள் களவொழுக்கத்தைக் காட்டி நின்றதை மகள் போவதற்கு முன் உணராமல் மகட்போக்கிய பின்பே உணர்ந்து வருந்துகிறாள்.

### 4.7.4 அலரை நம்பவில்லை

தலைவியின் களவொழுக்கம் பற்றி அலர்வழி அறிந்த பின்னும், தலைவியை அதுபற்றி எதுவும் கேட்காமல் ஊர்ப்பெண்டிரைச் செவிலி, 'தீவாய்ப் பெண்டிர்' என்று சாடுகிறாளே தவிர, அலர் பற்றி தலைவியிடம் கேட்கவில்லை. தலைவியின் நாணும் இயல்பை கருத்தில் கொண்டவளாதலால் செவிலி கேட்கவில்லையோ என்று எண்ணத் தோன்றுகிறது. தாயர் முதலில் தம் மக்கள் பால் தோன்றும் அலரை நம்புவதில்லை களவொழுக்கம் புறத்தார்க்கெல்லாம் புலனாகி அலராகும் போது, அது குறித்துத் தோழியிடம் கேட்டுத் தெளிவாள்.

இதுபற்றி தலைவியிடம் செவிலி கேட்காததற்குக் காரணம் தலைவி, தன் மேல் உள்ளம் அச்சம் காரணமாக தனது களவொழுக்கத்தை மறைப்பாள் என்ற எண்ணத்திலும், தோழியிடம் கேட்டால் தெரியும் என்ற எண்ணத்திலேயே செவிலி செயல்பட்டாள் என்பது பெறப்படுகிறது.

மகட்போக்கிய பின், தலைவி தலைவனை விரும்புகிறாள் என்பதை, பெண்டிர் கூறியதை நம்பாமல் இருந்து விட்டேன், அது உண்மைதான் போலும் என்று செவிலி நினைத்தாள் என்பதும் தெளிவாகிறது.

பொதும்பைப் பருவம் எய்தியத் தலைவியைச் செவிலி வீட்டின் புறத்தே விடாது காத்தாள். செவிலி தலைவியின் உடல் வேறுபாடுகளை அறிந்து கொண்டு, அவள் பெதும்பைப் பருவம் அடைந்ததை அறிந்து, அவளைப் பொறுப்புடன் காக்கவேண்டும் என்ற விழிப்புணர்வுடன் நோக்குகிறாள். தலைவியைக் காக்கும் பொறுப்பேற்றதால் தலைவியைக் காவல் காப்பதில் மிகுதியும் கவனம் செலுத்துகிறாள். தலைவி உடன்போக்கு செல்வது முன்பே தெரிந்திருந்தால் அவளை அகலாது உறைந்து காத்திருக்கலாம் என்று கூறுவதிலிருந்து ஆற்றாமை வெளிப்படுகிறது.

### 4.7.5 செவிலி ஆயத்தாரைப் பழித்தல்

தலைவனும் தலைவியும் உடன்போக்கு மேற்கொண்டதால், செவிலி மிகவும் துயரமடைந்தாள். ''தன் மகளை உரியவனுக்கு உரிய வகையில் கொடுக்கும் வாய்ப்பினை இழந்ததற்காக வருந்தினாள்''. ஊரார் பழித்தூற்றுவதால், தன் மகள் செயலால், தனக்கும் தன்குடிக்கும் ஏற்பட்ட பழிக்கு நொந்து, தன் மகளை உடன்போக்கிற்கு ஊக்கிய வகையில் அவள் ஆயத்தாரே காரணம் என்று பழித்தாள் என்பதை,

**''தாயர் என்னும் பெயரே வல்லாறு**
**எடுத்தேன் மன்ற யானே**
**கொடுத்தோர் மன்ற அவள் ஆயத்தோரே''**[49]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 4.7.6 சுரவழியை எண்ணுதல்

சுரத்தில் மென் மகளை அழைத்துச் சென்ற வருத்தம் செவிலிக்கும் இருக்கிறது. ஆனாலும் அவள் தலைவன் வெப்பம் தணிந்த பருவத்தில்

அழைத்துச் செல்லாமல், வெயில் வருத்தும் காலத்தில் அழைத்துச் சென்றான் என்று தலைவனின் செயலை எண்ணித் தனக்குள் வருந்தி நிற்றலை மட்டுமே காணமுடிகிறது.

செவிலி சரிவர காவல் செய்யாததால், தலைவி உடன்போக்கு மேற்கொண்டாள் என்றும், தனக்கு அஞ்சியே உடன்போக்கு மேற்கொண்டாள் என்றும் கூறி செவிலி தன்னையே சாடி நிற்றலைக் காணமுடிகிறது.

### 4.7.7 அயலோர் தேற்றல்

செவிலி பிரிவாற்றாமையால் வருந்துவதைக் கண்ட அயலோர், ஆறுதல் மொழி கூறுவர், தன்னைத் தெருட்டுவோரை நோக்கி, செவிலி உடன்போகுந்துணையும் வாளாவிருந்த தன் மகளின் செயலைக் கண்டு வருந்திக் கூறினாள் என்பதை ஐங்குறுநூறு 380-வது பாடலின் வழி புலனாகிறது.

### 4.7.8 நற்றாயே செவியைத் தேற்றுதல்

செவிலியின் பிரிவாற்றாமையைக் காணும் நற்றாய், ''இனியும் வாளாவிருந்தால் செவிலியின் பாழ்பட்ட நெஞ்சமானது இறந்து விடும்'' என்று உணர்கிறாள். செவிலியிடம் பிரிவினால் ஏற்பட்ட துன்ப நினைவுகள் உயிர்போகும் அளவிற்கு நம்மை அழுந்தவிட்டுச் சென்றவள் நம்மகள். ''அவளை நீ இனி மறத்தலே நல்லது'' என்று கூறுவதை ஐங்குறுநூறு 313-வது பாடலின் வழி அறியலாம்.

### 4.7.9 வழித்துன்பம்

தலைவனுடன் தலைவி பாலை நிலத்தில் சென்றாலும், சுரம் மழை வரப் பெற்று தண்ணியதாக அமையவேண்டும் என்றும், வழியில் வருத்தும் துன்பம் எதுவும் தலைவிக்கு ஏற்பட்டு விடக்கூடாது என்றும் செவிலி ஆற்றாமையால் கூறுகிறாள்.

### 4.7.10 அடித்துத் துன்புறுத்தல்

செவிலி தலைவியை வளர்த்த முறையைச் சங்கப் பாடல்கள் யாண்டும் சுட்டில அது பற்றிய குறிப்புக்கள் தலைவி உடன் போனமையால் செவிலி புலம்பும் பாடல்களில் தான் காணப்படுகின்றன. செவிலி பாலுணவு தரும்போது அதனை மறுத்த ஓடுவாள் தலைவி உண்டலை மறுத்து ஓடுங்கால் செவிலி அடித்தலும் அச்சுறுத்தலும் உண்டு என்பதை

''உரவு நீர்ச் சேர்ப்ப
தாய் உடன்று அலைக்குங்காலையும் வாய்விட்டு
அன்னாய் என்னும் குழவி''[50]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

அப்போது தலைவி செவிலியிடம், ''அம்மா அடிக்காதே என் முதுகு வலிக்கிறது'' என்கிறாள். தலைவியைத் துன்புறுத்திய தன் கைகள், பெருந்துன்பத்தை அடைய வேண்டும் என்று நினைக்கிறாள். இச்செயல் தான் தலைவியின் உடன்போக்கிற்கு காரணமாகி விட்டதோ என்று எண்ணி செவிலி வருந்துகிறாள் என்பதை.

''அன்னை யறியின் இவனுறை வாழ்க்கை
எனக் கெளிதாதல் இல்லென கழற்கால
. . . . .
பன்மலையருஞ்சுரம் போகிய''[51]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

செவிலிக்கு களவொழுக்கம் தெரிந்துவிடக்கூடாது என்று அஞ்சியே, தலைவி உடன்போக்கு சென்றாள் என்பது பெறப்படுகிறது. தலைவியைப் பாசத்துடன், பேணி வளர்த்த செவிலியே அவளுடைய உடன்போக்குக்கும் ஒரு வகையில் காரணமாகி விடுகிறாள் என்ற கருத்து இப்பாடலின் மூலம் பெறப்படுகிறது. இதையெல்லாம் பார்க்கும்போது

அலர்கேட்டு அன்னை சீற்றமடைவாள் என்ற அச்ச உணர்வே தலைவி உடன்போக்கு மேற்கொள்ள காரணமாயிற்று எனலாம்.

### 4.7.11 முன்னதாகச் சொல்ல எண்ணுதல்

களவொழுக்கம் செவிலிக்குத் தெரிந்தால் அவளுக்கு சினம் ஏற்படும் என்று எண்ணியே தலைவி உடன்போக்கு மேற்கொண்டாள். ஆயினும் தலைவி உடன்போக்கு மேற்கொண்டதை அறிந்த பின்னும் செவிலி, தலைமக்களை வரவேற்கும் பொருட்டு, தானும் பாலை வழிகளை முன்னதாகவே சென்றடைய வேண்டும் என்று கூறுகிறாள். இதை நோக்கும் போது, தலைவியின் உடன்போக்கு செவிலிக்கு சினத்தைத் தரவில்லை என்பதையேக் காட்டுகிறது என்பது பெறப்படுகிறது.

தலைவி உடன்போக்கு மேற்கொண்ட காரணத்திற்காக, செவிலி தலைவியை வெறுக்கும் நிலை, செவிலிக் கூற்றுப் பாடல்களில் இடம்பெறவில்லை. தலைவி சென்ற பின்னும் அவள் சென்ற சுரவழியையே நினைத்துப் பார்த்து வருந்துகிறாள் என்பதே ''மகட்போக்கிய செவிலித்தாய் பாடல்களின்'' மூலம் அறியப்படும் செய்தியாகும்.

### 4.7.12 பாலை நீரையே பருகினாள்

இனிய பாலை ஏந்திக் கொண்டு, கூந்தலைக் கோதி, நல்ல சொற்களைச் சொல்லிடவும், வெறுப்புற்ற உள்ளத்துடன் அதனை மறுத்தவளாகிய என் மகள், இப்போது வெப்பத்துடன் பெருமூச்சு விட்டு, நெற்றி வியர்க்க, செம்மண் கலந்த நீரினையே குடித்தனள் போலும் என்று மகட்போக்கிய செவிலித்தாய் கூறியதை அகநானூற்று 207-வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

### 4.7.13 பெண் மானிடம் வினவல்

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டாள். அவர்களைத் தேடிச் சென்ற செவிலி, அவர்களைக் காணமுடியாத, தன் வருத்தத்தின் மிகுதியால், சுரத்தில் வரும் ''பெண்மானிடத்துத் தலைவியைக் கண்டாயா? காளை ஒருவனுடன் தலைவி இவ்வழியே சென்றாளா? நீ அவளைக் கண்டாயா'' என்று வருத்தம் மிகுதியால் பிரிவாற்றாமையால் கேட்கிறாள். பெண்மானிடம் மட்டுமில்லாமல் வழியில் தெரியும் குரவ மரத்திடமும் புலம்புவாள்.

### 4.7.14 கண்டோரிடம் வினவல்

தலைவி உடன்போக்கு சென்ற போது, அவளைச் சுரத்திடைத் தேடிச் செல்லும் பொறுப்பை செவிலி ஏற்கிறாள். தலைவியைப் பிரிந்த செவிலி சுரத்தினில் தேடி அலையும் போது காணும் அகமாந்தரே கண்டோராவர்.

செவிலி சுரத்தில் தேடிச் சென்று கண்டோரிடத்து வினவுகிறாள். இது மகட்போக்கிய செவிலித்தாய்க் கூற்றுப் பாடல்களில் தனித்தன்மையுடன் காணப்படுகிறது. அருஞ்சுரத்தில் பலவாறு தேடியும் தலைமக்களைக் கண்டுபிடிக்க முடியாமல் வருந்துகிறாள்.

செவிலி கண்டோரிடம், தலைவன் தலைவியர் பற்றிய அடையாளம் கூறி வினவ, கண்டோரும் விரைந்து சென்றால், காண்குவை காண்பாய் என்று கூறிச் சென்றமையை நற்றிணை 198-வது பாடலின் வழி தெரிந்துகொள்ளமுடிகிறது.

செவிலி புலம்பிக் கொண்டு தேடி அலைகிறாள் யானும் தலைவன் தலைவியைக் கண்டேனில்லை, துயரத்தினால் நடந்த கால்களும் ஓய்கின்றன, கண்களும் ஒளி இழக்கின்றன என்று கூறுகிறாள் என்பதை

"பொன் ஏர் மேனி மடந்தையொடு
வென்வேல்விடலை முன்னியசுரனே"[52]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 4.7.15 முதுமைத்தாய் செவிலி

முதுமையின் காரணமாக ஓரிடத்தில் நின்று விட்ட செவிலியைக் கண்ட சிலர், தாமே வலிய வந்து தலைவனோடு சென்ற தலைவியைக் கண்டோம் என்றனர். தலைவனோடு ஒரு தலைவி சென்றனர் என்று மட்டும் கூறக்கேட்ட செவிலி, தலைவனோடு சென்றது நம் மகளோ, என்ற ஐயத்தை நீக்குதற் பொருட்டு அவர்களுக்குரிய அடையாளங்களைக் கூறி வினவுகிறாள் என்பதை ஐங்குறுநூறு 389-வது பாடலின் வழி அறிய முடிகிறது. கண்டோரும் அதை உறுதிபடுத்துகின்றனர் என்று பெறப்படுகிறது.

செவிலி ஆற்றாமையால் புலம்புவதைக் கண்ட முக்கோட்பகவர், அவளை அழைத்து சந்தனம், முத்து, இசை ஆகியன பிறந்த குடிக்கு பயன்படாமல், துய்ப்போர்க்குத் துணை நிற்றலைக் கூறி தலைவி தலைவனோடு சென்றதை அறநெறி என்று உணர்த்தி செவிலியை இல்லம் திரும்பும்படி கூறினார்கள் என்பதை கலித்தொகை 9-வது பாடல் தெளிவுபடுத்துகின்றன.

கற்புடை நங்கைக்கு இடையூறுவரின் தன்பாற் பேரன்புடையவராய் திகழ்கின்ற செவிலி, நற்றாய், ஆயத்தாரையும் பிரிந்து தனக்குரிய சிறந்த தலைவனை வழிபட்டு சேறல் அறம் என்பதனை

"இறந்த கற்பினாட் எவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா வாறும்மற்றதுவே"[53]

என்று முக்கோட் பகவர் கூறக்கேட்ட செவிலி அறநெறியாது என்று உணர்ந்து நற்றாயிடம் தெரிவிக்கின்றாள் என்பதை அறியலாகிறது.

### 4.7.16 ஊரவர்தாயினும் மிக வருந்தியமை

தலைவி தலைவனுடன் சென்று விட்டாள். நான்கு திசைகளிலும் சென்று தேடிப் பார்த்தும் அவள் காணப்படவில்லை. மீண்டும் வீட்டிற்கு வந்து இருக்கின்றேன் என்றும் இவ்வூர் தம் விருப்பமிக்க ஒரு பொருளை இழந்து விட்டது என்றும் குறிப்பிடுவதை

**''மனை மருண்டிருந்த என்னினும் நனைமகிழ்**
**நன்னராளார் கூடுகொள் இன்இயம்**
**இன்னியம் தேரூர் தெருவில் ததும்பும்**
**ஊர் இழந்தன்று தன் வீழ்வுறு பொருளே''**[54]

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

### 4.7.17 சிலம்பு கழி நோன்பு

தலைவனுடன் தலைவி சென்றமையால், தலைவன் வீட்டில் சிலம்பு கழிக்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது என்பதை அறிந்த செவிலி தந்தையின் வளமனையை விடுத்து தலைவனின் வறுமனையில் நடைபெற்றதை எண்ணி மேலும் துயரமடைகிறாள் என்பதை

''. . . . . .
**நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை**
. . . . . .
**எதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ**
**மேயினள் கொல்லென நோவல்யானே''**[55]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

தலைவனைப் பற்றியோ, அவன் மனைப்பற்றியோ ஒன்று மறியாதத் செவிலித்தாய் தலைவனின் மனை வறுமனையாகத் தான் இருக்கும் என்று கற்பனை செய்கிறாள்.

செல்வச் செழிப்பான சூழலில் வளர்ந்தவள் தலைவி, அப்படியொரு சூழல் வேறு எங்கும் வாய்க்காது என்று செவிலி எண்ணியிருக்கலாம்.

### 4.7.18 தலைவனைப் புகழ்தல்

தலைவனைச் சாடுகின்ற செவிலியே, பின்னர் தலைவனைப் புகழ்கிறாள். தலைவனை செவிலி, 'துணை வெங்காளை' என்றும் 'கணையோர் அஞ்சாத கடுங்கட்காளை' என்றும் புகழ்கிறாள். இவை தலைவனின் வீரநிலையைக் காட்டுவனவாக உள்ளன.

தலைவனைப் பற்றிய எந்த ஒரு செய்தியும், அறியாதவள் செவிலி தலைவனை அவள் கண்டதாக மகட்போக்கியதுறைக்கூற்றுப் பாடல்களில் குறிப்பிடப்படவில்லை.

இப்படியிருக்கும் போது தலைவனை வீரம் மிக்கவன் என்று செவிலி கூறுவதற்குக் காரணம், பாலை நிலத்தில் தலைவியை, தலைவன் கொடிய விலங்குகளையும், கள்வர்களையும் எதிர்த்துப் போரிட்டு வெற்றி கண்டு பாதுகாப்புடன் அழைத்துச் செல்ல வேண்டுமாயின், அவன் வீரனாகத் தான் இருக்கவேண்டும் என்று செவிலி நினைத்தாள் என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

### 4.7.19 செவிலி நற்றாயிடம் கூறியது

தலைவி தன் சுற்றத்தாரைப் பிரிந்து தலைவனுடன் உடன்போக்கில் சென்றனள். இதை தோழி செவிலிக்குக் கூற, செவிலி நற்றாயிடம் கூறியது. தலைவி உடன்போன பின் அவளைத் தேடிச் சென்று செவிலி கண்டோரால் ஆற்றுவிக்கப்பட்டு மனைக்கு திரும்புகிறாள். அங்கு இருந்து அழுது புலம்பிய நற்றாயிடம், "நம் மகளும் அவள் அன்பனும் பாலையைக் கடந்து சென்று இதற்குள் மணம் புரிந்திருப்பர். அதனால் அவர்களுடைய நட்பு உலகறியச் செய்யப்பட்டது" என்கிறாள் என்பதை குறுந்தொகை 15-வது பாடலின் வழி அறியமுடிகிறது.

### 4.7.20 மணத்திற்கூடி வருவோரை எதிர்கொண்டு போற்ற விளையும் தாய்

உடன் புணர்ந்து சென்று வேற்றூரில் தன் காதலனை மணந்து கொண்ட தலைவி, தன் கணவனுடன் மீண்டு வருவதாகக் கூறக் கேட்ட செவிலி நற்றாயிடம் விருப்பத்துடன் கூறினாள் என்ற செய்தியை ஐங்குறுநூறு 400வது பாடலின் செய்தி தெளிவுபடுத்துகிறது.

சூழ்நிலைக் காரணமாக தன் மகள் தலைவனோடு, தம்மை வஞ்சித்துப் போய் விட்டதனால் மீண்டும் அவர்களை தம் இல்லத்துக்கே அழைத்து மணவினை நிகழ்த்த முயல்கிறாள் என்பதனையும், தலைவனும் இசைவு சொல்லி, "இன்ன நாளில் நாங்கள் வருவோம்" என்று கூறி வருகின்றான் என்பதை வாயில்கள் மூலம் அறிந்து மகிழ்ந்தாள் என்பதனை ஐங்குறுநூறு 399-வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

## 4.8 கண்டோர்

தாய் தந்தையர் அறியாது உடன்போக்கினை மேற்கொண்ட தலைவன் தலைவியை இடைச்சுரத்துக் காண்பவராகவும், தலைவன் வினைவயிற் பிரியுங்காலத்தும், மீண்டு திரும்பும் காலத்தும் அவனை வழியிடைக் காண்பவராகவும், இடைச்சுரத்தின் கண் தலைவியைத் தேடி வரும் செவிலியின் துயர் காண்பவராகவும், அவளுக்கு சிலவும் பலவும் கூறுபவராகவும் வருவோர் 'கண்டோர்' எனப்படுவர் இவர் கற்பிற்குரிய கூற்றாகக் கூறப்படினும், களவிற்கும் உரியராவர்.

தலைவனும் தலைவியும் உடன்போக்கு செல்லும் போது செவிலி, நற்றாய், தோழி மட்டுமல்ல கண்டோரும் வருத்தப்படுகின்றனர்.

### 4.8.1 இடியைக் காட்டிலும் கொடுமையானது

மெல்லியலான தலைவியை முன்னால் செல்ல விடுத்து இந்த இரவுப் பொழுதில் கூட்டிச்செல்லும் தலைவனின் மனம் இடியைக் காட்டிலும் கொடுமையானது என்று கண்டோர் கூறுவதை

''வையெயிற்று ஐயள் மடந்தை முன்நின்று
எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே''[56]

என்ற பாடல் வழி மூலம் அறியமுடிகிறது.

## 4.8.2 கண்டோரின் துயரம்

பிரிவால் தாய்படும் துன்பத்தைக் கண்ட, கண்டோர்க்குத் துன்பம் அதிகமாகிறது. கண்டோர் உலகின் நிகழ்வை எடுத்துக்காட்டி, தாயின் துயரை நீக்கும் பொருட்டு ஆற்றுவிப்பார்கள். அறிவுரையும் கூறுவார்கள். தலைவி விளையாடிய பாவையை எடுத்துப் பூச்சூட்டி, அதன் கண்ணையும், நெற்றியையும் தடவி 'என்னருமை மகளே' என்று தாய் புலம்பி வருந்தியதைக் கண்ட கண்டோர்களும் வருந்தினர் என்பதை

''ஆயமும் அணி இழந்து அழுங்கின்று தாயும்
இன்தோள் தாராய் இறீ இயர் என்னுயிர்என
கண்ணும் நுதலும் நீவித் தண்ணெனத்
தடவுநிலை நொச்சி வரிநிழல் அசைஇத்
தாழிக்குவளை வாடுமலர் சூட்டித்
தருமணங் கிடந்த பாவை என்
மருமகளே என முயங்கினள் அழுமே''[57]

என்ற பாடல் வரி மூலம் அறியமுடிகிறது.

தலைவியின் தாய் அடைந்த துன்பத்தினைக் கண்டோரும் அனுபவிக்கின்றனர். தலைவியின் பிரிவால் தோழியர் அழுகின்றனர்.

கண்டோர் ஓரிடத்தில் உள்ளவரல்லர், வழியில் கண்டவரெல்லாம் கண்டோரேயாவர். இதனால் பழந்தமிழ் மக்கள் பால் களவொழுக்கம் பெற்றிருந்த மதிப்பின் தன்மையைத் தெரிந்துகொள்ளமுடிகிறது.

## 4.9 தோழி

பிரிவாற்றாமையால் தலைவி படும் துன்பத்தினைக் கண்டு தான் அனுபவிக்கும் துன்பத்தை, வெளிக்காட்டாது அவளுக்கு ஆறுதல் கூறுவாள்.

தலைவி படும் துன்பத்தோடு தானும் துன்பம் அனுபவிப்பதாகத் தலைவனுக்குக் கூறி தலைவியைத் திருமணம் செய்யத் தூண்டுவாள்.

களவுக் காலத்தில் தலைவன், வேற்று நாட்டிற்குச் செல்லும் போதெல்லாம், இவன் இவளை மணந்து கொள்ளாது சென்று விடுவானோ? என்று தோழி அஞ்சித் துன்புறுவாள். தலைவனிடம் என் துன்பம் கண்டு உடன்போக்கிற்கு தலைவி உடன் பட்டாள் என்று கூறுவாள்.

தலைவியும் தோழியும் பிரிவின்றி கூடிய, பிளவு படாத நட்பினால், ''இருதலைகளையுடையதொரு பறவையின் உடலில் உரையும் ஒருயிர் போல ஆனோம்'' என்கிறாள் தலைவியின் பிரிவுத் துயரம் தோழிக்கும் இருந்தது என்பதாகும் இதை

**''யாமே பிரிவு இன்று இயைந்த துவரா நட்பின்**
**இருதலைப் புள்ளிகள் ஒர் உயிரம்மே''[58]**

என்ற அகநானூற்றுப் பாடலின் வழி அறியமுடிகிறது.

### 4.9.1 தலைவியின் நிலையை தன்னிலையாக உரைத்தல்

தலைவியும் தோழியும் இரு பறவையில் ஓர் உயிர்போல இருப்பதால் தலைவியின் நிலையை தன்னிலையாக வருந்தி உரைக்கிறாள்.

**''ஒன்று இல்காலை அன்றில் போலப்**
**புலம்பு கொண்டு உறையும் புண்கண் வாழ்க்கை**
**யானும் ஆற்றேன்''[59]**

ஒன்று பிரிந்த காலத்து மற்றோர் அன்றில் பறவை ஆற்றாது இறந்தொழிதல் போல தனித்துப் பிரிந்து வாழும் துன்பம் மிக்க வாழ்க்கையைப் பொறுக்க முடியாமல், யானும் இறந்துபடுவேன் என்று தலைவியின் நிலையைத் தன் நிலையாக வைத்துத் தோழி கூறுகிறாள் என்பதை அறியலாம்.

### 4.9.2 தோழியின் புலம்பல்

களவு காலத்தில் தலைவனைச் சந்திக்கும் இடமான தினைப்புனம் அறுவடை ஆகி விட்டது. பார்க்க வரும் தலைவன் ஏமாந்து விடுவானோ? அருவி விழும் இவ்வுயர் மலைக்கு அப்பால் எம் ஊர் உள்ளது என்று அவனுக்கு அறிவுறுத்த மறந்து விட்டேன். நான் கெடுவேனாக என்று தோழி புலம்புவதை.

''குலவுப்பொறை யிறுத்த கோல்தலை இருவி
கொயத்தொழி புணமு நோக்கி நெடிது நினைந்து
தையலன் பெயரலன் கொல்லோ ஐதேய்கு
அயவவெள்ளருவி சூடிய வுயர் வரைக்
கூஉம் கண் அதெமூரென
ஆங்குஅ கதையறிவுறுல் மறந்திசின் யானே''[60]

என்ற பாடலடியில் தலைவனைக் காணமுடியாத நிலை தன்னால் உருவாகி விட்டதே என்று தோழி வருந்துவதை அறியமுடிகிறது.

தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாமையால் வருந்தி இருந்த போது, தோழிக்கும் வருத்தம் ஏற்பட்டது. அதை வெளிக்காட்டாமல் தலைவியிடம்

''நிலம் தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்
விலங்கு இரு முந்நீர் காலின் செல்லார்
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோ நம் காதலோரே''[61]

நம் தலைவர் சித்தி பெற்றவர் போல நிலத்தைத் தோண்டி உள்ளே போகார். விண்ணகத்தே ஏறிச் செல்லார். பெரிய கடல் மேல் காலால் நடந்து

போக மாட்டார். நாடுகள் தோறும் ஆராய்ந்தால் அகப்படாமல் தப்பிச் செல்வாரும் உளரோ. எங்கிருந்தாலும் தலைவனைத் தேடிப் பிடித்துத் தருகிறேன் என்று தோழி தனக்கு ஏற்பட்ட ஆற்றாமையை மறைத்து தலைவிக்கு ஆறுதல் சொல்கிறாள் என்பதை தெளிவுபடுத்துகிறது.

### 4.9.3 தோழியின் துன்பத்தை தலைவி அறிதல்

தோழியின் துன்பத்தைக் கண்ட தலைவி, தன்னால் தான் தோழி துன்பப்படுகிறாள் என்பதைக் கூறுகிறாள்.

> "நோயினும் நோய் ஆகின்றே கூவற்
> குரால் ஆன் படுதுயர் இராவில் கண்ட
> உயர்திணை ஊமன் போலத்
> துயர் பொறுக் கல்லேன் தோழி நோய்க்கே"[62]

என்ற பாடலில் கிணற்றில் வீழ்ந்த சிவப்புப் பசு படும் துன்பத்தை இராப்பொழுதில் கண்ணால் பார்த்த ஊமையன் போலத் தோழி எனக்காகப்படும் துன்பத்தைப் பார்த்து யான் என் துன்பத்தைப் பொறுக்க மாட்டாதவள் ஆனேன் என்று தோழி கேட்க, தலைவி கூறினாள் என்பதிலிருந்து அறிந்து கொள்ளமுடிகிறது.

## 4.10 தொகுப்புரை

1) அம்பலும் அலரும் களவினை வெளிப்படுத்தும் எனத் தலைவி அஞ்சிய நிலையிலும், இற்செறிப்பு, வெறியாட்டு போன்ற காரணங்களாலும், வரைவு மறுக்கப்பட்ட நிலையிலும், தலைவியின் பெற்றோர் மகளது காதலை அறியாத அயல்மண முயற்சியில் ஈடுபடும் போதும், தலைவன் தோழியோடு ஆராய்ந்து யாரும் அறியாவண்ணம் தன்னூர்க்கு அழைத்துச் செல்லுதல் 'உடன்போக்கு' எனப்படும்.

2) திணை வேறுபாட்டாலும், செல்வநிலை வேறுபாட்டாலும், வயது வேறுபாட்டாலும் தாயும் தமரும் வரைவுக்கு உடன்படாமல் இருந்தனர்.

3) காதலரால் கைவிடப்பட்ட மகளிரும் அக்காலத்தில் இருந்தனர் என்பதாலும் தலைவியின் நிலைக்கு உடன்படவில்லை.

4) களவிலேயே தலைவிக்கு தலைவனுடன் உறவு ஏற்பட்டதாலும் உடன்போக்கு சென்றாயினும் அவனை மணத்தல் கற்பு என்பதால் உடன்போக்கு மேற்கொண்டாள்.

5) ஊர் அலரால் தலைவியும் தலைவனும் மகிழ்ந்தனர். ஆனால் தாயர் வருத்தப்பட்டனர்.

6) தாய்ப்பாசமோ, செல்வச்செழிப்போ, தோழியர்ஆயமோ, வீட்டுக்காவலோ, நகரக்காவலோ, பாலை வழியின் பயங்கரங்களோ, கூவல் தண்ணீரின் குறைபாடோ, இவை போன்ற எதுவுமே காதல் என்பதன் முன் நிற்காது என்பதை நேரடியாக உரைக்காமல், மறைமுகமாக உணர வைப்பதும் உடன்போக்குத் துறையின் நோக்கமாகும்.

7) அறத்தொடு நின்றபின், தாய் தந்தையர் விருப்புடன் திருமணம் நடந்த போது கூட, தலைவனிடம் யாரும் தலைவியை நல்லபடியாக பேண வேண்டும் என்று அறிவுரை கூறியதற்குச் சான்றுகள்

இல்லை. உடன்போக்காகத் தலைவியைத் தலைவனுடன் அனுப்பும் தோழியே அறிவுரை கூறுகிறாள். தலைவிக்கு இறுதிவரை தலைவனே துணை என்பதையே உடன்போக்குப் பாடல்கள் உணர்த்துகின்றன.

8) உலகில் வேறு எதுவுமே காதலை விட பெரிது அல்ல என்ற நிலை உருவாகும் போது தான் உடன்போக்கு நடைபெறும் இத்தகைய புனிதமானக் காதலைக் காட்டுவதற்காகவே உருவாக்கப்பட்ட ஒரு இலக்கிய உத்தியே உடன்போக்குத்துறை எனலாம்.

9) தாய்ப்பாசத்தைக் காட்டிலும், தாயுடன் மகள் கொண்டிருக்கும் பாசத்தையும், உறவையும் விட தலைவி தலைவனிடம் கொண்டிருக்கும் பாசமே, காதலே அதிக சக்தி வாய்ந்தது என்பதையே உடன்போக்குத்துறை நிரூபிக்கிறது எனலாம்.

10) நற்றாயும் மகளின் உடன்போக்கினை அறிந்ததும் தலைவனைச் சாடுகிறாள், உயிர் போகாததை எண்ணி வருந்துகிறாள். தலைவனின்தாயை சபிக்கிறாள், தீ வினையே காரணம் என்கிறாள். தெரிந்திருந்தால் திருமணம் செய்து வைத்திருப்பேனே என்கிறாள். இப்படி பலப்பல கூறி இறுதியில் தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டது அறநெறியே என்று கூறி தெளிகிறாள்.

11) நற்றாயும், செவிலியும் மகள் பிரிவுக்காக வருந்துவதை விட, அவள் செல்லும் பாலை வழியில் மகள் படும் துன்பத்தை எண்ணியே கவலைப்படுகிறார்கள். நற்றாய் தலைவனையும் தலைவனின் தாயையும் பழிப்பது போல் காதலைப் பழிக்கவில்லை.

12) நற்றாய், தோழி, கானகமகள், வேலன் ஆகிய உயர்திணை மக்களோடும், வயலைக்கொடியாகிய அஃறிணைப் பொருட்களோடும் புலம்புவதுண்டு இவை மட்டுமின்றி தனக்குத் தானே புலம்புவதும் உண்டு.

13) சுற்றத்தினரை அழைத்து தலைவியும், தலைவனும் மணம் முடித்து பின், தன் வீடு திரும்பியுள்ளனர் அவர்களைக் காணவாருங்கள் என்று கூறி நற்றாய் அழைக்கின்றாள். இதிலிருந்து ஊரும் தலைவன் தலைவியரை ஆதரிக்க வேண்டும் என்றும் அவர்களை விரும்பி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற விருப்பமும் அறியமுடிகிறது.

14) ஊர் மக்கள் அலர் தூற்றியதைத் தொடர்ந்து, குறிப்பால் வினவல் தலைவியைக் கேட்டு உண்மையை அறிந்து கோலால் அடித்தாள் என்பதிலிருந்து தலைவி தலைவனை விரும்புகிறாள் என்பது நற்றாய்க்குத் தெரியும் என்பதும் தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டு, தலைவன் வீட்டுக்கே செல்வாள் என்பதையே நற்றாய் எதிர் பார்க்கவில்லை என்பதும் பெறப்படுகிறது.

15) செவிலியும், தலைவியின் உடன்போக்கு அறிந்ததும் தலைவியையும், தலைவனையும் சாடுகிறாள், மாறுபாடுகளை எண்ணிப் பார்க்கிறாள். அலரை நம்பாமல் இருந்ததை எண்ணி வருந்துகிறாள். சுரவழியை எண்ணி வருந்தி, அவர்களுக்கு முன் சென்று அவர்களை வரவேற்க எண்ணுதல், மான், குருவமரம், கண்டோரை வினவி, அறவழியே தான் தலைவி சென்றுள்ளாள் என்பதை கண்டோர் கூற, தெளிந்து வீடு திரும்புகிறாள். மணத்திற்கூடி வரும் தலைமக்களை எதிர்கொண்டு போற்றி விளைகிறாள்.

16) கண்டோரும் தலைவன், தலைவியும் உடன்போக்கில் சென்ற வழியில் கண்டு வருந்தினர்.

17) தோழியும் வருந்தினாலும் தன் வருத்தத்தை வெளிக்காட்டாது மறைத்தாள்.

# அடிக்குறிப்புகள்

1. நற்றிணை 45
2. கலித்தொகை 107
3. புறநானூறு 261
4. மேலது 258
5. நற்றிணை 179
6. மேலது 271
7. மேலது 293
8. மேலது 305
9. குறுந்தொகை 15
10. மேலது 378
11. நற்றிணை 362
12. ஐங்குறுநூறு 380
13. நற்றிணை 48
14. ஐங்குறுநூறு 396
15. கலித்தொகை 105
16. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 22
17. திருக்குறள் 1145
18. அகநாநூறு 95
19. கலித்தொகை 9
20. அகநானூறு 150
21. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - களவியல், நூ. 31
22. குறுந்தொகை 157
23. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - களவியல், நூ. 40
24. அகநாநூறு 62
25. நற்றிணை 10
26. குறுந்தொகை 115
27. மேலது 221

28. நற்றிணை 293
29. ஐங்குறுநூறு 373
30. மேலது 376
31. அகநாநூறு 263
32. ஐங்குறுநூறு 372
33. நற்றிணை 66
34. அகநானூறு 383
35. நற்றிணை 305
36. அகநானூறு 395
37. ஐங்குறுநூறு 391
38. மேலது 371
39. ஐங்குறுநூறு 394
40. நற்றிணை 143
41. மேலது 147
42. மேலது 149
43. அகநானூறு 256
44. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணையியல், நூ. 22
45. அகநானூறு 153
46. குறுந்தொகை 84
47. அகநானூறு 49
48. மேலது 49
49. நற்றிணை 149
50. குறுந்தொகை 397
51. அகநானூறு 203
52. ஐங்குறுநூறு 388
53. கலித்தொகை 9
54. அகநானூறு 189
55. மேலது 369
56. நற்றிணை 2

57. அகநானூறு 165
58. மேலது 12
59. நற்றிணை 124
60. அகநானூறு 38
61. குறுந்தொகை 130
62. மேலது 224

# பரத்தையரால் தலைவிக்குப் பிரிவாற்றாமை

5.0 முன்னுரை

5.1 பரத்தையர்

5.1.1 கொண்டி மகளிர்

5.1.2 கணிகையர்

5.2 பரத்தமையைநாட வேறு காரணம்

5.2.1 செல்வச் செழிப்பே காரணம்

5.3 ஒருவன் ஒருத்தி

5.4 கருத்தரிக்கும் காலம்

5.5 இரண்டாவது திருமணம்

5.5.1 பலதாரம்

5.5.2 புதல்வர் பேறும் மண உறவும்

5.6 காமக்கிழத்தி

5.6.1 பரத்தையர் காமக்கிழத்தி இருவரையும் தொல்காப்பியர் சுட்டும் பாங்கு

5.6.2 பரத்தையர் மனநிலை

5.6.3 திருமணம்

5.6.3.1 பாதுகாப்பற்ற நிலை

5.6.4 அளவுக்கதிகமான அன்பு

5.7 நொதுமற்பெண்டிர்

5.7.1 பரத்தமை கண்டிப்பு

5.8 தலைவி தன் ஆற்றாமையை உரைத்தல்

5.8.1 தெய்வத்தின் மேல் ஆணை

5.8.2 மெலிதலால் அவலம்

5.8.3 தலைவன் மார்பில் துயில விரும்பல்

5.8.4 தோள்கள் கெட்டவன் எனல்

5.8.5 கண்கள் அழுதல்

5.8.6 பசலை நினைவூட்டல்

5.8.7 கோபத்தில் புலத்தல்

5.8.8 பேதமைப் பண்பு

5.8.9 தூதை ஏற்று மகிழல்

5.9 மனவேறுபாட்டை உரைத்தல்

5.9.1 யான் கண்டேன்

5.9.2 புனலாடல்

5.9.3 அடையாளம் காணல்

5.9.4 ஊடுதல்

5.9.5 மனம் ஏற்கவில்லை

5.9.6 மார்பை சேர மறுத்தல்

5.9.7 புதல்வனை ஈன்றவள்

5.9.8 யான் பேயாயினேன்

5.9.9 மகப்பேற்றினால் மேனி நாறுதல்

5.10 வாயில்கள் இடத்தில் புலம்பல்

5.11 பரத்தையை திருமணம் செய்தல்

5.12 பரத்தையை புரிந்து கொண்ட தலைவி

5.13 தலைவனைப் பெருமைப்படுத்துதல்

5.14 பெண்கள் யானைக் கவளம் எச்சில் உண்ணுதல்

5.15 தொகுப்புரை

# பரத்தையரால் தலைவிக்குப் பிரிவாற்றாமை

## 5.0 முன்னுரை

தலைவன் தலைவியை மணந்து இல்லறம் நடத்தும் வாழ்க்கை 'அக வாழ்க்கை' எனப்படும். இம்மையில் மட்டுமன்றி, மறுமையிலும் தலைவன் தன்னை பிரியாதிருத்தலையே தலைவி விரும்பினாள் என்பதை குறுந்தொகை பாடல் கூறுகிறது. கூடுதலாக பாலியல் உணர்ச்சி காரணமாகவும், இயல்பூக்கம் காரணமாகவும் சிலர் தம் மனைவியிடத்து மட்டுமின்றி பிற பெண்டிரிடத்தும் இன்பம் துய்த்தனர். இப்பெண்டிரை பரத்தையர் என்றும், காமக்கிழத்தியர், காதற்பரத்தையர், இற்பரத்தையர் சேரிப்பரத்தையர் என சங்க இலக்கியங்கள், பல பரத்தையர்களை காட்டுகின்றன. சங்க இலக்கியப் பாடல்களை உற்று நோக்கும்போது காமக்கிழத்தி, காதற்பரத்தை, இற்பரத்தை ஆகிய இவர்கள் அனைவரையும் ஒரு வகையினராகவும், சேரிப்பரத்தையரை மற்றொரு வகையினராகவும் காட்டியுள்ளனர் என்று கூறலாம். இவர்களைப் பற்றி ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 5.1 பரத்தையர்

பரத்தையர் என்பவர் பற்றி இளம்பூரணர்

> **''பரத்தையராவார் யாரெனில் அவர் ஆடலும்**
> **பாடலும் வல்லாராகி அழகும் இளமையுங்**
> **காட்டி இன்பமும் பொருளும் வெஃகி**
> **ஒருவர் மாட்டும் தங்காதவர்''**[1]

என்று பொருள் கூறி வரையறை செய்துள்ளார். பரத்தையர்கள் ஆடல் பாடல் முதலிய கலைகளில் வல்லவராகவும், அழகுடனும் இளமையுடனும் இருந்து இன்பத்தைத் தந்து பொருளைப் பெற்று ஒருவர் மாட்டும் தங்காதவராக இருப்பர் என்கிறார்.

பரத்தையர் என்பதற்கு ‘அயலவர்’ என்று பொருள் கொள்ளப் பெற்றுள்ளது. பர + ஸ்திரி - பரத்தி பரத்தை குற + ஸ்திரி - குறத்தி என்றாற்போல் பர + ஸ்திரி - பரத்தி பரத்தையாயிற்று என்று பொருள் கொள்ளப்பெற்றுள்ளது என்று விளக்கம் கூறப்பட்டுள்ளது.

பரத்தை என்ற சொல் தமிழ் வேற்சொல் அன்று என்று இறையனார் அகப்பொருள் உரை சுட்டும்.

பரத்தையை ‘ஊரன் பெண்டிர், மங்கை, மகளிர், அரிவை’ என்ற பொது நிலையிலும், ‘ஒருத்தி, ஏதிலாள், பிறள், பரத்தை, கொண்டி மகளிர், விலைநலப்பெண்டிர், விலைக்கணிகை, கணிகை’ என்ற சிறப்பு நிலையிலும் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

தலைவி பரத்தையரை, ‘குறும்பூழ், குதிரை, யானை, கடவுள், புனல்’ என்று இங்ஙனம் உருவகப்படுத்திக் கூறுவதைக் கலித்தொகை பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

### 5.1.1 கொண்டி மகளிர்

பகைவர் மனையோராய்ப் பிடித்து வரப்பட்ட இப்பெண்கள் ‘கொண்டி மகளிர்’ எனப்பட்டனர். இவ்வடிமைப் பெண்கள் நீருண்ணும் துறையிலே சென்று மூழ்கிக் கோயில்களைத் தூய்மை செய்யவும், அந்திக் காலத்தே கோயில்களில் திரியிட்டு விளக்கேற்றவும், பூச்சூட்டவும் பணியமர்த்தப்பட்டனர். “பொதியிலை மெழுகி விளக்கும் இட்டிருக்க வம்ப மகளிரை வைத்தார். இதனால் நமக்குப் புகழ் உளதாம் என்று கருதி என்று உரையாசிரியர் நச்சினார்க்கினியர் காரணமும் விளக்கமும் நிகழ்த்தினர்”.

இக்கொண்டி மகளிர் பரத்தையர் ஆக்கப்பட்ட அவலமும் நிகழ்ந்தது. ‘கொண்டி மகளிர்’ என்ற தொடர், ‘பரத்தையர்’ என்ற பொருளில் பயன்பல வாங்கி, “வண்டிற்றுறக்கும் கொண்டி மகளிர்” என்று மதுரைக் காஞ்சியிலும், மணிமேகலையிலும் இச்செய்தி கூறப்படுகிறது.

அரண்மனைகளில் மட்டுமில்லாது போர்க்களங்களிலும், அரசர் படைத்தலைவர் முதலாயினர்க்குப் பணிவிடை செய்யவும் இவர்களின் காமப்பசிக்கு இரையாகவும், அடிமை மகளிர் உடன்கொண்டு செல்லப்பட்டனர்.

### 5.1.2 கணிகையர்

கணிகையர் என்பது பரத்தையரைக் குறிக்கும். போர்ப் பாசறைகளை ஒட்டிப் பெரும் பரத்தையர் விடுதிகளே அரசு ஒப்புதலுடன் இயங்கும். அவை காலை எட்டு மணியிலிருந்து இரவு எட்டு மணிவரை இயங்கும் இரவு எட்டு மணிக்குப் பின்னரே அவை மூடப்பெறும் பின்னரே அப்பரத்தையர் உண்பர். இரவு பத்து மணிக்கு மேல் ஓய்வு பெறுவர். பின்னர் மறுநாள் காலை எட்டு மணியிலிருந்து இந்த அவல வாழ்வு தொடரும் என்று மொழிகுவர்.

நெடுந்தொலைவு, நெடுங்காலப் பிரிவு பரத்தமைக்கு வித்து, மனைவியரை உடன் அழைத்துச் செல்லாக் கட்டுப்பாடு, பரத்தமை பெருக்கியது. பெரும்பாலும் வெளிநாடுகளிலே இது நிகழ்ந்தது.

தமிழ் நாட்டிலும், கோவில்களிலும் அடிமைகளாக இருந்த தேவரடியாரே பிற்காலத்துப் பரத்தையர் மூலமாகப் பெருகினர். ஆக 'எண்ணரும் பாசறை பெண்ணொடும் புணரார்' என்ற கட்டுப்பாடு பிறிதொரு வகையில் அறக்கேட்டை விளைவித்தது.

போர்க்களத்திலும், போரின் கண்ணும் பெண்டிர் விலக்கப்பட்டனர். பெண்டிரைப் பிரிந்து சென்ற கணவன்மார் பல காலம் வெளிநாடுகளில் தங்க நேர்ந்தது. உணவுச்செழிப்பிலும், உடற்செழிப்பிலும் கணவன்மார் இருந்தனர். ஆனால் அடுத்த நாள் களப்போரை நினைத்து இதில் சாவும் வரலாமே என்று நினைத்து, கள்ளுண்டும் காலம் கடத்தினராதல் வேண்டும். மறவர் சிலநேரம், பரத்தையர் உறவும் மேற்கொண்டவராதல் வேண்டும்.

மறவர்தம் உடல் தவிப்பை அறிந்த மன்னன், அவர்தம் பரத்தமைக்கு உடன்பட்டனராதல் வேண்டும்.

**"எண்ணரும் பாசறை பெண்ணொடும் புணரார்"[2]**

என்ற நூற்பாவை அடுத்து

**"புறத்தோர் ஆங்கண் புரைவதென்ப"[3]**

என்ற நூற்பாவை தொல்காப்பியர் அமைப்பர் என்பர். இதை இளம்பூரணர் உரை மூலம் அறியமுடிகிறது.

போர் வாழ்க்கையே பரத்தமைக்கு அடித்தளமாக அமைந்தது எனலாம், என்பதை "அற்றைநாள் காதலும் வீரமும்" என்ற நூலில் க.ப.அறவாணன் குறிப்பிட்டுள்ளார்.

## 5.2 பரத்தமையை நாட வேறு காரணம்

தலைவி மகப்பேறு எய்தியவுடன் அதைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாக்கும் பொறுப்பு, அவளுக்கு ஏற்பட்டு விடுகிறது. தலைவியின் உடலிலும், உடமையிலும் பாலும் எண்ணெயும் பட்டு மாசுற்றிருக்கும். இந்நிலையில் தலைவியை நெருங்குவது அத்துணை சிறந்ததாக இல்லை. எனவே பரத்தமையை நாடிச் செல்லும் தலைவர்களும் உண்டு என்பதை நற்றிணை 380வது பாடல் விளக்குகிறது.

பரத்தையர் சமுதாயத்திற்கு ஒரு வகையில் இன்றியமையாது தேவைப்பட்டனர். மனைவியை நெருங்கமுடியாத (சமயங்களில்) நேரங்களில் எல்லாம் காமநோய்க்கு வடிகாலாக அவர்கள் பயன்பட்டனர்.

### 5.2.1 செல்வச் செழிப்பே காரணம்

மருத நில மக்கள் செழிப்புடன் மிகுந்த செல்வம் இருப்பதால், இந்தச் செருக்கில் மனம் போனபோக்கில் சுற்றி, பரத்தையரிடம் சென்று வந்தனர்.

ஆடல், பாடல் போன்ற கலைசார்ந்த பொழுதுபோக்குகளில் விருப்பமுள்ள ஆடவர், ஆடல் பாடல்களில் சிறந்து விளங்கிய பரத்தையரிடம் சென்று வந்தனர். பரத்தையர்கள் ஆடல் பாடல்களில் வல்லவர்கள் என்பதையும் அவர்கள் நடனமாடியதை

> ''மண்கனை முழவொடு மகிழ் மிகத் தூங்கத்
> தண்டுறை ஊரன்எம் சேரி வந்தென''[4]

என்ற அகநானூற்றுப் பாடல்வழி அறியமுடிகிறது.

தலைவன் பரத்தையரிடம் செல்வது இயல்பு, பரத்தமை தண்டிக்கப்பட வேண்டிய குற்றமாகக் கருதப்படவில்லை. ஊடலுக்கு மட்டுமே காரணமாயிற்று. அது மட்டுமல்ல பரத்தமை இழிவான செயல் என்ற அளவிலும் இருந்தது பெறப்படுகிறது.

## 5.3 ஒருவன் ஒருத்தி

சங்க இலக்கியங்களில் காட்டப்பட்டுள்ள பரத்தையர் ஒழுக்கம் அக்கால மக்களால் சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஒழுக்கமாகவே இருந்திருக்கிறது. இல்லற வாழ்வில் ஒருவன் ஒருத்தி என்ற நிலையும் இருந்தது. மனைவியைத் தவிர பிற பெண்டிரை விரும்புவது என்பது இழிவு என்று எண்ணியவர்களும் உண்டு.

> ''தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
> பல்லிருங் கூந்தல் மகளிர்
> ஒல்லா முயங்கிடைக் குழைக வென்தாரே''[5]

என்ற சோழன் நலங்கிள்ளியின் கூற்று சான்றாகும்.

தலைவன் நிரந்தரமாக குடும்பத்தை விட்டு நீங்கி, பரத்தையர் இல்லம் தங்குவதும் இல்லை. தொல்காப்பியம் பரத்தையர் பிரிவுக்கு, ஒரு திங்களில் பதினைந்து நாட்களையே கூறுகிறது. இதனால் தலைவியின் புத்திரப்பேறு பாதிக்காத வகையில் பரத்தையர் பிரிவு இருக்கும் என்றும் கூறுகிறது.

## 5.4 கருதரிக்கும் காலம்

பூப்பின் முன் ஆறுநாளும், பின் ஆறுநாளும் பூப்பு தோன்றிய நாள் முதலாகப் பன்னிரண்டு நாளும் தலைவன் தலைவியுடன் இருப்பான். பரத்தையிற் பிரிந்தாலும், அக்காலம் கருவுறும் காலம் ஆதலால் பிரியாமல் இருப்பான். இதனை தொல்காப்பியர்

''பூப்பின் புறம்பா டீரறு நாளும்
நீத்தகன் றுரையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலையான''[6]

என்ற நூற்பாவில் கூறியுள்ளார்.

மனைவி பூத்தபின் (மாதவிடாய்) வரும் பன்னிரண்டு நாட்களும் கணவன் அவளை பிரியாமல் கூடியிருக்க வேண்டும் என்ற தொல்காப்பிய மரபை ஒட்டியே மனுதரும சாஸ்திரத்திலும் கூறப்பட்டுள்ளது.

''பெண்களுக்கு ருதுகாலம் வழக்கமாக பதினாறு
நாட்கள் அதில் மாதவிடாயானது முதல் நான்கு
நாட்கள் பெரியோர்களால் நிந்திக்கப்பட்டிருக்கிறது''[7]

மனைவி பூத்தப்பின் நான்கு நாட்கள் கழித்து வரும் பன்னிரண்டு நாட்கள் அவளோடு கூடுவது. கல்வியின் பொருட்டாக மூன்றாண்டுகள் வரை கணவன் மனைவியைப் பிரிவதுகூடாது. பெண்களுக்குக் கடல்வழிப் பயணம் கூடாது என்பன போன்ற விதிகள் எல்லாம் முந்து நூல் மரபிலிருந்து தொல்காப்பியம் பெற்றுக் கொண்டவையாகும்.

நற்பிள்ளைப்பேற்றை விரும்புவோர் பூப்பு பெறப்பட்ட முதல் மூன்று நாளும் கூடாதிருந்து, நாலாவது நாள் மனமகிழ்ச்சியோடு கூடுதல் வேண்டும். அப்போது அமையும் கரு, நல்ல அழகும் குணமும் உடைய நற்பிள்ளையாகப் பிறக்கும். முதல் முந்நாட் கூட்டம் நோய்க்கும் இடமாகும்.

''தீண்டநாள் முந்நாளும் நோக்கார் நீ ராடியபின்
ஈராறுநாளும் இகவற்க என்பதே
பேரறிவாளர் துணிவு''[8]

என்று ஆசாரக்கோவை பாடல் வழி அறியமுடிகிறது.

முதல் மூன்று நாளும் கருவமையாமையானும், நோய் தருதலானும் அம்மூன்றுநாளையும் 'தீண்டா நாள்' என்றார். இது பற்றியே பூப்பு - தீட்டு என வழங்கலானது.

''பூத்த காலைப் புனையிழை மனைவியை
நீராடியபன் ஈராறு நாளும்
இரு வயிற்றூறுஉங் காலமாதலின்
பிரியப் பெறாகன் பரத்தையிற் பிரிவோன்''[9]

என இலக்கணவிளக்க ஆசிரியர் இதற்கு ஒரு சிறு விளக்கமும் தந்துள்ளார்.

ஆனால் பன்னிரண்டு நாளும் கருத்தரிக்குமெனவே பதினாறாம் நாளிலிருந்து அடுத்தப் பூப்பு வரையிலும் கருத்தரிக்காது என்று உறுதியாகக் கூற இயலாது. காரணம் சில பெண்களுக்கு மூன்று நாளைக்குப் பின்னரும் பூப்பு நிகழ்வதுண்டு. அது என்று அறவே நிற்கின்றதென்பது அவர்களுக்கே தெரியாது. அது நிற்பதை பழந்தமிழர் தெரிந்திருக்கலாம்.

## 5.5 இரண்டாவது திருமணம்

களவொழுக்கம் ஒழுகி மணந்து கொண்ட மனைவியிருக்க, ஒரு சிலர் இரண்டாவது தாரமாக பின்னொருத்தியை மணந்து கொள்ளும் வழக்கமும் அன்று இருந்தது என்பதை,

''பின்முறை ஆக்கிய பெரும் பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்
மின்னிழைப் புதல்வனை வாயில் கொண்டு புகினும்
இறந்தது நினை இக் கிழவோன் ஆங்கண்
கலங்கலும் உரியன் என்மனார் புலவர்''[10]

என்ற தொல்காப்பிய நூற்பாவழி அறியமுடிகிறது.

''மின்னிழைப் புதல்வனை வாயில் கொண்டு புகினும்'' என்பதால் முதல் மனைவி தன் மகனைக் கோலஞ்செய்து பின்முறை மனைவியிடம் கொண்டு செல்லினும் என்பதால், முதல் மனைவிக்குப் பிள்ளையில்லாமையால் இரண்டாவதாக திருமணம் செய்து கொண்டான் என்றும் கூற இயலாது.

பிள்ளைப்பேறு முதல் மனைவிக்கு வாய்க்காததால் தலைவன் இரண்டாவது திருமணம் செய்து கொண்டான் என்பதை ஐங்குறுநூறு 292வது பாடலின் வழி அறியமுடிகிறது.

''எம்நலம் சிறப்ப யாம் இனிப் பெற்றோளே''[11]

என்றாள். இவள் பெறப்போகும் மகவும் தன் மகவே என்பது தலைவியின் கருத்தாகும்.

''நீ புதுவதாக மணந்த இவளை நின்னினும் மேலாக மதித்தொழுகுவேன்'' என்கிற வாக்குறுதியால், புதியவளோடு கணவன் நிகழ்த்தும் வாழ்க்கைக்கு யாதொரு, இடையூறும் செய்யமாட்டாள் என்பது புலனாகிறது. தலைவனின் இரண்டாவது மனைவியை முதல் மனைவியாகிய தலைவி, விளக்கு முதலிய மங்கலப் பொருள்கள் கொண்டு எதிரேற்றுக் கொண்டாள் என்று கூறுவதிலிருந்தும் தலைவியும் இதை ஏற்றுக் கொண்டுவிட்டாள் என்பது அறியமுடிகிறது.

### 5.5.1 பலதாரம்

மனுதர்ம நூற்களில் ஒன்றான கௌடலீயப் பொருநூல் அந்தணனுக்கு நான்கு மனைவிகளும், அரசர்க்கு மூன்று மனைவிகளும், வணிகர்க்கு இரு மனைவிகளும், சூத்திரனுக்கு ஒரு மனைவியும் அமைய வேண்டும் என்று கூறுகிறது. அந்தணன் அவன் குலத்தில் ஒரு மனைவியும், பிற வர்ணம் ஒவ்வொன்றில் ஒரு மனைவியும், கொள்ளலாம் என்கிறது. அதே போல் அரசன் அவன் குலத்தில் ஒரு மனைவியையும் அவனுக்குக் கீழ் உள்ள பிற வர்ணத்தில் ஒவ்வொரு மனைவியும் கொள்ளலாம்

என்கிறது. வணிகன் அவன் குலத்தில் ஒன்றும் சூத்திரன் குலத்தில் ஒன்றும் கொள்ளலாம் சூத்திரன் அவன் குலத்தில் மட்டுமே மனைவியைக் கொள்ள வேண்டும் என்று வரையறுக்கின்றது என்பதை சொ.ஏழுமலய் தனது ''சங்க காலத்தில் ஆண் பெண் உறவு'' என்ற தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஆணின் கையில் கணிசமான அளவுக்குச் செல்வம் குவிந்ததிலிருந்து தான் இந்த செல்வத்தை பிற குழந்தைகளுக்கெல்லாம், தம் சொந்த குழந்தைகளுக்கு விட்டுச் செல்ல வேண்டும் என்ற விருப்பத்திலிருந்து தான் பலதாரமணம் தோன்றியது எனலாம். எனவே பொருளுடைமையே பலதார மணத்தின் அடிப்படையாகிறது.

மகன்மீது கொண்ட அன்பின் காரணமாக, மறுமணத்துக்குப் புத்தாடையுடன் தேர் ஏறிச் சென்றவன் முதல் மனைவியுடனும் மகனுடனும் தங்கி விடுகிறான் என்ற செய்தி அகநானூறு 66ம் பாடலின் வழி அறிய முடிகிறது. பலதாரமணம் என்பது பெரும்பாலும் மன்னர்களிடமே காணப்பட்டது. நல்லியகோடன் என்னும் வள்ளல் தன் மனைவியர் புகழ்ந்து கூறும் அளவுக்கு நல்ல கணவனாய் நடந்து கொண்டான் என்று சிறுபாணாற்றுப்படை பேசுகின்றது. ஆய் அண்டிரன் இறந்தவுடன் அவன் மனைவியரும் மாய்ந்தனர் என்ற செய்தியை புறநானூறு 240வது பாடலின் வழி தெளிவாகிறது.

இவற்றை நோக்கும்போது குடும்பத் தோற்றத்தின் ஒரு பங்காகப் பலதாரமணமும் இடம்பெற்றிருந்ததை அறியமுடிகிறது.

ஒரு தாரமணம் பெரும்பான்மையும், பலதாரமணம் சிறுபான்மையும் நடந்தன எனலாம்.

பூஞ்சாற்றுப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் என்ற வைதிக மறையவனுக்குப் பல மனைவியர் இருந்துள்ளனர் என்பதை புறநானூறு 166வது பாடல்வழி அறியமுடிகிறது. வைதிக

யாகங்கள் சிலவற்றில் பணிவிடை செய்தற்கு, யாகம் நிகழ்த்தும் தலைவனுக்கு பத்தினிகள் மூவர்க்குக் குறையாமல் இருந்திருத்தல் வேண்டும் என்பதை விதியாகவும் கூறப்பட்டுள்ளது.

### 5.5.2 புதல்வர் பேறும் மணஉறவும்

புதல்வர் பெற்றெடுத்த நிலையில் மறுமணம் செய்துள்ளனர் என்பதும், சங்க இலக்கியங்கள் மூலம் பெறப்படுகிறது. பதிற்றுப்பத்தில் புதல்வரைப் பெற்ற அரசியின் நிலை பாராட்டிப் பேசப்பட்டுள்ளது. மகப்பேறு எய்திய நிலையிலும் அரசன் பல மணங்கள் புரிந்தமையினை ஆட்சியும், சமுதாயமும் அனுமதித்தே வந்துள்ளன. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இருமனைவியரை மணந்து வாழ்ந்தான். ஒருத்தி வேளாவிக்கோமான் பதுமன்தேவியாவாள். மற்றொருத்தி சோழன் மணக்கிள்ளியின் மகள் நற்சோணையாவாள். இச்செய்தியினை பதிற்றுப்பத்தில் 4,5,6ம் பதிகங்கள் கூறுகின்றன.

முதல் மனைவிக்கு இரண்டு ஆண் குழந்தைகளும், இரண்டாவது மனைவிக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் பிறந்தன. பதுமன் தேவி மக்களான களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரலும், ஆடுகோட்பாட்டு சேரலாதனும் முறையே 4,6 ஆகிய பத்துக்களிலும், நற்சோணையின் மகனான கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் 5ம் பத்திலும் பாராட்டப் பெற்றுள்ளனர்.

குழந்தைகள் பெற்றெடுத்த போதிலும் தன் விருப்பப்படி பல மனைவியரை மணந்துள்ளனர் என்று தெரிகிறது.

## 5.6 காமக்கிழத்தி

தலைவனின் பரத்தமையில் கூறப்படும் காமக்கிழத்தி என்பவள் தலைவிக்கு இணையாகக் கூறப்படுகின்றாள். இவளைத் தலைவன் அறவழியில் திருமணம் செய்து கொள்வதாக மருதக்கலி கூறுகின்றது. தலைவன் தலைவியை மணப்பது ஐந்திணைப்பாற்பட்ட திருமணம் ஆகும்.

காமக்கிழத்தியையும் தலைவன் மணந்து கொண்டது இப்பாடலுள் இடம் பெற்றுள்ளது. இதைச் சமுதாயமும் ஏற்றுக் கொண்டது.

''பெருமணம்பண்ணி அறத்தினில் கொண்ட
பருமக் குதிரையோ அன்று''[12]

என இப்பெருமணம் அறநூல் வழிப்பட்டதாகக் கூறப்படுகிறது.

### 5.6.1 பரத்தை - காமக்கிழத்தி இருவரையும் தொல்காப்பியர் சுட்டும் பாங்கு

தொல்காப்பியர் பரத்தையர், காமக்கிழத்தி இருவரையும் சுட்டும் முறையில் வேறுபாடு காணப்படுகிறது.

''தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப்பரத்தை உள்ளியவழியும்''[13]

என்று பரத்தைக்கு அடைமொழி கொடுத்ததை அறியமுடிகிறது.

''தாய்போல் தழீஇக் கழறியும் மனைவியைக்
காய்வின்று அவன் வயின் பொருத்தற்கண்ணும்''[14]

என்றும் ''மனையோன் ஒத்தலின்'' என்று காமக்கிழத்தியைச் சுட்டுவதும் பெறப்படுகிறது. மனைவிக்கு ஒத்தநிலை காமக்கிழத்திக்கு இருந்தது என்பதும் பரத்தையினும் காமக்கிழத்தி மேம்பட்டவள் என்பதும் தெளிவாகிறது.

### 5.6.2 பரத்தையர் மனநிலை

தலைவன் தன்னிடம் அன்பு கொண்டுள்ளதை அறிந்து தெளிந்து கொண்ட பரத்தை, தலைவியையும், சில நேரங்களில் தலைவனையும் இகழ்ந்து பேசுகிறாள்.

தலைவி பூப்புற்று இருப்பதை தோழியிடம் கூறி அனுப்பி, தலைவனை வீடுவரச் செய்ய கூறியபோது, பரத்தை தானே மனம் உவந்து

தலைவனைத் தலைவியிடம் அனுப்பியதாகத் தோழியர் கேட்குமாறு உரைக்கிறாள்.

தலைவிக்கு மகன் பிறந்துள்ளதை அறிந்து, தலைவன் நடு இரவில் பரத்தை மற்றும் யார்க்கும் தெரியாமல் தன் வீட்டிற்குச் சென்றதை அறிந்த பரத்தை, தலைவனை 'கள்வன்' என்று ஏசுகிறாள். தலைவன் தலைவி கூறியபடியே நடக்கும் செயலை 'கையும் காலும் தூக்கத்தூக்கும் ஆடிப்பாவை' என்று இகழ்ந்து கூறுகிறாள்.

தலைவி எவ்வளவுதான் தலைவனைப் பத்திரமாகப் பாதுகாத்தாலும், தான் எப்படியும் தலைவனை அடைந்தே தீருவேன் என்று சூளுரைக்கின்றாள். பரத்தை தலைவனை தனக்குரியவனாக மட்டும் ஆக்கிக் கொள்வாளோ என்று, ''தலைவிக்கு அச்சத்தை உண்டு பண்ணுவேன்'' என்றும் பலவாறாக உரைக்கின்றாள்.தலைவி தன்னை இழிவாகப் பேசியதாகக் கேள்விப்பட்ட பரத்தை, தலைவனிடம் புலந்தாள், அவனுடன் புனலாட மறுத்தாள். தலைவன் மன்றாடி வேண்டியபின் புனலாடினாள்.

தலைவியிடம், ''உன் அணிகலன்களை மட்டுமல்ல, மீதியாக உள்ள உன் கால் கொலுசையும் என் பொருட்டு நாளை தலைவன் உன்னிடமிருந்து எனக்கு வாங்கித் தருவான்'' என்றாள்.

இவ்வாறெல்லாம் பரத்தை கூறக் காரணம் என்ன என்று நோக்கும் போது அவள் மனநிலையில் ஏற்பட்டுள்ள தடுமாற்றம் புரிகிறது. தலைவிக்கு தலைவனின் மனைவி என்ற உரிமையும், புதல்வனைப் பெறும் உரிமையும், சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பும் மரியாதையும் உள்ளது. ஆனால் பரத்தைக்கு குழந்தை பெறும் உரிமையும் இல்லை. சமுதாயத்தில் இழிந்தவராகவே கருதப்பட்டனர்.

### 5.6.3 திருமணம்

காதற் பரத்தையர் மற்றவர்களை போல் அல்லாமல் ஒரு ஆணை மட்டும் சார்ந்து வாழும் இயல்புடையவர்கள் என்பது புலப்படுகிறது. ஒரு ஆணை மட்டும் சார்ந்து வாழ்வதால், இவர்கள் அவனையே திருமணம் செய்து கொள்வதும் நேரிடுகிறது என்பதை

> "......
> நறும்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு
> மட்ந்தையொடு வதுவை அயர்ந்தனன் யென்ப அலரே"[15]

என்ற அகநானூற்று பாடலிலிருந்து பரத்தையை தலைவன் திருமணம் செய்து கொண்ட செய்தி அலராக எழுந்தது என்பது விளக்கப்படுகிறது.

பரத்தையை தலைவன் திருமணம் செய்து கொண்டாலும், வீட்டிற்கே அழைத்து வந்தாலும், கற்புடை மகளிரோடு ஒப்புமையாக முடியாது என்பதை நற்றிணை 330வது பாடல் விவரிக்கிறது.

#### 5.6.3.1 பாதுகாப்பற்ற நிலை

தலைவனை மட்டுமே நம்பி அவனைச் சார்ந்தே வாழ்வதால் தலைவனை, தலைவி "தன்னை விட்டுப் பிரித்துக் கூட்டிச் சென்று விடுவாளோ" என்ற அச்சம் கொள்கிறாள். தலைவன் மேல் தான் கொண்டுள்ள அதிகமான அன்பின் காரணமாகவே பயப்படுகிறாள் அதனால் பேசுகிறாள் என்பதை.

> ".....
> மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினை இ"[16]

என்ற பாடல்வரி இதனைச் சுட்டுகிறது.

### 5.6.4 அளவுக்கதிகமான அன்பு

பரத்தை, ''யாம் தலைவனுடன் கூடியிருப்பின் இரண்டு உடலை உடையேமாவோம். அவனோடே கிடப்பின் வில்லைப் பற்றிய விரல்கள் இணைந்திருப்பதைப் போல் ஒன்றிக்கிடப்போம். அவன் எம்மை பிரிந்து தன் இல்லத்திற்கு சென்றுவிட்டால், ஓர் உடலை உடையேமாயிருப்பேன்'' என்று கூறுகிறாள் என்பதை,

''பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழுமுகை''[17]

என்ற குறுந்தொகை பாடலின் மூலம் பரத்தையின் அளவற்ற அன்பு தெரிகிறது.

தலைவன் இல்லை எனில் தனக்கு வாழ்வே இல்லை, என்று கூறும் அளவிற்கு அன்பு கொண்டுள்ளாள். அவன் தலைவியிடம் பிரிந்து சென்று விட்டாலும், அவன் என் மனத்திலே உள்ளான் என்று எண்ணுகிறாள் என்பதை நற்றிணை 400வது பாடல் மூலம் அறியமுடிகிறது.

சமூதாய மதிப்பும், குழந்தைப் பெற்றுக்கொள்ளும் உரிமையும் தலைவிக்கே கொடுக்கப்பட்டுள்ளது. அதே அளவிற்கு தலைவன் மேல் தான் அன்பு கொண்டவளாக இருந்த போதிலும், குழந்தை பெற்றுத்தரும் உரிமையோ, சமூதாயத்தில் உயர்ந்த மதிப்போ, பரத்தைக்குக் கிடையாது. தன் வாழ்க்கைக்காக தலைவனையே சார்ந்து வாழவேண்டிய கட்டாயமான சூழ்நிலையில் தலைவி தலைவனை தன்னிடமிருந்து நிரந்தரமாகப் பிரித்துக் கொள்வாளோ என்ற பயமெல்லாம் பரத்தையின் மனநிலையில் தலைவியை தன்னுடைய விரோதி போல் எண்ணத் தோன்றியதோ என்று நினைக்க ஏதுவாகிறது.

தலைவனிடம் புலத்தல், தலைவியை தரக்குறைவாக திட்டுதல் போன்றவை, தலைவனிடமாவது தனக்குள்ள ஆதிக்கத்தை காட்டவே அவ்வாறே செய்தாளோ என்பதும் நினைக்கத்தக்கது.

தலைவிக்கு குழந்தைப்பேறு இருக்கும் நிலையிலும், இல்லாத நிலையிலும் அதையே காரணம் காட்டி தலைவன் இரண்டாவதாக பின்முறை வதுவை இரண்டாவது திருமணமும் செய்து கொள்கிறான். அப்பெண்ணும் தலைவிக்கு இணையாகவே மதிக்கப்படுகிறாள். அவளுக்குப் பிறக்கும் குழந்தைகளும் தலைவனின் குழந்தையே, அதற்குரிய சமுதாய மதிப்பும் கிடைக்கும்.

தலைவன் காமக்கிழத்தியைத் திருமணம் செய்கிறான். அத்திருமணமும் அறநெறிப்பட்டதே என்று சமுதாயம் ஏற்றுக்கொண்டது. அவளும் தொன்முறைக் கிழத்தியாகிய தலைவிக்கு இணையாகவே இலக்கியங்களில் காட்டப்படுகிறாள்.

அவளுக்கும் தலைவனின் மனைவி என்ற உரிமையும், குழந்தைப் பேறும், சமுதாய மதிப்பும் கிடைக்கிறது. தலைவி தலைவனிடம் ஊடல் கொண்ட போது அவ்வூடலைத் தீர்த்து வைக்கும் வாயில்களில் ஒருவராக விளங்குகிறாள். ''தலைவன் ஆண்மகன் என்றால் அப்படித்தான் இருப்பான். நீதான் விட்டுக் கொடுத்து செல்ல வேண்டும். அப்போதுதான் வாழ்க்கை அமைதியாக இருக்கும்'' என்று தலைவிக்கு அறிவுரை கூறும் நிலையில் இருக்கிறாள்.

இதை எல்லாம் எண்ணி மனம் உழன்றதாலேயே இவ்வாறெல்லாம் பரத்தை கோபப்படுகிறாள் என்று எண்ணத் தோன்றுகிறது.

## 5.7 நொதுமற் பெண்டிர்

பரத்தையர் தம்மை விரும்புவோரிடமிருந்து பொருளைப் பெறுவர் அப்பொருளைத் துய்க்கும் உரிமை அவர்களுக்கே என்று தலைவியிடம் பேசினர் என்ற கருத்துக்கள் பரிபாடலில் காணப்படுகின்றன.

பரிபாடல் மற்றும் மதுரைக்காஞ்சியில் குறிப்பிடப்படுகின்ற பரத்தையரே பொருளின் மேல் பற்றுகொண்டு அலைவது போல்

காட்டப்படுகிறார்கள். மற்ற இலக்கியங்களில் பெரும்பாலும் தலைவன் மேல் அளவற்ற அன்பு கொண்டவர்களாகவே காட்டப்படுகிறார்கள்.

### 5.7.1 பரத்தமை கண்டிப்பு

தலைவன் தலைவியைவிட்டு பரத்தையிற் பிரிந்தாலும், பதினைந்து நாள் பூப்புறா காலத்தில் பிரிவான் என்றும், பரத்தமை இயல்புதான் என்றும் கூறிய காலத்தில், பரத்தமையை கண்டித்தும் இடித்துரைத்தும் பரணர் பாடல்கள் பாடியுள்ளார்.

பதினைந்து நாட்களையும் தாண்டி பல காலம் தலைவியாகிய கண்ணகியைப் பிரிந்து, தலைவன் வையாவிக்கோப்பெரும்பேகன் சென்றுவிட்டான். எனவே தலைவி சொல்லமுடியாத பெருந்துன்பத்தால் எப்போதும் கண்ணீர் விட்டு அழுதபடியே உள்ளாள். பேகனிடம் புலவர் தம் நட்பின் நெருக்கத்தால், ''அருள் செய்யாவழி கண்ணகி உயிர் இழத்தலும் பேகனுக்குப் பழி உண்டாதலும் ஏற்பட்டு கொடுமையாய் முடியும்'' என்று கூறி பரத்தமையைக் கண்டித்தார் பரணர் என்பதை புறநானூறு 143வது பாடலின் மூலம் அறியமுடிகிறது.

'வாயில் மறுத்தல்' என்கிற துறையில் அமைந்த பாடல்களும் பரத்தமையை மறைமுகமாகக் கண்டிக்கின்றன என்பது பெறப்படுகிறது.

## 5.8 தலைவி தன் ஆற்றாமையை உரைத்தல்

இனிய இல்லறம் மேற்கொள்ளும் தலைவன், சில காலங்களில் பரத்தையர் பிரிவு மேற்கொண்டான். தலைவி பிரிவுத்துயரம் ஆற்றாமல் கண்ணீர் வடித்தாள். தலைவன் பரத்தையர் பிரிவு மேற்கொண்ட பிறகு தலைவியை நினைத்து வருத்தப்பட்டதாகவோ, பயம் கொண்டதாகவோ இலக்கியத்தில் செய்திகள் இல்லை. ஆனால் தலைவியோ அக்காலங்களில் தலைவனையே நினைத்து காலம் தள்ளுபவளாகவேக் காட்டப்படுகிறாள். தலைவனை மறக்காமல் இருக்க முடியவில்லையே என்று வருத்தப்படுகிறாள்.

### 5.8.1 தெய்வத்தின் மேல் ஆணை

தலைவன் களவுக் காலத்திலும் கற்புக் காலத்திலும் தலைவியை விட்டுப் பிரியேன் என்று கூறி இன்பம் நுகர்ந்தான். அதுபோல் பிறர் தலைவி மீது கூறும் அலரை எண்ணி அஞ்சினான். மேலும் பரத்தையர் பிரிவைத் தவறாகப் பேசி அதனை ஒருக்காலும் மேற்கொள்ளேன் என்று

> **''தண்டுறை யூரன் தெளிப்பவும்
> உன்கண் பசப்பது எவன் கொல் அன்னாய்''**[18]

என்று கூறி தெய்வத்தின் மேல் ஆணை செய்கிறான்.

இதனைத் தோழியிடம் கூறி 'முன்பு பிரியேன்' என்று சூள் உரைத்தவன், தற்போது கயவனாக மாறி பரத்தையரிடம் பிரிந்து போய்விட்டான் என்று கூறி அழுகையுடன் தன் ஆற்றாமையை உரைத்தாள்.

தலைவன் புணர்ச்சிக் காலங்களில் பிரியமாட்டேன் என்று கூறுவது இயல்பு. இதனை அகநானூற்றில்

> **''சிறு காரோடன் பயினொடு சேர்த்திய
> கற்போல் பிரியலம்''**[19]

என்ற பாடலாலும் அறியலாம்.

### 5.8.2 மெலிதலால் அவலம்

தலைவன் பரத்தையர் மாட்டு பிரிந்து சென்றதால் தலைவி மிகவும் வருந்தி மெலிந்தாள். இதனால் ஆற்றாமையுடன் தோழியிடத்து ''தலைவன் கனவில் வருகிறான் நனவில் வராமையால் எப்படி ஆற்றியிருக்க முடியும் மெலிதல் உறுகின்றேனே'' என்று தலைவி தன் அவலத்தைக் கூறுகின்றாள்.

தலைவன் மெலிவதாகவோ கனவில் தலைவி வருதாகவோ, அவளை விட்டு பிரிந்ததால் வருந்துவதாகவோ காட்டப்படவில்லை.

### 5.8.3 தலைவன் மார்பில் துயில விரும்பல்

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்றான். அவன் மார்பில் பரத்தையர் உறங்குவர். தலைவியோ தரையில் உறக்கமின்றி படுத்திருந்து புலம்பினாள். அப்பொழுது தலைவி தன்னுடைய ஆற்றாமையை அழுகையுடன் 'அவன் என்னைப் பிரிந்தவனாயினும் அவன் மார்பு இனியத் துயிலுக்குரியது' என்று கூறுகிறாள்.

பொதுவாகவே தலைவன் மார்பில் தலைவி துயில்வது இன்பமாக கூறப்பட்டது. இதனை

''ஐயகுறு மகட் கண்டிரும் வைகி
மகிழ்நன் மார்பில் துஞ்சி''[20]

என்ற பாடலாலும் அறியலாம்.

### 5.8.4 தோள்கள் கெட்டவன் எனல்

தலைவன் பரத்தமை மேற்கொண்ட பிறகு, சில காலங்களுக்குப் பின்பு தலைவியை நினைத்து அவளிடம் சேர எண்ணினான். உடனே சென்றால் தலைவியும் தோழியும் சேர்க்க மாட்டார்கள் என்பதனால், பாங்கனைத் தூது அனுப்பினான். தூதுவராக வந்தவரிடத்தில், தலைவி தலைவனை உள்ளமானது நல்லவன் என்று ஏற்றுக் கொள்கிறது. ஆனால் தோள்கள் அவனைக் கெட்டவன் என்கிறது என்றாள்.

இதன் மறுபொருள் அவனை என்னால் மறக்க முடியவில்லை. என்னைப் புணர்ச்சி செய்யவாவது அவன் வரட்டும் என்பதாகும். தலைவி இது போன்று தன்னையும் தோளையும் வேறுபடுத்திக் கூறுகின்ற பாடல்கள் குறுந்தொகையில் காணப்படுகின்றன.

''கற்பின் கண் தலைவனை நீங்கி மிகத் தனிமையுற்று அலமரல் (குழப்பம்) பெருகிய காமமிகுதிக்கண் தலைவிக்கு கூற்று நிகழும்'' என்று இளம்பூரணர் உரைப்பர்.

### 5.8.5 கண்கள் அழுதல்

தலைவனுக்காகத் தூது வந்த வாயில்கள் இடத்தில் தலைவி ஆற்றாமைக் கருத்துக்களைக் கூறி வாயில் மறுக்கிறாள். ''தலைவன் என்றும் இன்பம் தரும் பரத்தையர்களை உடையவன் அவனுக்காக வாயில் நேர்வது ஏன்? நான் அவனை வெறுத்தபோதும் என் கண்கள் அவனை நினைத்து வருந்தி துயரத்தால் அழுகின்றன'' என்றாள்.

### 5.8.6 பசலை நினைவூட்டல்

தலைவன் தலைவியை மறந்து எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் வாழலாம். ஆனால் தலைவி அவ்வாறு வாழக்கூடாது, வாழ முடியாது என்பதாகவே இலக்கியங்கள் காட்டுகின்றன.

பரத்தையின் பொருட்டு என்னை மறந்த தலைவனை மறக்க நினைக்கின்றேன். ஆனால் பசலை வந்து நியாபகப்படுத்துகிறது. என் கை வளையும் நெகிழ்கிறது என்று தன் ஆற்றாமையை தோழியிடம் உரைக்கின்றாள்.

### 5.8.7 கோபத்தில் புலத்தல்

பரத்தையர் பிரிவிற்குப் பிறகு வாயில் நேர்ந்த தலைவனிடம் 'என்னோடு புனலாடாமல் பரத்தையரோடு ஏன் நீராடச் சென்றாய் நீ அழைத்தால் நான் வரமாட்டேனோ' எனத் தலைவி கோபத்தில் புலந்தாள்.

### 5.8.8 பேதமைப் பண்பு

தலைவி பேதமைப் பண்பினை உடையவளாகப் பலரும் சுட்டிக்காட்டுவர். பேதமை என்பது ஆராய்ந்து அறியும் அறிவின்மையாகும். இதை தலைவியே கூறுவதாக பாடல் அமைந்துள்ளது என்பதை.

"பொய்ச் சொல்லை மெய்ச்சொல் என்று ஒழுகும்
பேதமை உடைய என்னைப் பசலைச் செய்து
சென்றவன்"[21]

என்றும். தலைவன் மூலமாகவும் தலைவியை அறிவற்றவள் என்று, 'மாலை தந்தால் பரத்தைக்குத் தந்த மாலையெனப் பேதமை கொள்வாள்' என்றும் கூறுகிறான்.

### 5.8.9 தூது ஏற்று மகிழ்தல்

பரத்தையர் பால் பிரிந்து சென்ற தலைவன், தீதில் நெஞ்சத்து தூதொன்றை அனுப்ப, அத்தூதை ஏற்றுக்கொண்ட தலைவி தன் அன்பை வெளிப்படுத்தும் நிலையில்

"................. நாமும்
நெய் பெய்தீயின் எதிர்கொண்டு
தான் மணந்தனையம் என விருகம் தூதே"[22]

நெய்யை ஏற்றுக் கொள்ளும் நெருப்பு போல நாமும் தலைவனை ஏற்று இன்புற்று வாழ்வோம். நெய்யும் தீயும் இரண்டறக் கலந்தால் தீ கொழுந்துவிட்டு எரியும். அதுபோல நாமும் தலைவனுடன் கலந்து நம் தளர்ச்சி நீங்கப் பெற்று வளர்ச்சியுறுவோம் என்றாள்.

நம்மைப் பிரிந்த அவர் அங்கேயே தங்கியிருக்கும் மனவலிமையைப் பெற்றுள்ளார். அவ்வலிமை நமக்கு இல்லை எனினும், அவர் விரைவில் வரும் பொருட்டு மலையிலுள்ள சூலியாகிய தெய்வத்திற்கு நாம் பலிகடன் செலுத்த வேண்டாம். காப்பு நூலை கட்டிக் கொள்ள வேண்டாம். புள் நிமித்தம் பார்க்கவோ, நற்சொல் கேட்கவோ வேண்டாம். அவரை நினைக்கக் கூட வேண்டாம். ஏனெனில் அவர் நம்முடைய உயிருக்கு உயிரானவர் ஆதலின் நம் துயரத்தைத் தெரிந்து அவரே விரைவில் வருதல் வேண்டும் என்கிறாள் தலைவி என்பதை.

"வாடாமுகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்"[23]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. இவ்வாறு அவள் தோழிக்கு உரைப்பதில் இருந்து பிற பெண்களிடம் சென்றாலும், அவன் வந்தால் அவனை ஏற்கும் மனநிலையிலேயே தலைவி இருக்கிறாள் என்பது பெறப்படுகிறது.

மேற்கண்ட பல நிலைகளில் பரத்தமைப் பற்றிப் பிரிந்த தலைவன் பொருட்டு தனது ஆற்றாமைக் கருத்துக்களை முன் வைத்த தலைவி, தலைவனை நேரடியாகக் கண்டிக்கும் திறமற்றவளாக செயல்படுவதாகவே காட்டப்பட்டுள்ளது. உயர்ந்த பட்சமாக தலைவியின் கண்டிப்பு.

> ''நான் உன் மனைவியாயின் பிரிவற்க பிரிந்து போயின்
> பரத்தையரெல்லாம் உன் மனைவி என்பர்''[24]

என்ற நிலையிலேயே அமைகிறது என்பதை அறியமுடிகிறது.

## 5.9 மனவேறுபாட்டை உரைத்தல்

பரத்தையின் காரணமாகத் தலைவன் பல நாள் சென்று இன்பம் அனுபவித்த காலங்களில் தலைவி, தனது ஆற்றாமையை வெளிப்படுத்தினாள். சில நேரங்களில் தன்னுடைய கோபத்தைத் தன் மனம் வேறுபாடு கொண்டுள்ளதாக வெளிப்படுத்தினாள். தலைவனிடம் மிகுந்த கோபத்தோடு, தன் மனம் முன்பு போல இல்லை என வெளிப்படுத்தினாள். தலைவன் பல நிலைகளில் வாயில் நேர்ந்த போதிலும் ஏன் பரத்தையிடம் சென்றாய் என்று, ஓர் இடத்தில் கூட கண்டிக்காமல் நேரடியாக கூறாமல் வேறு காரணங்கள் கூறி மறுக்கிறாள்.

### 5.9.1 யானே கண்டேன்

தலைவன் பரத்தையர் பிரிவு மேற்கொண்டு சில நாட்கள் கழித்து தலைவியை நாடி வருகின்றான். பாங்கன், பாங்கியை வாயில் நேர்விக்க, தோழியும் தலைவியும் மறுத்தனர். இதனால் தலைவன் தானே நேரடியாக வந்து வாயில் நேர்ந்தான். அப்பொழுது தலைவி, ''பரத்தையிடம் தானே நீ

சென்றாய்'' என்று வினவ அவன் பரத்தையிடம் செல்லவில்லை வேறு இடம் சென்றேன் என்று கூறுகிறான். அப்பொழுது தலைவி, ''யானே கண்டேன் எனக்குத் தெரியும்'' என்று கூறி தன் மனவேறுபாட்டை உரைத்தாள். ''ஏன் சென்றாய்? இவ்வாறு செய்யலாமா? என்று கேட்காது நீ செய்தது எனக்குத் தெரியும்'' என்றாள்.

### 5.9.2 புனலாடல்

தலைவனே, நீ பரத்தையோடு நீராடியதைப் பலரும் கண்டனர் ஆனால் நீயோ மறைக்கின்றாய், ஆனால் நீ நீராடியதை யான் அறிவேன், நீ இன்று பரத்தையரோடு நீராடிய நீர் நிலையில், களவுக்காலத்தில் நான் உன்னுடன் நீராடியதை நினைத்து துன்பப்படுகிறேன் என்று கூறி தன் மனக்கலக்கத்தை வெளிப்படுத்தினாள்.

தலைவன் பரத்தையோடு நீராடிய செய்தியைத் தலைவி அறிந்ததாகப் பாடல்கள் பல உள்ளன என்பதை

**''நின் வெம் காதமி தழீஇ நெருநை**
**ஆடினை என்ப புனலே அலரே**
**மறைத்தல் ஒல்லுமோ மகிழ்ந''**[25]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 5.9.3 அடையாளம் காணல்

பரத்தையர் செய்த அடையாளத்தைக் கூட அழிக்காமல் நீ வந்துள்ளாய், அந்த அடையாளத்தைக் கூட கண்டுபிடிக்க முடியாதவளா நான் என்று தலைவி புலந்தாள்.

### 5.9.4 ஊடுதல்

பரத்தை என்னைத் திட்டியுள்ளாள் அதைக் கேட்டுக் கொண்டு வந்துள்ளாயே என்று கூறி, ''நீ அவளைக் கண்டிக்காதது ஏன்'' என்று தலைவி தலைவனிடம் கூறினாள்.

### 5.9.5 மனம் ஏற்கவில்லை

தலைவனே உன்னை நான் ஏற்கும் மனநிலையில் இல்லை, என் மேல் அன்பு கொண்டு நீ என்னிடம் வரவில்லை பரத்தையர் உன்னை விரட்டிவிட்டதால் தானே நீ இங்கு வந்தாய். நீ பரத்தையிடமே செல் என்று கூறி வாயில் மறுத்தாள்.

### 5.9.6 மார்பை சேர மறுத்தல்

தலைவன் பரத்தையர் பொருட்டு பிரிந்து சென்றான். மிகுதியான துன்பத்திற்கு ஆளான தலைவியை புணர்ச்சியின் பொருட்டு வாயில் நேர்ந்தான். தலைவனுக்கு பல பரத்தையரிடம் தொடர்பு இருப்பதை அறிந்த தலைவி, பரத்தையரை அணைந்த மார்பை நான் தழுவமாட்டேன் என்று கூறினாள். பரத்தையர் அணைந்த மார்பை குலமகள் வெறுப்பர் என்பதை

> ''கவவுக் கைதாங்கும் மதுகைய கவ்வு முலை
> சாடிய சாந்தினை வாடிய கோதையை
> ஆசில் கலம் கழீஇயற்று''[26]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 5.9.7 புதல்வனை ஈன்றவள்

அண்மையில் புதல்வனை ஈன்ற என் மார்பை முயங்குதலை ஒழிப்பாயாக, ஏன்எனில் பரத்தையரைத் தழுவிய மார்பால் என் மேனியைத் தழுவுவாய் ஆயின் என் மார்பு நலம் சிதையும் எனவே நான் உன்னைச் சேர மாட்டேன் என்று கூறினாள்.

இவ்வாறு மனம் வேறுபட்டு புணர்ச்சிக்கு ஏற்காதது கூட கண்டிப்பு இல்லை, இழிவரல் பொருட்டே இதனைத் தொல்காப்பியர்.

"…….
கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நனியின் நீக்கிய இளிவு நிலையும்"[27]

என்று கூறுவார்.

குழந்தை பெற்றெடுத்த தலைவியின் மார்பைத் தலைவன் தழுவுவதைத் தலைவி விரும்பவில்லை என்பதை அகம் 26வது பாடலால் அறியலாம். அதேப் போன்று புதல்வனை ஈன்ற தாயை முயங்கத் தலைவன் அஞ்சுவான் என்பதை நற்றிணை 350வது பாடலாலும் அறியலாம்.

### 5.9.8 யான் பேயாயினேன்

பெரும்பாலும் பரத்தையர் பிரிவு மேற்கொள்ளும் தலைவன் தலைவி கருக்கொண்ட பிறகு பிரிந்து செல்வான். மனைவி புதல்வனைப் பெற்றெடுத்துவிட்டாள் என்று கேள்விப்பட்டவுடனே திரும்பி வருவான். ஆனால் ஒரு தலைவன் உடனே திரும்பி வராமல் காலம் கடந்து, திரும்பி வந்த போது தலைவி ஊடல் கொண்டு

"பிள்ளைப் பெற்றதால் யான் பேயாயினேன்
உன்மகளிர் அழகாயினர் எனவே நீ வரவேண்டாம்"

என்று கூறினாள் என்பதை மேற்கண்ட பாடல் வரிகள் தெளிவாகின்றன.

### 5.9.9 மகப்பேற்றினால் மேனி நாறுதல்

மகப்பேற்றினால் தலைவியின் மேனி நாற்றம் எடுக்கும் என்பதை,

"நெய்யும் குய்யும் ஆடி மையொடு
மாத பட்ன்றே கலிங்கமும் தோளும்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிந்ரப்
புதல்வர் புல்லிப் புனிறு நாறும்மே
வாலிழை மகளிர் சேரித் தோன்றம்
தேரோர்க்கு ஒத்த எனம் தல்லேம்"[28]

என்று உரைத்து தன் அழகின்மையையும், மேனி நாற்றத்தையும் கண்டு மனம் வேறுபட்டாள்.

பொதுவாகவே பெண்கள் மகப்பேற்றினால் மேனி நாற்றம் அடைவர் என்று சங்க இலக்கியம் கூறுகிறது.

இவ்வாறாகத் தலைவி தன்னுடைய கோபத்தை நேரடியாக வெளிப்படுத்த முடியாதவளாகி, தன் மனம் வேறுபாடு கொண்டுள்ளது என்பதை மட்டுமே உரைப்பவளாக உள்ளாள் என்பது தெளிவாகிறது

## 5.10 வாயில்கள் இடத்தில் புலம்பல்

தலைவன் பரத்தையர் பிரிவு மேற்கொண்டான். ஆனால் தலைவியோ தன் ஒத்துழைப்பின்மை, அதாவது நல்ல இன்பத்தைத் தான் அளிக்கவில்லை என்பதன் பொருட்டே பரத்தையர் பிரிவு மேற்கொண்டான் என்று புலம்புகிறாள்.

> **''நல்ல இல்லற இன்பத்தை மறந்து தலைவன் தீய**
> **பரத்தை இன்பத்தை அனுபவிக்கிறான்''**

> **''அழகான மனைவி நான் இருக்க தலைவன் பல**
> **பரத்தையரைத் திருமணம் செய்து கொள்கிறான்''**

என்பது தெரிகிறது. தலைவன் பரத்தையரிடம் சென்றது தவறு என்றாலும் அதை நேரடியாகக் கூறாமல் தவறைத் தன் மீதே ஏற்றி உரைக்கிறாள் என்பதை அறியமுடிகிறது.

## 5.11 பரத்தையை திருமணம் செய்தல்

தலைவன் பரத்தையரைத் திருமணம் செய்து கொள்வது அக்காலத்தில் மிகுதி, இதனை

> **''திருமருது ஓங்கிய விரிமலர்க் காவில்**
> **நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு**
> **வதுவை அயர்ந்தனை என்ப அவரே''**[29]

என்ற பாடலடிகளாலும் அகம் 206,56,66 ஆகிய பாடல்களிலும் காணலாம்.

தலைவி தலைவன் பரத்தையரோடு வேண்டும்வரை புனலாடியும், இந்திர விழாவில் பலரைக் கூட்டி மகிழ்ந்து ஆடியதையும் கூறி புலம்புகிறாள்.

இத்தகைய வாயில்கள் இடத்து கூட, தலைவி தன்னுடைய கோபத்தை வெளிப்படுத்த முடியாதவளாக இருந்திருக்கிறாள், ஏனெனில் கோபத்தைச் சென்று வாயிலோர் உரைப்பின், தலைவன் வீட்டுக்கு வருதலை ஒத்திப் போட்டு விடுவானோ என்பதேயாகும். எனவேதான் வாயிலாக வந்தோர் இடத்தில் தலைவன் வருதலை யான் விரும்புகிறேன் என்றும் பொருள்பட பேசினாள்.

தலைவன் பரத்தமையில் ஒழுகினாலும், இல்லத்திற்குத் திரும்பும் போது, மனைவி மக்களோடு மாறாத அன்போடு இருந்தான். தன் மகனிடம் மிகுந்த அன்பு கொண்டிருக்கும் தந்தை, பரத்தை இல்லத்திலிருந்து நள்ளிரவில் திரும்பி வந்து தன் மகனை அணைத்துக் கொண்டு உறங்குகிறான்.

பரத்தமையில் ஈடுபட்டாலும், மனைவி மக்களிடம் கொண்ட பாசத்தைக் கைவிடாத குடும்பத்தலைவனாகவும் இருப்பதனால், தலைவனால் தனக்கு ஏற்படும் இடர்பாடுகளையும், குழந்தையின் மேல் கொண்ட தாய்ப்பாசத்தினால் தலைவி மறக்கிறாள்.

## 5.12 பரத்தையைப் புரிந்து கொண்ட தலைவி

அகநானூற்றில் இடம் பெற்றுள்ள இப்பாடல் பரத்தையின் தாய்மை உணர்வை எடுத்தியம்புகிறது என்பதை

"…..
கூரெயிற் றரிவை குறுகினள் யாவரும்
காணுநர் இன்மையின் செத்தனள் பேணிப்
பொலங்கலஞ் சுமந்த பூண் தாங்கிளமுலை
வருக மாளஎன் னுயிரெனப் பெரிது உவந்து
கொண்டனள் நின்றோன் கண்டு நிலைச் செல்லேன்
மாசில் குறுமகள் எவன்பேதுற்றனை
நியுந் தாயை இவற்கென யான்தன்
கரைய வந்து விரைவனென் கவைஇக"[30]

என்ற பாடலிலிருந்து பரத்தையும் தாய்மை உணர்வினாலே தலைவனின் புதல்வனை சேர்த்து அணைத்து என் உயிரே என்றாள் அதனைப் புரிந்து கொண்ட தலைவி பரத்தையை "மாசில் குறுமகள்" என்று விளித்து "இவனுக்கு நீயும் தாய் தான்" என்றாள். இவ்வாறு கூறுவதிலிருந்து அவள் மேல் குற்றம் இல்லை என்பதும், அவளின் இந்நிலைக்கு ஆடவர்களும், சமுதாயமுமே காரணம் என்பதை புரிந்து கொண்டாள்.

சங்க இலக்கியங்கள் முழுவதிலுமே எங்கேயும் பரத்தை தாய்மைப்பேற்றை அடைந்ததாக செய்யுள் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

தலைவி தலைவனின் புறத்தொழுக்கத்தை வெறுத்தாலும், அவனுடன் வாழ வேண்டிய கட்டாய நிலையையே 'வாயில் நேர்தல்' துறை அறிவிக்கின்றது.

பரத்தமை மேற்கொண்ட தலைவனை இடித்துரைத்து, மீண்டும் இல்லம் சேர்த்துக் கொள்ளும் நிலையே 'வாயில் நேர்தல்' ஆகும்

'வாயில் மறுத்தல்' மூலம் பரத்தமை தவறு என்பதும் 'வாயில் நேர்தல்' மூலம் அத்தவறு மீண்டும் நேராமல் திருத்திக் கொள்ள வேண்டும் என்பதும் உணர்த்தப்பட்டன.

கணவன் புறத்தொழுக்கம் உடையவராயினும், உடையவன் போலும் என்பதைக் குறிப்பால் உணர்ந்தாலும், கற்பில் சிறந்த பெண்கள்

புலவாமல் ஒழுகும் தன்மையள் என்றே சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

கணவன் சொற்படி நடந்து, அவனை உண்டி முதலியவற்றால் பேணி, அவன் புறத்தொழுக்கம் பிறருக்கு புலப்படா வண்ணம் வாழும் பெண், அவனுக்குற்ற பழிகளையும் துடைத்துப் புகழ் காக்க வேண்டும். சொற்காத்தலின் சோர்வில்லாத பெண் கற்புடையவளாகக் கருதப்பட்டாள்.

தலைவி தலைவனின் புறத்தொழுக்கத்தை வெறுத்தாலும் சேர்ந்து வாழ வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாக்கப்பட்டுள்ளாள். இதற்குச் சில காரணங்களைக் குறிப்பிடலாம்.

1. தலைவனுடன் வாழாத பெண்மை இழிவாகக் கருதப்படுதல்.
2. தலைவனின் பொருள் இல்லாத நிலையில் தலைவி வாழ முடியாத நிலை
3. குழந்தைப்பேறு காரணமாகத் தலைவி தலைவனை ஏற்றுக்கொள்ளுதல்.
4. தலைவியின் இளமை உணர்வு பிடிவாதத்தைத் தளர்த்தல்.
5. தலைவன் மீண்டும் பரத்தையின் இல்லம் செல்ல மாட்டான் என்ற நம்பிக்கை.
6. தலைவனுடன் தலைவியை இணைக்க தோழியும் கலைஞர்களும் முயற்சி மேற்கொள்ளல்

என்பன போன்ற காரணங்களைக் குறிப்பிடலாம்.

## 5.13 தலைவனைப் பெருமைப்படுத்தல்

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்று பரத்தையோடு உறவாடி மகிழ்ந்த தன்மை, மருதத் திணைப்பாடல்கள் எங்கும் காணப்படுகின்றன. இத்தகைய நிலையில் பெண்ணின் பேதை உள்ளம் மிகுந்த வேதனையை அனுபவிக்கும் தலைவியின் வேதனையைக்

கண்ணுற்ற தோழி தலைவனைக் குறைவாக மதிப்பிட்டுக் கூறினாள். இதனை

"இது மற்று அவனோ தோழி நுனியடை
இன்னா் என்னும் இனனாக் கிளவி
இரு மருப்பு எருமை ஈன்றனிக்காரன்
உழவன் யாத்த குழவியின் அகலாது
பாகற் பைம்பியிராகு மூரன்
திருமனைப் பலகடம் பூண்ட
பெரமுது பெண்டிரேன் ஆகிய நமக்கே"[31]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. தலைவனை இழிகுறிப்புத் தோன்றக் கூற, அதனைப் பொறுக்காத தலைவி அவரோடு பிரிந்திருக்கும் இக்காலத்தில் அவரைப் பற்றி குறை கூறுவதனால் பயனொன்றும் இல்லை. இல்லறம் நடத்தும் பணியை மேற்கொண்டுள்ள நாம் செய்ய வேண்டி செயல்கள் பல உண்டு, இன்பம் ஒன்றையே பெரிதாகக் கருதும் இளமையைக் கடந்து நாம் முதுமை எய்திவிட்டோம். ஆதலால் தலைவர் எவ்வாறு இருந்தாலும் நாம் நம் கடமையைச் செவ்வனே செய்ய வேண்டும் என்கிறாள். தனக்கு அருகிலேயே இருந்து, தன் சுக துக்கங்களில் பங்கு கொள்ளக் கூடியவள் தோழி, அத்தகைய தோழி கூடத் தன் தலைவனை இழிகுறிப்புத் தோன்ற கூறப் பொறுக்காமல் தலைவனுக்காகப் பரிந்து பேசி, தலைவனின் தவறையும் நியாயப்படுத்துகிறாள். இதிலிருந்து தலைவன் மீது அவள் கொண்டுள்ள விருப்பத்தினையும், மதிப்பையும் அறிந்து கொள்ளலாம். அதற்காக அவள் உள் மனம் தலைவனை முழுவதுமாக ஏற்றுக்கொண்டது எனக் கொள்ளுதல் பொருந்தாது.

## 5.14 பெண்கள் யானைக் கவளம் எச்சில் உண்ணுதல்

பண்டைக் கால பெண்களிடம் யானை உண்ட எச்சிலை உண்ணும் பழக்கம் இருந்துள்ளது. அவ்வாறு உண்ணும் போது, தன் கணவர் பரத்தையர் மோகத்தால் தன்னைப் பிரிய மாட்டார் என நம்பினர் என்பதனை

''பன்மணம் மன்னும் மின்னிரும் கூந்தலர்
கன்னிமை கனிந்த காலந்தார்முன்
கொடியேற்று வாரணம் கொள் கமழ மிச்சில்
மறுவற்ற மைந்தர் கோள் எய்தார் மணந்தார்
முறுவற்றலையளி எய்தார் நின்குன்றம்
குறுதிச் சிறப்பு ணாக்கால்''[32]

என்னும் பரிபாடல் வரிகள் இதற்குச் சான்றாய் அமைகின்றன. முருகவேள் வழிபாட்டின் போது, யானை உண்ட கவளத்தின் மிச்சத்தைப் பெண்கள் உவந்து உண்டனர். அங்ஙனம் உண்ணாவிடின் மகளிர் தம் காதலருடைய சிறந்த அன்பை எய்தார் என நம்பினர்.

தலைவன் எப்போதும் தன்னையே அன்பு செய்ய வேண்டும், பிற பெண்களிடம் செல்லக்கூடாது என்று இறைவனை வேண்டிய போதும், சிலர் பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டனர் என்பதை சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது.

தலைவி தோழியிடம் ''என் கணவரை முயங்கி இன்புற்று வாழ இயலாவிடினும், கடமைகளைச் செய்து இன்புற்று வாழ்வோம்'' என்று கூறுவதை குறுந்தொகை பாடல் குறிப்பிடுகிறது. தலைவன் பரத்தையிடம் சென்ற நிலையில் உண்மைக்காதல் கொண்ட மகளிர், தம் கணவர் அன்பில் குறைந்தாலும் தாம் கொண்ட அன்பால் இறுதிவரை ஒழுகுவர் என்பதை மருதப்பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

ஒரு பெண் தன் கணவன் பரத்தை இல்லத்திற்குச் சென்றபோதும், அவன் வருகையை எதிர்நோக்கி ஆற்றியிருப்பாள், வந்தவுடன் சினம் கொண்டு ஊடினாலும், வருந்தினாலும் பின்னர் அவனுடன் சமரச உறவு கொண்டு வாழ்தலையே சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

மகளிர், தன் கணவன்மாரைவிட்டுப் பிரிந்து சென்றதாக சங்க இலக்கியங்கள் எந்த ஒரு இடத்திலும் குறிப்பிடவில்லை. சங்ககால மகளிர் பொறுமை குணமும், சகிப்புத்தன்மையும் கொண்டு வாழ்ந்தனர் என்பது இதன் மூலம் அறியமுடிகிறது.

தலைவியின் மகன் தேவகோட்டங்களை வழிபடுவதற்காக பணிப்பெண்களுடன் சென்ற போது அவனை இன்னார்புதல்வன் என அடையாளம் கண்டு கொண்ட பரத்தை, தலைவனாகவே எண்ணி அவனுக்கு அணிகள் பூட்டி மகிழ்ந்தாள். இதனைக் கேள்விப்பட்ட தலைவி, தலைவனின் இந்த கூடாவொழுக்கமும் நட்பும், தன் மகனுக்கும் வந்து விடக்கூடாது என்பதற்காக அஞ்சியவளாய் மகனை அடிப்பதற்கு கோல் தருமாறு வேண்டி அவனை அச்சுறுத்தினாள். இனி இவ்வாறு செய்தால் வெளியில் சென்று வர அனுமதிக்கமாட்டேன் என்றாள் என்பதை

> **''புலத்தகைப் புத்தேள் இயபுக்கான் - அலைக்கு ஒரு**
> **கோல்தா நினைக்கு அவள் யார் ஆகும் எல்லா?**
> ......
> **ஐயம் இல்லாதவர் இல்ஒழிய எம்போலக்**
> **கையாறு உடையவர் இல் அல்லால் செல்லல்**
> **அமைந்தது இனி நின் தொழில்''**[33]

என்ற அடிகள் மூலம் அறியலாம்.

ஆண் குருவி தன் துணையான பெண் குருவியை விட்டு விட்டு, வேறு ஒரு குருவியுடன் சேர்ந்து புணர்ந்து விட்டு, காலம் தாழ்த்தி வந்தது. இதைக் கண்ட பெண் குருவி அந்த ஆண் குருவியை கூட்டுக்குள் நுழைய விடாமல் தடுத்தது. வெளியிலே மழையிலே நனைந்தபடி நின்ற ஆண் குருவியைக் கண்டு, வெகுநேரம் கழித்து, மனம் இரங்கி கூட்டுக்குள் வர சம்மதித்தது, பெண் குருவி. இச்செய்தியை நற்றிணை 181வது பாடலின் வழி அறியமுடிகிறது. பறவையினமாயினும் ஆண்குருவியின் பரத்தையர் பிரிவை பெண்குருவி வெறுத்தது என்பது தெரிய வருகிறது.

ஆடவர் தன் காதலை - காமத்தைக் கழித்துக் கொள்ளும் கருவியாக ஒரு வகுப்பினரையே உண்டாக்கி விட்டது. இத்தீமை டாக்டர் முத்துலட்சுமி அம்மையார் அவர்களால் சட்டத்தின் மூலம் ஒழிக்கப்பட்டது. எனினும் இன்னும் அது வேறு வடிவில் நடைமுறையில் இருந்து வருகிறது. ஆடவர்கள் அனைவரும் ஒழுக்கக்கட்டுப்பாடு உடையவர்களாக ஆனாலன்றி இத்தீமை ஒரு நாளும் அழியாது.

## 5.15 தொகுப்புரை

1. தலைவன் தன் மனைவியிடத்து மட்டுமின்றி சில பெண்டிரிடத்தும் இன்பம் துய்த்து வந்தான். அப்பெண்கள் பரத்தையர் எனப்பட்டனர்.

2. பரத்தையரில் காமக்கிழத்தியர், காதற்பரத்தையர், இற்பரத்தையர் சேரிப்பரத்தையர் என சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

3. பகைவரின் மனையோராய்ப் பிடித்து வரப்பட்ட பெண்கள் கொண்டி மகளிர் இவர்கள் பரத்தையராக்கப்பட்டனர்.

4. போர்க்காலம் நீட்டித்ததும், அங்கு மனைவியரை அழைத்துச் செல்லக்கூடாது என்பதும் பரத்தையர் குலம் உருவாக அடித்தளமாகும்.

5. மனைவியின் பிள்ளைப்பேறு காரணமாகவும், ஆடல் பாடல் முதலிய கலைகளில் ஈடுபாடு கொண்டதாலும், செல்வச்செழிப்பாலும் தலைவன் பரத்தையர் பிரிவை மேற்கொண்டான்.

6. பரத்தையர் பிரிவு மேற்கொண்டாலும் பூப்புறு காலத்தில் தலைவியுடனே இருப்பான்.

7. இரண்டாவது திருமணம், பலதாரமணம், காமக்கிழத்தி என பலரையும் தலைவன் திருமணம் செய்து கொண்டான்.

8. குழந்தை பெறும் வாய்ப்பு, சமூக மதிப்பு இன்மை, பாதுகாப்பு இன்மை முதலிய காரணங்களாலேயே பரத்தை தலைவியை விரோதி போல நினைத்தாளோ என்று எண்ணத்தோன்றுகிறது.

9. பரத்தையர் உறவை சங்க கால சமூகம் தண்டிக்கப்பட வேண்டிய குற்றமாக கருதவில்லை என்றாலும், இழிவாக எண்ணியதை உணரமுடிகிறது.

10. நீண்ட காலம் தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் தங்குவது தொடர்பாக கண்டிக்கும் பாங்கு சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது.

11. பிரிவாற்றாமையினால் தலைவி மிகவும் வருந்தினாலும் ஏன் பரத்தமை மேற்கொண்டாய் என நேரடியாக தலைவனிடம் கேட்கவில்லை தன் மன வேறுபாட்டை மட்டுமே உரைக்கின்றாள்.

12. வாயில்களிடம் கூட நேரடியாகக் கூறவில்லை.

13. பரத்தையைத் தலைவி 'மாசில் குறுமகள்' என்று கூறுவதிலிருந்து தலைவிக்கு பரத்தை மேல் கோபமில்லை என்பதும், அவர்களின் இந்த நிலைக்கு ஆண்களும் இந்தச் சமூதாயமுமே காரணம் என தலைவி எண்ணியதும் பெறப்படுகிறது.

14. தேவ கோட்டங்களைக் காணச் சென்ற தலைவனின் புதல்வனுக்கு பரத்தை அணிகலன்கள் அளிப்பதிலிருந்து, அவர்கள் பொருள் நாட்டம் உடையவர்கள் அல்லர் என்பது பெறப்படுகிறது.

15. பரத்தையர் ஒழுக்கம் சங்க காலத்தில் தண்டிக்கப்பட வேண்டிய குற்றமாகக் கருதப்படவில்லை எனினும் தவிர்க்கப்பட வேண்டும் என்பதையும் அது சமூதாயத்திற்கு அஞ்சி மேற்கொள்ளப்பட்டதாகவே காட்டப்படுகிறது.

16. அஃறிணை உயிரான குருவியினங்களும் கூட, பரத்தையர் பிரிவை விரும்பவில்லை என்பது தெரிய வருகிறது.

# அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம் இளம்பூரணர் உரை - 1097
2. மேலது கற்பியல், நூ.1120
3. மேலது கற்பியல், நூ. 1122
4. அகநானூறு 76
5. புறநானூறு 73
6. தொல்காப்பியம் இளம்பூரணர் உரை கற்பியல், நூ. 1133
7. மநுதர்மசாஸ்திரம் - III 46
8. ஆசாரக் கோவை 42
9. இலக்கண விளக்கம் 87
10. தொல்காப்பியம் இளம்பூரணர் உரை, கற்பியல், நூ. 1118
11. ஐங்குறுநூறு 292
12. கலித்தொகை 96
13. தொல்காப்பியம் இளம்பூரணர் உரை, கற்பியல், நூ. 1093
14. மேலது நூ 1097
15. அகநானூறு 36
16. மேலது 396
17. குறுந்தொகை 370
18. ஐங்குறுநூறு 21
19. அகநானூறு 1
20. நற்றிணை 20
21. ஐங்குறுநூறு 41
22. குறுந்தொகை 106

23. மேலது 218

24. ஐங்குறுநூறு 83

25. மேலது 71.

26. நற்றிணை 350

27. தொல்காப்பியம் பொருளதிகாரம் - கற்பியல், நூ. 6

28. நற்றிணை 380

29. அகநானூறு 36

30. மேலது 16

31. குறுந்தொகை 181

32. பரிபாடல் 19

33. கலித்தொகை மருதக்கலி 82

# ஊடல் தீர்க்கும் வாயில்கள்

6.0 முன்னுரை

6.1 தலைவன் தலைவிக்கு இடையே சிறு பிணக்கு

6.2 ஊடல் தீர்க்கும் வாயில்கள்

6.2.1 வாயில்களுக்குரிய சிறப்புப் பண்புகள்

6.3 ஊடல் தீர்க்கும் தோழி

6.3.1 தலைவியின் சார்பு நிலை

6.3.2 நின் மார்பை நோக்கி வாழ்பவள்

6.3.3 பழி உன்னையே சேரும்

6.3.4 யான் இறந்தாலே தீரும்

6.4 செவிலி

6.4.1 வாயில் நேர்தல்

6.4.2 சேரியிடம் செல்லல்

6.4.3 தலைவியின் இல்லம் செல்லல்

6.4.4 தலைவியின் இன்ப வாழ்வு

6.5 பார்ப்பான் கூற்றுகள்

6.6 பாங்கன் கூற்று

6.7 பாணர் - விளக்கம்

6.7.1 ஊடல் தீர்க்கும் பாணன்

6.7.2 பாணன் கூற்று நிகழுமிடம்

6.7.3 தலைவி பொருட்டு தலைவனிடம் தூது

6.7.4 தலைவனிடம் தூதாக வந்த பாணன்

6.7.5 தலைவன் பொருட்டு தலைவியிடம் தூது

6.7.6 பாணன் தலைவன் தேர் வரக்காணுதல்

6.7.7 தலைவனைக் கடியும் பாணன்

6.7.8 அகவாழ்க்கையில் பாணன்

6.7.9 பரத்தையிடத்து தலைவனைச் சேர்ப்பவன்

6.7.10 புலையன் எனத் திட்டுதல்

# ஊடல் தீர்க்கும் வாயில்கள்

## 6.0 முன்னுரை

ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் காதல் வாழ்க்கையில் பெண், ஆண் தனக்கு மட்டுமே உரியவன் என எண்ணுவாள். இத்தகைய மனநிலை ஆணுக்கும் இருக்கலாம். பெண் இப்படி எண்ணும்போது, ஆண் வேறு ஒரு பெண்ணை விரும்புகிறான் என தெரியவரும்போது, அவள் அவனிடம் ஊடுவாள். அதாவது சண்டையிடுவாள், பரத்தை ஒழுக்கம் புரிந்து தலைவன் மீண்டு வந்து இல்லம் புகுகையில், அவனோடு தலைவி வேறுபடும் பிணக்கு நிலை 'ஊடல்' எனப்படும். தலைவன் மேல் தலைவி ஊடல் கொண்டு நிற்பாள். அச்சமயம் இருவரையும் சேர்ப்பிக்க வேண்டி, தலைவியிடம் சென்று கூறுபவராகவும், தலைவனைத் தலைவியிடத்துச் செல்லாது தடுப்பவராகவும் 'வாயில்கள்' செயலாற்றுவார்கள். அத்தகைய வாயில்களைப் பற்றி ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

வாயிலோர் என்பதற்குத் தூதுவர், வாயில் காப்போர் என்பது பொருளாகும். தலைவனுக்கும், தலைவிக்கும் இடையே ஊடல் பிரிவு ஏதேனும் ஏற்பட்டால், அதனை நீக்கும் பொருட்டு செல்வதாகும். தூதுவர் என்பதற்கு சமாதானம் செய்யக்கூடியவர். வாழ்க்கையில் ஏற்பட்ட இன்னல்களைப் போக்குவதே தூதுவர் வேலையாகும்.

ஊடல், புலவி, துனி என்னும் சொற்கள் அகப் பாடலுள் ஊடலின் பண்பை விரித்துரைக்கும்

| | | |
|---|---|---|
| புலவி | - | மனவேறுபாடு (பொய்ச்சினம்) |
| ஊடல் | - | புலவி நீட்டம் |
| துனி | - | ஊடல் நீட்டம் |

புலவியின் முதிர்ச்சி ஊடல். ஊடலின் முதிர்ச்சி துனி.

## 6.1 தலைவன் தலைவிக்கு இடையே சிறு பிணக்கு

கலவிக்கு முன் உள்ள பிணங்கலானது அளவோடு, இருக்க வேண்டும் என்றும், அளவுக்கு மீறிடுமேயானால் அது, உணவில் அளவோடு போட வேண்டிய உப்பு அளவுக்கு மீறிய வகையில் போடப்படுவதோடு ஒக்கும் என்று தலைவி தன் ஊடலுக்குக் கட்டுப்பாடு விதித்துள்ளாள் என்பதை

> ''உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
> மிக்கற்றால் நீள விடல்''[1]

என்று திருக்குறள் குறிப்பிடுகிறது. காதலரிடையே நிகழும் இத்தகைய சிறு பிணங்குகள், அவர்களுடைய அன்பு மேலும் சிறந்து, கூடி மகிழ துணை செய்யும் என்பதாகும்.

> ''துனியும் புலவியும் இல்லாயின் காமம்
> கனியும் கருக்காயும் அற்று''[2]

காதல் வாழ்க்கையானது சிறு பிணக்கையும் கொண்டு அமைவதாக இருக்க வேண்டும்.

## 6.2 ஊடல் தீர்க்கும் வாயில்கள்

ஊடல் தீர்க்கும் வாயில்களுக்கு உரியவர்களாக பன்னிருவரைத் தொல்காப்பியர் குறிப்பிடுவார் என்பதை,

> ''தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
> பாணன் பாட்டி இளையர் விருந்தினர்
> கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
> யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப''[3]

என்ற தொல்காப்பிய நூற்பாவின் வழி அறியமுடிகிறது.

நம்பியகப்பொருள்விளக்கத்தில்,

> "கொளைவல் பாணன் பாடினி கூத்தர்
> இளையர் கண்டோர் இருவகைப் பாங்கர்
> பாகன் பாங்கி செவிலி அறிவர்
> காமக்கிழத்தி காதற் புதல்வன்
> விருந்து ஆற்றாமை என்று இவை ஊடல்
> மருந்தாய்த் தீர்க்கும் வாயில்கள் ஆகும்"[4]

என்ற நூற்பா தலைவனுள் கொண்ட ஊடலைத் தணிக்கும் வாயில்களாக இசையில் வல்லவனான பாணன், பாடினி, கூத்தர், இளையர், ஊடலைக் காணும் ஏனையோர், பாங்கர், பாகன், பாங்கி, செவிலித்தாய், அறிஞர், காமக்கிழத்தி, அன்பு விளங்கும் புதல்வன், புதியவர் ஆற்றாமை ஆகியோர் செயல்படுவர் என்று குறிப்பிடுகிறது.

வாயில்கள் எனப்படுவர், தலைவியின் இல்லற மாண்புகளைத் தலைவனுக்கு உரைத்தல், இல்லற மாண்புகளைத் தம்முள் தாமே கூறிக் கொள்ளுதல், ஆகிய இரண்டிடத்தும் கூற்றுக்கள் நிகழ்த்துவர் என்பதை

> "கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்
> மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
> விருந்துபுறந் தருதலுஞ் சுற்றம் ஓம்பலும்
> பிறவுமன்ன கிழவோள் மாண்புகள்
> முகம் புகல் முறைமையிற் கிழவோற்குரைத்தல்
> அகம்புகல் மரபின் வாயில்கட்குரிய"[5]

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் சுட்டியுள்ளார்.

### 6.2.1 வாயில்களுக்குரிய சிறப்புப் பண்புகள்

"வாயில்களுக்கே உரிய சிறப்புப் பண்புகளை எல்லாம் தொகுத்துக் கூறுகையில், எல்லா வாயில்களும் தலைவன் தலைவியரின் மகிழ்ச்சியைப் பொருளாகக் கொண்டு கூற்று நிகழ்த்த வேண்டும்"[6] என்றும், "தலைவனிடம் கடுஞ்சொல் கூற வேண்டுமெனில், நேரடியாய் கூறாது சிறைப்புறமாகவே கூறல் வேண்டும்".[7] அதே சமயம் "தலைவனுடைய

கொடுமைகளால் வருந்தும் தலைவிக்கு மருந்தாய் அமையும் எனில் கூறலாம்''[8] என்னும் மரபுகள் உள்ளன. வாயில்கள் கூற்றுக்கள் அவர் தம்முள்ளும் கேட்டற்குரியனவாகும்.

பரத்தையர் கூற்றும் ஊடல் தீர்க்கும் வாயில்களின் கூற்றும், தலைவியைக் கேட்பவளாகக் கருதிக் கூறாதக் கூற்றுக்கள் பயனிலவாகும்.

## 6.3 ஊடல் தீர்க்கும் தோழி

ஆண், பரத்தையை நாடிச் சென்றாலும், தலைவி அவனை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றே சமுதாயம் அவளுக்குக் கற்பித்திருக்கிறது என்று தோழி, தலைவியிடம் கூறி, ஊடல் நீங்குமாறு வேண்டினாள் என்பதை

> ''பரத்தமை தாங்கலோ இலென் என வறிது நீ
> புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை
> அதுபுலந் துறைதல் வல்லி யோரே
> செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்
> தாமாட் டுண்டு தமியராகித்
> வைகுந ராகுதல் அறிந்தும்
> அறியா ரம்மவ ஃதுடலு மோயே''[9]

என்ற பாடலிலிருந்து தலைவன் பரத்தையை நாடிச் செல்வதால், அவனுடன் ஊடல் கொள்வதால் ஏதும் பயனில்லை. அவ்வாறு ஊடல் கொண்ட பெண்களின், மனநிலை பாதிக்கப்படுவதுடன், சமைக்க அரிசி இன்றியும், குழந்தைக்குப் பால் இன்றியும், சுற்றத்தார் யாருமின்றியும், தனித்து நின்று வருத்தப்படுவதைக் கண்கூடாகக் கண்டும், நீ தலைவனிடம் ஊடுவது சரியல்ல என்பதால், ஊடல் தணித்து தலைவனை ஏற்றுக் கொள் என்று ஊடல் தீர்க்கும் வாயில்களாகச் செயல்பட்டாள் என்பது பெறப்படுகிறது.

இப்பாடலிலிருந்து பரத்தையொழுக்கம் அன்று கடியப்படாததாக இருந்தது என்பதை அறியமுடிகிறது. இத்துடன் பரத்தமை மேற்கொண்ட

தலைவனிடம், கோபம் கொண்டால் இழப்பு பெண்களுக்கே என்பதும் தீவிரமாக வலியுறுத்தப்படுகிறது.

### 6.3.1 தலைவியின் சார்புநிலை

தலைவி எதற்கும் தலைவனையே சார்ந்து நிற்கிறாள் என்பதை

''தாயுடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு
அன்னாய் வென்னும் குழவி போல
இன்னா செயினும் இனிது தலையளிப்பினும்
நின் வரைப்பினள் என் தோழி''[10]

என்ற பாடல்வரி மூலமாக மனைவி, கணவனையே முழுமையாகச் சார்ந்து நிற்கும் நிலையைக் காட்டுகிறது. இத்தகு பண்பாட்டையே 'கண்டார் இகழ்ந்தனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானை அல்லால் அறியா குலமகள்போல' எனப் பிற்காலக் குலசேகரபெருமானும் காட்டினார்.

''புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்
சொலத்தகு கிளவி தோழிக்குரிய''[11]

என்ற தொல்காப்பிய நூற்பாவின் மூலம், புலத்தலும் ஊடலும் தலைவன் தலைவியரிடையே உண்டாகும்போது, அவற்றை நீக்கும் பொருட்டு கூறும் சொற்கள் தோழிக்கு உரியனவாகும். இவை களவு, கற்பு என்னும் இரண்டிற்கும் பொதுவாக வரும்

''அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்''[12]

என்ற திருக்குறள் தன்னோடு பிணங்கியவரைத் தழுவி ஊடலைத் தணிக்க வேண்டும். பதிலுக்குத் தானும் ஊடினால், துன்பமடைபவர்களை மேலும் துன்புறுத்துவது போலாகும் என்று கூறுகிறது. இவ்வாறு கூறி ஊடல் தணிக்கும் வாயிலாகத் தோழி செயல்பட்டாள் என்பதை திருக்குறள் குறிப்பிடுகிறது.

மனைவி கையால் தொட்ட உணவு, வானவர் அமிர்தம் போல் இனிக்கிறது என்று கணவன் பாராட்டுவதாக தொல்காப்பியர் குறிப்பிடுவார்.

''ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது
வானோர்அமுதம் புரையுமால் எமக்கு''[13]

தலைவன் தலைவியை நோக்கி, எத்தகைய சுவையோடு கூடியதாயினும் உன் கைப்பட்டது, எனக்கு வானவர் அமிழ்தத்தை ஒக்கும் என்று கூறுவான் என்பது பொருள். தோழி தலைவனிடம், தலைவியின் மேல் உள்ள அன்பு குறைந்துவிட்டதோ என்று கூறுகிறாள். இதனை

''வேம்பின் பைங்காய் என்தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர் இனியே
பாரி பறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்
ஐய கற்றால் அன்பின் பாலே''[14]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

என் தோழியாகிய தலைவி, ''வேப்பங்காயை தந்தால் ஒரு காலத்தில் இனிய வெல்லக்கட்டி என்று பாராட்டினீர். ஆனால் இப்பொழுது பாரி வள்ளலின் பறம்பு மலையிடத்துள்ள தை மாதத்தில் குளிர்ந்த சுனை நீரைத் தந்தாலும் வெப்பமுடையது, உப்புச் சுவையுடையது என்று இகழ்கிறீர். உம் அன்பின் தன்மை எத்தகையது'' என்று தலைவனிடம் தோழி கூறுகின்றாள் என்பதை அறியமுடிகிறது.

தலைவியை தலைவன் திருமணம் செய்து கொள்ளும் முன், ஒரு பசுமாடு வைத்து, வருமானம் அதிகமின்றி வறுமைநிலையிலேயே வாழ்ந்து வந்தான். தலைவியைத் திருமணம் செய்த பின்னரே, பல மாடுகள் வாங்கி செல்வ நிலையில் வாழ்ந்து வருகிறான் என்றும் தலைவனின் இந்த செல்வ நிலைக்குக் காரணம் தலைவி வந்த நேரம், என்பதை தலைவன் நன்கு உணரவேண்டும் என்றும் தோழி கூறினாள்.

### 6.3.2 நின் மார்பை நோக்கி வாழ்பவள்

பரத்தையர் மனைக்கண் நெடுநாள் தங்கி, தன் மனைக்கு வந்த தலைவனிடம் தோழி, ''யாமையின் இளம் பார்ப்புகள் தன் தாயின் முகம் நோக்கியிருந்து வாழ்வு பெற்றாற்போல், நின் மனையாளும் நின் மார்பினை நோக்கியே வாழ்கின்றாள், நீ அதனை உணர்ந்து ஒழுகுவாயாக'' என்றாள்.

### 6.3.3 பழி உன்னையே சேரும்

தலைவியின் ஊடலைத் தீர்க்கும் வகையில் தோழி, இனிது ஆராயும் சான்றோர்கள் இல்லறப் பாங்கானது அன்பின் பாற்பட்டது என்று எண்ணாது, புணர்தலையே என்னும் பரத்தையர்பால் சாரும் தன்மையை இனி கை விடுவோம் என்று கருதிய தலைவன், நின்பால் இணக்கத்தோடு விளங்குவதற்கு மேற்கொண்டான். இத்தகு மருத நிலத்தலைவனை ஏற்றுக் கொள்ளவில்லையானால், அதனால் உண்டாகும் பழி நின்னையேச் சாரும் என்று தோழி தலைவியை நோக்கி ஊடலைக் கைவிடுமாறு கூறினாள் என்பது ஐந்திணை ஐம்பது 53வது பாடலின் வழி அறியமுடிகிறது.

### 6.3.4 யான் இறந்தாலே தீரும்

தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்து, தலைவியிடம் ஊடல் தீர்க்குமாறு தோழியிடம் வேண்டினான். தலைவி சினம் கொண்டு உடன்படாதவள் ஆயினாள். தோழி உள்ளங்கலங்கித் ''தலைவன் பரத்தையர் விருப்பத்தோடு, வீட்டிற்கு வராது இருக்கின்றான் அவ்வாறு வரினும் தலைவி அவனை ஏற்றுக்கொள்ளாள். இவ்விருவர் பகையும் யான் இறந்தாலே தீரும் போலும் என்று கூறினாள்'' என்பதை

> "இரு பெரு வேந்தர் பொரு களத்து ஒழித்த
> புன்னை விழுமம் போல
> என்னொடு கழியும் - இவ் இருவரது இயல்பே"[15]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

ஊடல் செய்வது என்பதும், புலவி கொள்வதும் தலைவிக்கு மட்டுமே உரியன அல்ல. சில இடங்களில் தலைவனும் ஊடல் புலவி கொள்வான். தலைவன் ஊடலைத் தணிக்கும் முயற்சி எல்லைக் கடந்த இடத்தும் புலவி கொள்வான். எனவே தலைவனைத் தலைவி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பாள்.

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்று விட்டு திரும்பி வந்த போது, அவனை ஏற்றுக் கொள்ள வேண்டி, தலைவியிடம் பலவாறாக பேசி அறிவுரை கூறினாள். தலைவனிடம் சென்று பரத்தையர் பிரிவு தவறு என்றும் களவுக் காலத்தில் தலைவியின் மேல் அன்புகொண்ட நீ கற்பு காலத்தில் தவறுகிறாயே என்றும் அறிவுரை கூறுகிறாள்.

## 6.4 செவிலி

தலைவியின் உயிர்த்தோழியாகிய தோழியின் தாய் செவிலி. தலைவி மீது மிக்க அன்பு கொண்டவளாகவும், தலைமக்கள் காதலை நற்றாய்க்கு அறத்தொடு நிற்பவளாகவும், உடன்போன தலைவியைச் சுரத்திடையே சென்று தேடித்திரிபவளாகவும், தலைவியின் இல்லற மாண்பைக் கண்டு வந்து, நற்றாயிடம் கூறுபவளாகவும் செவிலி செயல்படுகிறாள். தொல்காப்பியர் குறிப்பிடுகின்ற பன்னிரு வாயில்களுள் செவிலியும் ஒருவளாவாள்.

ஒருவருடைய கருத்தை முறையாக மற்றொருவரிடம் சரியாகக் கொண்டு சேர்த்தலும் ‘வாயில்’ என்பது தான். தலைவி தலைவன் மேல் அன்பு கொண்டதை தோழி, செவிலியிடம் கூற, செவிலி அதை நற்றாயிடம் கூற, நற்றாய் தந்தையிடம் கூறி இனிதாகத் திருமணம் நடந்தது.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டு திருமணம் செய்து, இனிய இல்லறம் நடத்தும் போது செவிலி, தன் மகள் நடத்தும் இனிய வாழ்வினைக் கண்டு வந்து மகிழ்ச்சியுடன் நற்றாயிடம் கூறுவாள்.

### 6.4.1 வாயில் நேர்தல்

வாயில் நேர்தல் என்பது தலைவன் பரத்தையிற் பிரிந்து சென்று, மீண்டும் தலைவியை நாடி வரும்போது, தலைவி ஊடல் கொண்டவிடத்து தலைவியைச் சமாதானப்படுத்தி, தான் வீட்டிற்குள் செல்ல தூதர்களைத் தலைவன் அனுப்புவான். தலைவன் சார்பாக தூதர்கள் தலைவியிடத்துச் சென்று தலைவனை ஏற்றுக்கொள், என்று வேண்டுவதே ‘வாயில் நேர்தல்’ ஆகும்.

தொல்காப்பியர் குறிப்பிடும் பன்னிருவாயில்களுள் சிலர், ஊடல் கொண்ட தலைவியிடத்துச் சென்று வாயில் நேர்தலை மேற்கொண்டுள்ளனர். ஆனால் செவிலி பன்னிருவாயில்களுள் ஒருவராகத் தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்டிருந்தாலும், ஊடல்தணிக்கும் வாயில்நேர்ந்ததாக சங்க இலக்கியத்தில் பாடல் எதுவும்இல்லை. செவிலி கூற்றாகத் தொல்காப்பியர் குறிப்பிடுவதிலும் ஊடல் காரணமாக வாயில் நேர்தலாகவும் குறிப்பிடவில்லை.

### 6.4.2 சேரியிடம் செல்லல்

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்ற பின், அவர்களைத் தேடி சேரியிடத்தும், சுரத்திடத்தும் சென்று தேடி அலைந்து வழியில் கண்டோரிடமும், அந்தணரிடமும் வினவுவாள். அவர்கள் தலைவி தலைவனுடன் சென்றது அறநெறியே என்று கூறியதை தோழியிடமும் நற்றாயிடமும் கூறுவாள்.

### 6.4.3 தலைவியின் இல்லம் செல்லல்

‘‘கற்புக் காலத்தில் தலைவன் மனை சென்ற செவிலி, அங்கு தன் மகளும் மருமகனும் ஒத்த அன்பினராய் கூடி, தம் புதல்வன் மழலைக் கேட்டும் விளையாட்டைக் கண்டும், யாழ் இசைக் கேட்டும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தமைக் கண்டு மகிழ்ந்து மீண்டு வந்து, தன் மகிழ்வை நற்றாயுடன் பகிர்ந்து கொள்வாள்’’.[16]

கணவனும் மனைவியும் கருத்தொருமித்தும், ஒத்த அன்பு கொண்டும் உலகம் போற்ற வாழ்வதே, இல்லறத்திற்கு அடிப்படையாதலின் தன் மகளும் மருமகனும் அங்ஙனம் வாழ்வது கண்டு செவிலி உவந்தாள். ''மங்கலமாம் மனை வாழ்வுக்கு நன்கலம் நன்மக்கட் பேறாதலின்'' இம்மைப் புகழையும், மறுமைப்பேற்றையும் உடன் வழங்கும் அப்பேற்றினைப் பெற்றுத் தன் மகள் வாழ்வது கண்டு மகிழ்ந்தாள் என்பதை அறியலாம்.

### 6.4.4 தலைவியின் இன்ப வாழ்வு

தலைவியின் இனிய இல்லறம் என்ற நிலையில், தலைவன் தலைவியை ஏமாற்றாமல் மணம் புரிந்தமை, தலைவனைத் தலைவி பேணுந்தன்மை, தலைவனின் குடிவறுமையை எண்ணி பொழுது மறுத்துண்ணல், மகனோடு இன்புற்றிருத்தல் ஆகியன அடங்கும்.

செவிலி தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் செல்கிறாள். அவள் தன் மகள் கணவனுக்கு வேண்டியவற்றை அவன் மகிழும்படி செய்வதைக் கூர்ந்து கவனிக்கிறாள் என்பதை

**''முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது, உடீஇ
குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்
தான்துழந்து அட்ட தீம்புளிப்பாகர்
இனிது எனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே''**[17]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

தீம்புளிப்பாகர் செய்கிறாள். கணவனும் இனிது எனக் கூறி உண்டான். இனிது எனக் கூறி உண்டலின், தலைவியின் முகம் மகிழ்வடைய செவிலி அவள் முகத்தில் கண்ட பொலிவினை கண்டு தானும் உவந்தாள்.

புதல்வனைத் தழுவிய தாயைத் தந்தை தழுவுதல், தாயும் தந்தையும் குழந்தையோடு முயங்கிக் கிடத்தல், தலைவன் மார்பில் மகன் விளையாடல் போன்ற காட்சிகளைக் கண்டு வந்து கூறினாள்.

தலைவியின் மனையற வாழ்க்கையைக் கண்டு பிறர்க்குத் தெரிவிக்கும் ஒரே அகத்துணைப்பாத்திரம் செவிலியே. தோழி இளையவளாய் இருத்தலின் அவள், தலைவி தலைவனோடு அடிசிலாக்கி இன்பவாழ்வில் அன்பு செலுத்தும் மனையற வாழ்க்கையைக் காண்பதில்லை. தோழி தலைவியோடு ஒத்த வயதினள். அவள் தலைவனோடு இன்புற்றுயிருத்தலை காண்பது பண்பாட்டுக்கு உரியதன்று. எனவேதான், சங்கப் புலவர்கள் தலைவி தலைவனுக்கு அடிசிலாக்கி, அமுதூட்டும் காட்சிகளையும், தலைவி தலைவனைத் தழுவி நிற்றலையும் செவிலி கண்டு, பிறந்தகத்தில் சொல்லுவதாகப் பாடுகின்றனர்.

அகத்திணை மாந்தர்களில் வேறு எவரும் தலைவியின் மனை வாழ்க்கையைப் பேசிலர். செவிலி ஒருத்தியே பேசுகின்றாள் என்பதை தெளிவாக்கியுள்ளன.

## 6.5 பார்ப்பான் கூற்றுகள்

பார்ப்பான் என்பான் நன்றும் தீதும் ஆராய்ந்து. உறுதிபடக் கூறுபவனாக அமைகின்றான் என்று பேராசிரியர் கூறுவார். தொல்காப்பியர் ''அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்'' என்று கூறியுள்ளார். பார்ப்பான் கூற்றுகளாகத் தொல்காப்பியர் ஆறனை மொழிவார். இக்கூற்றுகள் களவு, கற்பு ஆகிய இருவகைக் கைகோளிற்கும் பொருந்துவனவாய் உள்ளன.

1. ''தலைவனது காமமிகுதியைக் கூறும்போது
2. அவன் அதனின்று தெளிவடையுமாறு உரைக்கும்போதும்
3. தலைவனது புறத்தொழுக்கத்தைக் குறிப்பாக அறிந்து கூறும் போதும்
4. ஆவொடுபட்ட நிமித்தம் கூறும் போதும்

5. தலைவனைச் செலவு மேற்கொள்ளத் தூண்டும் போதும்

6. தலைவனைச் செலவழங்குமாறு கூறும்போதும்''[18]

பார்ப்பான் கூற்று நிகழ்த்துவான்.

''பார்ப்பான், அறிவர் என்று சொல்லப்பட்ட இருவர் கூற்றும், எல்லோரும் கேட்கப் பெறுவர்''[19].

## 6.6 பாங்கன் கூற்று

தலைவனின் தோழன் பாங்கன், தலைவன் தலைவியை கண்டு அவள் அழகில் மயங்கி, காமுற்று அவளைச் சேரமனம் துடித்துக் கொண்டிருக்கும் போது, தலைவியைப் பற்றி முதலில் பாங்கனிடம் கூறுவான்.

''மொழி எதிர் மொழிதல் பாங்கற்கு உரித்தே''[20]

என்றும்

''குறித்தெதிர் மொழிதல் அஃகித் தோன்றும்''[21]

என்றும் தொல்காப்பியர் கூறுவார்.

தலைவன் கூறியவழி எதிர்கூறுதல் பாங்கற்குறித்து. எதிர்கூறுதலாவது மாறுபடக் கூறுதல். அவை களவுக் காலத்துக் கழறல், கற்புக் காலத்துப் பரத்தையர் பிரிவுக்கு உடன்படாது கூறலும், இவை போல்வனவுமாகும்.

எதிர்மொழிதல் என்பது, தலைவனது கருத்துக்கு உடன்படாது மாறுபட்டு கூறுதலாகும். அவை களவுக் காலத்தில் தலைவன் உரிய மணத்தை விரைவில் முடிக்கும் வகையில் பொருள் ஈட்டும்படியும், கற்புக் காலத்தில் பரத்தையர்பிரிவுக்கு உடன்படாமையும் பாங்கன் எதிர்மொழிதலுக்குக் காரணமாகும்.

உயர்நிலையில் உள்ளவன் தலைவன் என்பதால் அவன் பெரும்பாலும் நன்னெறியின்பால் விளங்குதலே பெறப்படுகிறது. ஆதலால் அவன் தீய ஒழுக்கத்தின்பால் செல்லுதல் இல்லை என்பதால் எதிர்மொழி கூறுதலும் எல்லாக் காலத்திலும் தோன்றுதல் இல்லை.

தலைவன் தன் தலைவியைக் கண்டதால் மிக்க காமத்துடன் இருப்பதாகவும், அவள் சிறந்த பேரழகி என்றும் பாங்கனிடம் குறிப்பிட்டான்.

காமத்தின் இழிவினைக் கூறி இடித்துரைத்த பாங்கனுக்கு, காமத்தின் ஆற்றலை உலகியல்பை வைத்து, காமத்தை உலகினர் காமம் என இழித்துக் கூறுகின்றனர். காமம் என்பது புறத்தே நின்று தாக்கும் தெய்வமும் அன்று. உடலை மெலிவிக்கும் நோயும் அன்று. அது பேயும், நோயும் போலக் காணப்படாததாய்ச் சிறுகிப் பெருத்தலும், பெருகிச் சிறுத்தலும் உடையதன்று. காமம் பெருகி நீண்ட காலம் நிற்கும் இயல்புடையதாகும்.

பாணன் முதலாயினர்க்குத் தலைமகன் கொடுமை கூறி வாயில் மறுத்த தலைமகள் கழறிய பாங்கற்கு வாயில் நேர்வாள்.

பரத்தையரோடு உறவுகொண்டு வாழ்ந்த தலைமகன் தன் மனையாளை மீண்டும் கூட விரும்பி, பாணன், விறலி முதலியோரைத் தூதுவராக அனுப்பினான். தலைமகள் அவர்களுக்கு வாயில் மறுத்தாள். அது தகாது என்று கடிந்து கொண்டான் தலைவனின் நண்பன். அதற்கு தலைவி, ஊரனின் தீயொழுக்கத்திற்கு நாணி அதனைப் பிறர் அறியாதிருக்க எண்ணி, அவன் நல்லவன் என்று யாம் கூறி வருகின்றோம். ஆனால் எம் மெல்லிய தோள்களோ அவன் நல்லவன் அல்லன் கொடியவன் எனத் தம் மெலிவினால் தூற்றுகின்றன என்று கூறினாள் என்று ஐங்குறுநூறு 11வது பாடலின் வழி ஊடல் தீர்க்கும் வாயிலாக பாங்கன் செயல்பட்டுள்ளான் என்பது தெரிகிறது.

## 6.7 பாணர் - விளக்கம்

பாணர் என்பார் பாடுபவர். இவர் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் என பலராவர். யாழில் சீறியாழ், பேரியாழ் முதலிய பலவகைகள் உண்டு. இவ்வகையாழைக் கருவியாகக் கொண்டு இசைக்கும் காரணத்தால், முறையே சிறுபாணர், பெரும்பாணர் என்று வழங்கப்படுவர். பாணர்கள் தம் கையில் தாங்கிச் சென்ற யாழின் வருணனையை பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை, பொருநராற்றுப்படை போன்ற நூல்களில் காணலாம்.

பாணர் தலைவனின் நண்பன். இசையில் வல்ல இம்மாந்தர் ஊர் ஊராகச் சென்று ஆடல், பாடல் நிகழ்த்தியும். விழாக்காலங்களில் தமது கலைத்திறமையைப் புலப்படுத்தியும், மக்கள் ஆதரவையும், செல்வந்தர்கள் ஆதரவையும், மன்னர்கள் ஆதரவையும் பெற்று வாழ்ந்து வந்தார்கள்.

போர்க்களத்தே வெற்றி பெற்ற மன்னவனை பாணர், வென்ற களத்திலேயே பாடுவர். இதற்கு 'களவென்றி' எனப்படும். அதனைப் பாடுவோர் 'களம் பாடுவோர்' எனப்பட்டனர்.

பாணனும் ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒருவன்.

### 6.7.1 ஊடல் தீர்க்கும் பாணன்

பரத்தையிடத்தினின்றும் மீண்ட தலைவனுக்காக, தலைவி பால் சென்று குறை நயந்து வாயில் வேண்டுவான். தலைவன் தலைவியைப் பிரிந்து, சேட்புலத்து உறையும் போது, தலைவிபால் திரும்ப வேண்டும் என்பதை நினைப்பூட்டுவான். தலைவன் வருகையைத் தலைவிக்கு உணர்த்துவான்.

### 6.7.2 பாணன் கூற்று நிகழுமிடம்

பாணன் கூற்று நிகழுமிடங்களாக இரண்டு உள்ளன என்பதை

> ''நிலம் பெயர்ந்துரைத்தல் அவள்நிலை உரைத்தல்
> கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய''[22]

என்ற தொல்காப்பிய நூற்பா மூலம் அறியமுடிகிறது.

1. தலைவியின் நிலையை வினை செய்யுமிடத்து தலைவனிடம் கூறுமிடத்தும்
2. தலைவனது வரவினை முன் கூட்டியே, தலைவிக்கு உரைக்கும் இடத்தும் கூற்று நிகழும்

தலைவனுக்குத் தோழனானவர்களில் பாணனும் ஒருவன். தலைவன் தலைவியரின் இன்ப துன்பத்தில் பங்கு பெறுபவன். தலைவன் இன்பமாக இருந்தால் தான், பாணன் மகிழ்ச்சியாக இருக்க முடியும். தலைவனது துன்பத்தை நீக்க முயற்சிப்பது பாணனின் கடமையாகும். இருவரின் துன்பமும் பாணனைத் தாக்குகிறது.

### 6.7.3 தலைவி பொருட்டு தலைவனிடம் தூது

தலைவனைப் பிரிந்ததால் தலைவி வருந்தியிருந்தாள். அவள் நிலையினைக் கண்ட பாணன் மிகவும் வருந்தினான். கார்காலத்து மாலைப் பொழுதின் கண்ணும் வராவிட்டால், காலைப் பொழுதில் எப்படி ஆற்றுவேன் என்று தலைவி கூறியதும் பாணன் பதில் சொல்ல முடியாத துன்பம் அடைகின்றான். பாணன் தனக்கு துன்பம் வந்தால், யாழை இசைப்பது மரபாதலின் பாணனும் யாழெடுத்து இறைவனை வாழ்த்திப் பாடத் தொடங்கினான். தலைவி பொருட்டு தலைவனிடம் தூது செல்ல விரும்பினான். இதைக் கேட்ட தலைவி மகிழ்ந்தாள்.

சங்க முல்லைப் பாடல்கள் பலவற்றில், தலைவி பாணனிடம் கூறி வருந்துவதும், தோழியிடம் கூறி வருந்துவதும் உண்டு. தலைவியின்

வருத்தம் கண்டு பெறாத பாணன், தலைவனிடம் தூது செல்வதும் கூறப்பட்டுள்ளன என்பதை

"பலர் புகழ் சிறப்பின் நும் குரிசில் உள்ளிச்
செலவு நீ நயந்தனை ஆயின் மன்ற
இன்னா அரும்படர் எம் வயின் செய்த
பொய் வலாளர் போல
கைவல் பாண - எம் மறவாதீமே"[23]

என்ற பாடலில் தலைவி தன் வருத்தம் கூறி, பாணனை வினவுவது கருதத்தக்கது. தலைவியின் வாடிய தோளும், நலனிழந்த கண்களும் நோக்கி, பாணன் பெரிதும் புலம்பியதாக ஐங்குறுநூறு 475 வது பாடலின் வழி அறியமுடிகிறது.

### 6.7.4 தலைவனிடம் தூதாக வந்த பாணன்

தலைவன் வினை முடியாமல் பாசறையில் தங்கியிருந்ததால், தலைவி பிரிவாற்றாது வருந்தியதைக் கண்ட பாணன், தலைவனிடம் தூதாக வந்தான். தலைவனிடம் சென்ற பாணன், "உன்னுடைய பிரிவினால் தலைவி மிகவும் வருந்தி எப்பொழுதும் அழுதுகொண்டேயிருக்கிறாள்" என்று கூறினான்.

### 6.7.5 தலைவன் பொருட்டு தலைவியிடம் தூது

மன்னனுக்குப் போர்த் துணையாகச் சென்ற தலைவன், தலைவியிடம் கூறிச் சென்ற பருவத்தே திரும்பிவர இயலாததால், பாணனைத் தலைவியிடம் தூது அனுப்பினான். சிறிது காலம் பொறுத்திருக்க வேண்டும் என்றும், விரைவில் வந்து விடுவேன் என்றும் கூறினான்.

தலைவன் வராவிட்டாலும் அவன் அனுப்பிய தூது வந்தால், நான் சிறிது ஆற்றியிருப்பேன் என்று தலைவி விரும்புவாள் என்பதை தலைவனும் தெரிந்திருந்தான்.

### 6.7.6 பாணன் தலைவன் தேர் வரக் காணுதல்

பிரிவினால் தலைவி வருந்த, பாணனும் தலைவனிடம் தூது வர, சிறிது காலம் பொறுத்திருந்தால் எம் தேர் வருதலைக் காணலாம் என்று கூறக் கேட்டு வந்தான்.

> **''. . . . . .**
> **அவர் திறம் செல்லேன் கண்டனென் யானே**
> **வீடு விசைக் குதிரை விலங்கு பரிமுடுக**
> **கல் பொருது இரங்கும் பல்ஆர் - நேமிக்**
> **கார் மழை முழுக்கு இசை கடுக்கும்**
> **முனை நல் ஊரன் புனை நெடுந்தேரே''[24]**

என்ற பாடல் வரி மூலம், தலைவனுடைய தேரினை யான் கண்டேன். எனவே தலைவன் விரைவில் வந்து விடுவான் என்று தலைவியிடம் கூறினான் என்பது பெறப்படுகிறது.

### 6.7.7 தலைவனைக் கடியும் பாணன்

தலைவன் ஒருவன் வினைவயிற் பிரிந்து சென்று பாசறையில் தங்கி விடுகின்றான். இதனால் அவன் மனைவி அழுது புலம்பி கண்ணீர் வடிக்கின்றாள். இது கண்ட பாணன், தலைவனிடம் சென்று அவன் மனைவியின் நிலையை எடுத்துரைக்கின்றான். எனினும் தலைவன் அதைக் காதில் வாங்கவில்லை.

இதைக் கண்ட பாணன் மனைவியின் கண்ணீர் பற்றி நீ கவலைப்படாததால், ''யான் நினக்கு பாணரும் அல்லேம், எமக்கு நீயும் குரிசிலை அல்லை'' என்று கடிந்துரைக்கின்றான் என்பதை

> **''நினக்கியாம் பாணரும் அல்லேம் எமக்கு**
> **நீயும் குரிசிலை அல்லை மறதோ**
> **நின் வெங் காதலி தன் மனைப் புலம்பி**
> **ஈரிதழ் கேட்டு மருளா தோயே''[25]**

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 6.7.8 அக வாழ்க்கையில் பாணன்

ஊடல் தணிக்கும் வாயில்களுள், பாணனும் ஒருவன் என்பதைத் தொல்காப்பியத்திலிருந்து பெறப்படுகிறது. பரத்தையர் தொடர்பிற்குத் துணையாவான் என்று யாண்டும் சுட்டினாரிலர். ஆனால் தலைவியும் தோழியும், பாணனைக் கடிந்து உரைப்பதினின்றும் பரத்தையர் தொடர்பிற்கு இவர்கள் தொடர்பும் துணையாயினமை பல காரணிகளால் அறியப்படுகிறது.

''வெகுண்டனள் என்ப பாண''[26]

என்று பரத்தை வெகுண்டதைத் தலைவி சுட்டுவாள்.

''அம்ம வாழி பாண எவ்வைக்கு
எவன்பெரி தளிக்கும் என்ப''[27]

தலைவன் தலைமகட்குத் தலையளி செய்தான் எனப் பரத்தைக் கூறினாள்.

''யாணர் ஊரை நின்பாண்மகன்
யார் நலம் சிதையப் பொய்க்குமோ இனியே''[28]

பாணன் தன் முயற்சி நிறைவேறுவதற்காகப் பல தடவை தலைவியிடத்தே சூள் உரைத்தனை என்பதும், அவை பொய்ச்சூள் என்பதும் மேலை அடிகள் உணர்த்தி நிற்கும்.

### 6.7.9 பரத்தையிடத்து தலைவனைச் சேர்ப்பவன்

பரத்தையிடத்துத் தலைவனைக் கொண்டு சேர்ப்பவன் பாணன் என்பதை, தலைவியும் தோழியும் எண்ணினர். இதற்கு சான்றாக சில பாடல்களில் பெறப்படுகிறது. அவற்றுள் சில

''தண்டுறை யூரன் திண்டார் அகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
பரிவோடு வரூஉம் பாணன்''[29]

என்ற பாடலடி பொருந்தும். அதையே தொழிலாக உடையவன் அல்லன்.

நட்புக் காரணமாகத் தலைமகனது விருப்பத்தை நிறைவேற்றப் பாணன் பரத்தையிடத்துச் சென்றனன் என்பதே பொருந்தும். அதையே தொழிலாக உடையவன் அல்லன்.

ஊடல் தணிப்பதன் காரணமாக தலைமகனுக்கு வாயிலாகத் தலைவி பால் தூது செல்லும் தொழிலும் பாணனுக்கு உண்டு.

### 6.7.10 புலையன் எனத் திட்டுதல்

தலைவன், பாணன், புலைத்தி, அந்தணன் ஆகியோர் துணையோடு பரத்தையை அடைந்து இன்பம் பெற்றான் என்பதை கலித்தொகை 72வது பாடல்வழி அறியமுடிகிறது. இதனால் ஊடல் கொண்ட தலைவி பாணனை 'புலையன்' என்று கூறி திட்டுகிறாள் என்பதை

> ''.....
> புதுவன ஈகைவளம் பாடி காலின்
> பிரியாக் கவி கைப்புலையன் தன்யாழின்
> இருத்த செவி சாய்த்து இனி இனிப்பட்டன''[30]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

காமக்கிழத்தியும் பாணனை, 'புலையன்' என்று கூறி திட்டுகிறாள் என்பதை

> ''ஒலி கொண்ட கம்மையான் மண மனை குறித்து எம்இல்
> பொலிக எனப்புகுந்த நின் புலையனைக் கண்ட யாம்''[31]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

பாகனும் சேரிப்பரத்தையர் தொடர்புக்குத் தலைவனோடு துணைபோகக் கூடியவர்கள் என்பதை கலித்தொகை 68வது பாடல்வழி அறியமுடிகிறது. ''முற்பகலிலே ஒருத்தியுடன் கூடியிருந்தும், நண்பகலிலே அவளை விட்டுப் பிறரிடம் சென்றுவிட்டு, பிற்பகலிலே வேறொருத்தியைத் தேடுகின்ற உன் நெஞ்சத்தாலே நீயும் பித்தேறினாய்

உன்னை அங்கு அழைத்துச் சென்றதால் பாகனும் பித்தேறினான், தேரும் பித்தேறியது'' என்று காமக்கிழத்தி கூறியதாக கலித்தொகை 74வது பாடல் வரிகள் தெளிவாக்குகிறது.

### 6.7.11 கணவன் என்னும் உரிமை

மருத நிலத்தலைவன் என்னை மணந்ததன் வகையில் கணவன் என்னும் உரிமை கொண்டனன், அது ஒன்றே எனக்குப் போதும். அவன் எனக்குத் தனியாக அருள்செய்ய வேண்டியதில்லை என்று பரத்தையர்பால் சென்ற தலைவன் தன், மனைவியுடன் கூடுதற்கு வாயிலாக வந்த பாணனை நோக்கி தலைவி வாயில் மறுத்துரைத்தாள்.

### 6.7.12 தலைவன் மகிழ்ந்து பாணனிடம் உரைத்தது

பண்கள் பலவற்றை யாழில் இசைத்துப்பாடும் பாணனே, மேலாக எண்ணும் போது யாது ஒன்றும் இல்லை. ஆயினும் நன்கு ஆராய்ந்து பார்க்கும் போது, எனக்கு இன்பத்தை அளிக்கும் தலைவிக்கு ஒப்பானவரை எண்ணும் போது, கடல் சூழ்ந்த உலகில் ஒருவரையும் காணமுடியாது. நடுகல்லில் பெயர் சேராத வெற்றி மேவும் தேவ மாதருள் யாராவது இருப்பாரானால், இவளுக்கு ஒப்பாகலாம் என்று தலைவியின் பெருமையை, தலைவன் தலைவியோடு கூடி மகிழ்ந்ததை பாணனிடம் உரைத்தான்.

### 6.7.13 காமக்கிழத்திக்கும் ஊடல் தீர்ப்பவன்

தலைவன் தலைவிக்கு ஊடல் தீர்ப்பவன் பாணன் அதுமட்டுமல்லாமல் காமக்கிழத்திக்கும், பரத்தையர்க்கும் ஊடல் தீர்க்கும் வாயில்களாய் பாணன் செயல்பட்டுள்ளான் என்பதை சங்க இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது.

தலைவன் பரத்தையரிடம் சென்று வந்ததை அறிந்த காமக்கிழத்தி ஊடிய போது பாணன், ''உன்னை விட்டு அவன் பரத்தையர் எவரிடத்தும் செல்வதில்லை. சென்றால் அவன் போகும் இடத்தை உனக்குச் சொல்லாது

மறைப்பேனோ, என்று கூறி யாழாகிய தெய்வத்தோடும், பல தெய்வங்களையும் கூட்டி பல சூளும் செய்தனன் என்று கூறுவதிலிருந்து பாணன் ஊடல் தணிக்கும் வாயிலாகச் செயல்பட்டான் என்பதை

''மடுத்து அவன் புகுவழி மறையேன் என்று யாழொடும்
எடுத்துச் சூள்பல உற்ற பாணன் வந்தீயான் கொல்''[32]

என்ற பாடலடி தெளிவாக்குகிறது.

### 6.7.14 பரத்தையரிடம் தூது சென்ற பாணன்

தலைவன் பொருட்டாக தலைவியின் ஊடலைத் தீர்க்க, பாணன் தூது சென்றான். காமக்கிழத்தியின் ஊடலைத் தீர்க்கவும் தூதாகச் சென்றான். மனையோள் மட்டும் காமக்கிழத்தி மாட்டும் நிகழும் புணர்ச்சியும் ஊடலும் பரத்தையர் மாட்டும் நிகழும் என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

தலைவன் ஒரு காதற் பரத்தையைக் கூடிப்பின், அவளைக் கைவிட்டு அயற்பரத்தையிடம் சென்றதால், காதற்பரத்தை ஊடல் கொண்டாள். அவள் ஊடலைத் தணிக்க, தலைவன் பாணனைத் தூதாக அனுப்பினான். தூதாக வந்த பாணனிடம் காதற்பரத்தை, ''நின் தலைவன் எம் சேரியில் வந்து என் நெஞ்சத்தைப் பற்றிக் கொண்டான். இப்போது சென்றுவிட்டான். அதனால் என் அன்னை சினமுடையவள் இரங்காது தண்டிக்கவும் செய்வாள். அதனால் அவன் நகைத்தற்குரியவன் ஆவான் என இகழ்ந்து கூறினாள்.

தலைவன் வினைவயிற் பிரிந்து சென்ற போது, தலைவி மிகவும் வருந்தி இருந்தாள். பாணன் தலைவியின் பொருட்டு, தலைவனிடம் தூதாக வந்த போதும், தலைவன் விரைவில் வருவேன் என்று கூறியக் கருத்தை தலைவியிடம் கூறும்போது, தலைவி இன்பம் அடைந்தாள். தலைவன் வருவதை முன் கூட்டியே தலைவியிடம் கூறியபோது, தலைவியும்

தோழியும் சேர்ந்து பாணன் கருத்தை ஏற்றுக்கொண்டு, இவன் நன்றாகப் பேசுகிறான் விருந்து பெறக் கூடியவன் என்று பாராட்டினார்கள்.

தலைவன் பரத்தையிடம் சென்று, வாயில் நேர்வித்தல் பொருட்டு, தூதாக வந்த போது, பாணனைப் தலைவி, புலையன் என்று திட்டுகிறாள். முன்பு பாணன் தலைவன் பொருட்டு தலைவியிடம் தூதாக வந்த போது, அதை விருப்பத்துடன் ஏற்றுக்கொண்ட தலைவி, தலைவனின் பரத்தையர் பிரிவு தனக்குத் துயரம் தருவதால் பின்பு வாயில்நேர்தல் பொருட்டு வந்த பாணனைத் திட்டுகிறாள்.

## 6.8 பாடினி

வெற்றி பெற்ற மன்னர் மகிழ, பாண்சாதி மகளிர் உழிஞை திணையில் புகழ்ந்து பாடியதைப் பதிற்றுப்பத்து கூறுகிறது. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனை, மகளிர் யாழிசைக் கூட்டி பாலைப்பண் இசைத்துப் பாடினர். இதனை,

> ''வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர்
> தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
> பணியா மரபின் உழிஞை பாட
> இனிது புறந்தந்தவர்''[33]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. பாடினி ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒருவராக தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்டிருந்தாலும், வாயில் நேர்தலாக பாடினி செயல்பட்டதற்குச் சான்றாக சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படவில்லை.

## 6.9 இளையர் கூற்றுகள்

தலைவனுக்கு அமைந்த தோழர்கள் பலராவர். அவர்களே இளையர் என்று கூறப்படுகின்றனர். இளையர்க்குரிய கூற்றுகளாக ஏழு உள்ளன என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

''ஆற்றது பண்பும் கருமத்து வினையும்
ஏவல் முடிவும் வினாவும், செப்பும்
ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும்
தோற்றஞ் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க் குரிய கிளவி யென்ப''[34]

என்றும்

''உழைக்குறுந் தொழிலுங் காப்பும் உயர்ந்தோர்க்கு
நடக்கையெல்லா மவர்கட் படுமே''[35]

என்றும் கூறியுள்ளார்.

வினைமுடித்து மீளும் தலைவன் கருத்துணர்ந்து, இனித் தலைவி வருத்தம் தீர்வாள் என மகிழ்ச்சியால் கூறுவதாக ஒரு பாடலும், தலைவனின் ஏவலர்கள் தலைவியிடம் விரைந்து செல்லல் வேண்டும் என்பதாக அகநானூற்றில் ஒரு பாடலும், வினை முடித்துத் திரும்பிய தலைவன் தன்மனம் போல விரைந்து தேரினைச் செலுத்திய பாகனைப் பாராட்டி இல்லம் புகுந்தமையும், அவன் வரவால் தலைவி மகிழ்ச்சி எய்தியதையும் இளையர் தம்முள்கூறி மகிழ்ந்ததாக அகநானூற்றில் மற்றொரு பாடலும் புனையப்பட்டுள்ளன.

பன்னிரு வாயில்களுள் ஒருவராக இளையர் தொல்காப்பியத்தில் கூறப்பட்டிருப்பினும், அவர்கள் ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒருவராகச் செயல்பட்டமைக்கு சங்க இலக்கியத்தில் சான்றுகள் இல்லை.

## 6.10 விருந்தோம்பல் - விருந்தினர்

சங்ககால மக்கள் விருந்தோம்பல் செய்வதைத் தங்கள் வாழ்க்கையில் கடமையாக கருதியிருப்பதைப் பல இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. தலைவி தலைவனிடம் ஊடி இருந்தாலும், வீட்டிற்கு விருந்தினர் வந்தால் ஊடலை வெளிக்காட்டாது விருந்தோம்பல் செய்வாள் என்பதால், விருந்தினர்களை ஊடல் போக்கும் வாயில்களாக கொள்ளலாம்.

இல்வாழ்க்கையில் வரும் விருந்தினரை ஓம்புவதும், சுற்றத்தாரை உபசரிப்பதும், இரப்பார்க்கு ஈதலும், முக்கிய அறமாகும். விருந்தினரை இன்முகம் கொண்டு வரவேற்று, அவர்களுக்கு இனிய உணவை ஆக்கி மகளிர் விருப்புடன் படைத்தனர், என்பதை

''விருந்து அயர் விருப்பொடு வருந்தினள் அசைஇய
முறுவல் இன்நகை காண்கம்''[36]

''நீர்வார் புள்ளி ஆகம் நனைப்ப
விருந்து அயர் விருப்பினள் வருந்தும்''[37]

என்ற அடிகளால் பெறப்படுகிறது. இரவில் விருந்தினர் வந்தால் கூட அவர்களை உபசரிப்பதற்கு மகளிர் பின்னடைவது இல்லை என்பதும் பெறப்படுகிறது.

''எல்லி வந்த நல்இசை விருந்திற்கு
கிளர் இழை அரிவை நெய்துழந்து அட்ட
விளர் ஊன் அம்புகை எறிந்த நெற்றி
சிறு நுண் பல்லியர் பொறித்த
குறுநடைக் கூட்டம் வேண்டுவோரே''[38]

வந்த விருந்துக்காகச் சோறு ஆக்கியதனால் வியர்வை வழிவதையும், இரவென்றும் பாராது விருப்புடன் உபசரிப்பதையும் இப்பாடலில் காணமுடிகிறது.

தமிழர் தம் பண்பாட்டு மரபுகளுள் விருந்துபேணுதல் குறிப்பிடத்தக்கது. வள்ளுவர் ''விருந்தோம்பல்'' என்ற அதிகாரத்தை அன்புடைமைக்கு அடுத்து வைத்துள்ளார். ஊடல் தீர்க்கும் வாயில்களுள் விருந்தினர் வருகை ஒன்றாகும்.

கண்ணகி கோவலனிடம், ''நீ என்னைப் பிரிந்திருந்தமையின் விருந்தினரைப் பேணும் வாய்ப்பை இழந்தேன்'' என்று கூறினாள்.

அசோக வனத்தில் சிறைப்பட்டிருந்த சீதை ராமன் தன்னைப் பிரிந்து ''விருந்து கண்ட போது என்னுறுமோ'' என்று வருந்தினாள் எனவும்

கூறியுள்ளமை, தொல்காப்பியர் நெறிப்பட்டு தமிழ்ப் பெண்களின் இல்லறக் கடமையை உணர்த்துகின்றன.

பரத்தையிற் பிரிந்தவன் தலைவியின் ஊடல் தணியப் பெறானாய், விருந்தினர் வர அவரொடு புகுந்தான். அந்நிலையில் அவள் தன் ஊடலை மறைத்து விருந்து பேணினாள். இது கண்ட தலைவன் விருந்தினர்வரின் முகம் திரிதல் பண்பு அன்றாதலின் இன்னகையோடு நோக்குவாள். அதனால் ஊடல் தீர்வாள் என்பதனால் விருந்தினரை வாயில்களாகக் கொள்ளலாம்.

தலைவி தலைவனிடம் ஊடல் கொண்டிருக்கும் போது அதை அறிந்த தலைவன், தான் வரும்போதே தன்னுடன் விருந்தினர்களையும் அழைத்து வருவான். விருந்தினரை எதிர்சென்று வரவேற்கும் முறையினால் நாளும் புலவியை மறப்பேன் என்றாள் தலைவி.

இதனால் தலைவியின் இல்லறப்பண்பு அவள்தன் செயலால் உயர்ந்து நிற்பதைக் காண இயலும்.

## 6.11 கூத்தர் கூற்றுகள்

கூத்து நிகழ்த்துபவரே 'கூத்தர்' என்று அழைக்கப்படுவர். இக்கூத்தரிடத்து நிகழும் கூற்றுகளாகத் தொல்காப்பியர் கூறுவன பத்து. இக்கூற்றுகள் யாவும் கற்பில் மட்டுமே நிகழ்வன. எனவே கற்பிற்கூற்றுக்கு மட்டுமே கூத்தர் உரியவராகின்றனர்.

> "தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்
> பல்லாற்றானும் ஊடலில் தகைத்தலும்
> உறுதி காட்டலும் அறிவுமெய்ந் நிறுத்தலும்
> ஏதுவின் உரைத்தலும் துணியக் காட்டலும்
> அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன"[39]

என்றும்,

"நிலம் பெயர்ந் துரைத்தல் அவள் நிலை உரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய"[40]

என்றும் கூறுவார்.

பல்லாற்றானும் ஊடலிற் தகைத்தலும் என்பது பலநெறியானும் ஊடலினின்று தலைமகளை மீட்டல், அஃதாவது இவ்வாறு செய்தல் குற்றமென்றாலும் அன்புடையார் செய்யாரென்றானும் மனைக்கிழத்தியர் செயலன்று என்று பலவாறாகக் கூறி ஊடல் தீர்க்கும் வாயில்களாக செயல்பட்டனர்.

தலைமக்களிடையே பூசல் நிகழ்ந்துழி, தவறுகளைச் சுட்டிக்காட்டித் தெளிவிக்கும் உரிமை கொண்ட கூத்தர் தலைவன் விடுக்க, தலைவிபால் வந்த பொழுது தலைவன் ஒழுகலாறுகளைக் கூற, வெறுப்பு கொண்ட தலைவி தலைவனையும் அவன் வாயில்களையும் இகழ்ந்து கூறினாள்.

## 6.12 விறலி

பன்னிரு வாயில்களுள் விறலியும் ஒருவள். தலைவன் பரத்தையர்பால் சென்றதனால் தலைவி ஊடல் கொண்டிருந்தாள். தலைவியின் ஊடலைத் தீர்க்கத் தலைவன் விறலியைத் தூது அனுப்பினான். தலைவியிடத்துச் சென்ற விறலியைத் தோழி "இவ்விறலியே தலைவனைப் பரத்தையிடத்துச் சேர்த்தவள் என்னும் கருத்துடன் ஆயத்தாரிடம், இவ்விறலி நம் தலைவனை மற்றுமொரு பரத்தை பால் சேர்க்க வந்தனை நாம் நம் தலைவனைப் பாதுகாத்துக் கொள்வோம்" என்று கூறினாள்.

வாயில் வேண்டி வந்த விறலிக்கு, தலைவி விறலி கேட்குமாறு தோழியிடம், தலைவன் பல பரத்தையரை மணந்து கொள்வதில் பெருவிருப்பம் உடையவனாக உள்ளான். அதனால் வருத்தப்பட்ட என் கண்கள் நீரைப் பொழிந்தன. தோள்கள் மெலிந்தன. வளையல்கள் நெகிழ்ந்து கழன்று வீழ்ந்தன. என் நிலை இவ்வாறாக இருக்கவும் நீ ஊடல்

நீங்கி தலைவனை ஏற்றுக் கொள் என்று கூறும் விறலியின் கூற்றை என்னவென்று கூறுவது என்று கூறி வாயில் மறுத்தாள்.

## 6.13 அறிவர் கூற்றுகள்

அறிவர்க்குரிய கூற்றுகளைத் தொல்காப்பியர் தனியாக மொழியவில்லை. செவிலிக்குரிய கற்புக் கூற்றுகளாகக் கூறிய இறுதியிரண்டும் அறிவர்க்கு உரியன என்பது 'சொல்லிய கிளவி யறிவர்க்கு முரிய' என்பதனால் பெறப்படுகிறது.

1. "கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் தம் குலத்திற்கு ஏற்ப நல்லன உரைக்குமிடத்தும்,
2. அல்லவை கடியுமிடத்தும் அறிவரிடத்துக் கூற்று நிகழும்".[41]

தலைவனும் தலைவியும் அறிவரது ஏவற்படி நடக்கும் இயல்பு உடையவர்கள். ஆதலால் அவர்கள் இருவரையும் இடித்துரைத்து ஒருவழி நிறுத்தும் செயல் அறிவர்க்கு உரிய மரபாகும்.

### 6.13. 1 அறிவரது இயல்பு

அறிவர் துறவு உள்ளம் உடையவர், தலைவற்கு உசாத்துணையாக நிற்பர். அறிவர்களுக்கு அந்தணர் முதலியோர் வாழும் தெருக்களில் நாய் இல்லாத பெரிய வீடுகளில், நல்ல வகையில் சோறு கிடைக்கும். பல வீடுகளில் இருந்து வாழ்வதோடு அல்லாமல், சில நாட்களில் ஒரே வீட்டில் வயிறார நல்ல விருந்து கிடைக்கும். பனி காலத்தில் பருகுவதற்கு வெந்நீர் கிடைக்கும், வேண்டும்போது பருகுவதற்காகத் தம்மிடம் ஒரு செப்பு (கமண்டலம்) வைத்திருந்து அதில் வெந்நீர் பெற்றுக்கொள்வார்கள். தலைவனுடைய வருகையைப் பற்றியும், பிற செய்திகளையும் அறிந்து வந்து கூறுவார்கள்.

எனவே தோழி அறிவரிடம் தலைவன் குறித்த பருவமும் அவன் வருகை குறித்து வினவி அறிந்தாள். உனக்கு நல்ல விருந்து வாய்ப்பதாகத்

தோழி ஓர் அறிவரை வாழ்த்துவதாக ஒரு குறுந்தொகைப் பாடல் உள்ளது. இதனை

"ஆஇல் தெருவில் ஆகஇல் வியன்கடை
செந்நெல் அமலை வெண்மை வெள்இழுது
ஓர் இல் பிச்சை ஆர மாந்தி
அற்சிர வெய்ய வெப்பந் தண்ணீர்
சேமச் செப்பில் பெறீஇயரோ நீயே
மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை
எக்கால் வருவது என்றி
அக்கால் வருவர் எம் காதலோரே"[42]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

பருவ வருகையை விட, தலைவன் வருகையையே அவள் பெரிதும் விரும்பினாள். காதலன் வந்த பின்னர் அவருடன் கூடி துறவோர்க்கு எதிர்தலாகிய அறத்தைப் புரிவதாகத் தோழி கூறினாள். பருவத்தையும் தலைவன் வருகையையும் உரைத்த வாய்க்கு சோறும், நீரும் தந்து அப்பொழுது நன்றியைப் புலப்படுத்துவதாகக் கூறினாள்.

ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒருவராக அறிவர் குறிப்பிடப்பட்டிருந்தாலும், ஊடல் தீர்த்தமைக்குச் சான்றாக சங்க இலக்கியங்களில் பாடல்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### 6.13. 2 அல்லவைக் கடிதல்

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையர்பால் சென்றதை அறிந்த அறிவர் தலைவனிடம், "வதுவையில் மணந்த உரிமை மகள் இல்லில் இருந்து நீ பிரிந்ததால் துயரத்தால் புலம்ப, நீ பரத்தையர் மனையில் தங்கிய செயலுக்குக் கடிந்து கூறினர்" என்பதை சங்க இலக்கியம் மூலம் அறியமுடிகிறது.

## 6.14 கண்டோர்

தாய் தந்தையர் அறியாது, உடன்போக்கினை மேற்கொண்ட தலைவன் தலைவியரை இடைச்சுரத்தில் காண்பவராகவும், தலைவன் வினைவயிற் பிரியும் போதும், மீளும் போதும், அவனை வழியிடைக் காண்பவராகவும், அகத்திணைப் பாடல்களில் இவர்கள் பெரிதும் இடம் பெறுகின்றனர். எனவே இவர்களைக் கண்டோர் என்று தொன்னெறிப் புலவர்கள் மொழிந்தனர். தொல்காப்பியர் கண்டோர் கூற்றாகக் கூறுவன ஏழு ஆகும்.

தலைவன் தலைவியோடு செல்லும் காலமும், வழியும் பற்றிக் கூறுபவர்களாகவும், தங்கள் ஊரையும் தலைமக்கள் அடையவிருக்கும் ஊரின் தூரத்தைக் கூறுபவராகவும், தலைமக்கள் நிலைமைக்கு மனம் கலங்கிக் கூறி அவர்களை விடுக்குமிடத்தும், தலைவியைத் தேடி வரும் செவிலியைச் செல்ல வேண்டாம் எனத் தடுத்துரைக்குமிடத்தும், செவிலியைத் தொடர்ந்து செல்ல விடுக்குமிடத்தும், சேய்மையிடத்தே அகன்ற இருவர் செலவின் கண்ணும், இருவரும் மீண்டும் வருதற்கண்ணும் கண்டோர் கூற்று நிகழும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவார்.

தலைவி தன் காதலனுடன் சுரநெறியிற் சென்ற போது இடைப்பட்டதோர் ஊரில் இளைப்பாரினர். இக்காட்சியை கண்டோர் பெண்ணைப் பெற்ற தாயாரின் துன்பம் பெரிதாகவே இருக்கும் என்று கலங்கிக் கூறினர்.

### 6.14. 1 தலைவி வேண்டுதல்

புணர்ந்துடன் போகிய தலைமகள், வழியிடையே கண்ட அந்தணர்களை வணங்கித் தாம் மகிழ்ச்சியுடன் தன் காதலனோடு சென்றதைத் தம் தோழியர்க்குச் சொல்லுமாறு வேண்டினாள்.

தலைவி மகிழ்ச்சியுடன் தேர் ஏறிச் செல்வதைத் தன் தாய்க்குச் சொல்லுமாறு வேண்டினாள்.

### 6.14.2 செவிலிக்கு அந்தணர்கள் உரைத்தல்

உடன்போக்கு மேற்கொண்டு சென்ற தலைவன் தலைவியரைக் கண்டீர்களா என்று அந்தணர்களிடம் செவிலி வினவினாள். அதற்கு பதில் அளிக்கும் முகமாக தலைவியைப் பிரிக்கலாகாது என அறிவுரைக் கூறினர் என்பதை

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை
மலையுளோ பிறப்பினும் மலைக்கு அவை தாம் என்
செய்யும்
நினையுங்கால் நும் மகள் நுமக்கு ஆங்கு அனையளே
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதாம் என் செய்யும்
தேருங்கால் நும் மகள் நுமக்கும் ஆங்கு அனையளே"[43]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

மிக உயர்ந்த கற்பினை உடையாளுக்கு, வருத்தம் உறாதீர் சிறந்த கணவனை வழிபட்டு அவன் பின்னே சென்றனள். இல்லறமே அறங்களில் தலையான அறம். மறுமையில் இருவரும் நீங்காமல் சுவர்க்கத்திற்குச் செல்லும் வழியும் அதுவேயாகும் என்றனர்.

புணர்ந்துடன் போகிய தலைவியை தலைவனைக் கண்டீர்களா? என்ற செவிலிக்கு, கண்டோம் அவர்களை விட்டுவிடுங்கள். அவர்கள் செல்லட்டும். வில்லேந்திய காளையாகிய தகுதியுடைய ஒருவனை தேர்ந்தெடுத்துள்ளாள் என்ற போதும், நீங்கள் செல்லும் ஊர் தொலைவில் உள்ளது, இரவு மட்டும் எம் ஊரில் தங்கிச் செல்லுமாறு கூறினர்.

கண்டோர்கள் தாமாக மனதிற்குள் சொல்லியது, தலைவி கூறச் சொன்ன செய்தியை செவிலிக்குக் கூறியது, தன்னுடைய கருத்துக்களை செவிலிக்குக் கூறியது, தலைவன் தலைவியிடம் பேசியது என்பவையே ஆகும்.

கண்டோர் என்பவர் வழியிடைச் செல்வோர் அவர்கள் செவிலி, நற்றாய், தோழி, தலைவன், தலைவி ஆகியோருடன் கூற்று நிகழ்த்துபவர்.

## 6.15 வாயில்களுள் புதல்வனும் ஒருவன்

தலைவன் பரத்தையிற் பிரிந்தானாகத் தலைவி ஊடல் கொண்டிருத்தல் இயல்பேயாகும். ஊடல் காலத்தே தலைவன் தன் வீட்டிற்கு வருவதற்கு மனங்கூசுவான். அச்சமயத்தில் தன் மகனை அழைத்துக் கொண்டு வீட்டினுள் நுழைவான். மகனோடு வரும் தலைவனைத் தலைவி ஏதும் கடிந்து கூற இயலாது. எனவே தலைவியின் ஊடல் நீக்கும் வாயில்களுள் புதல்வனும் ஒருவனாவான்.

**''இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து**
**பின்னர் வந்த வாயிற்கண்ணும்''**[44]

என்று புதல்வன் வாயில்களுள் ஒன்றாக இடம் பெறுதலை தொல்காப்பியர் சுட்டுவார்.

**''பின்முறை ஆகிய பெரும்பொருள் வதுவைத்**
**தொன்முறை மனைவி எதிர்ப்பாடாயினும்**
**மின்னிழைப் புதல்வனை வாயில் கொண்டு புகினும்**
**இறந்த துணைய கிழவோன் ஆங்கண்**
**கலங்கலு முனியன் என்மனார் புலவர்''**[45]

என்றும் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

தலைவன் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்ய, மணக் கோலத்துடன் இத்தெருவினைக் கடந்து சென்றபோது, வீட்டு வாயிலைக் கடந்து வந்த புதல்வனைக் கண்டு, பாகனிடம் தேரை நிறுத்துமாறு கூறி, புதல்வனைத் தழுவி எடுத்து, ''வீட்டிற்குச் செல்வாயாக'' என்று கூறி விடுத்தான். புதல்வன் அதற்கு உடன்படாது அழுதான். அழுது தடுத்த மகனோடு தலைவன் வீட்டிற்குள் புகுந்தான். ''இச்செயலை நானே செய்வித்தேன்'' என்று பலரும் கருதுவதற்கு இடனாதலை உணர்ந்து, புதல்வனை நோக்கி அடிக்கும் கோலுடன் அணுகியபோது, தலைவன்

புதல்வனை தன்னிடத்தே எடுத்து அணைத்துக் கொண்டான். புதல்வனால் மணம் நிகழவில்லை. தலைவியும் ஊடல் தணிந்தாள்.

இயல்பாக உள்ள ஓர் உளவியற் சூழலை இங்கு நோக்க வேண்டும். வாயில்களாகத் தலைவனுடன் வருவோர் முன்னிலையில் தலைவி தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைக் கடிந்து, பண்பாட்டுக் குறைவுடன் நடந்துகொள்ளமாட்டாள். பிறர் முன்னிலையில் தலைவனிடத்துச் சிறப்பாக நடந்து கொள்வாள். அதே நிலை தான் மகன் முன்னர் தலைவி நடந்து கொள்ளும் பாங்கும் அமையும். தலைவனின் குறைபாடுகளை மகன் அறிந்தால், அது இருவருக்கும் குறைபாடாக ஆகிவிடும். குடும்பக் குறைபாடாகிவிடும் என்ற நினைப்பால் கடிந்து கூறமாட்டாள். எனவே ஊடல் தீர்க்கும் வாயில்களுள் புதல்வனும் சுட்டப் பெறுதல் நோக்கத்தக்கதாகும்.

## 6.16 தலைவி தானே ஊடல் தணித்தல்

வாயில்கள் மூலமாகத் தலைவி ஊடல் தணித்தலும், தலைவி தானே உலகியல்பை நினைந்து, தானே ஊடல் தணிந்து தலைவனை ஏற்றுக் கொள்ளுதலும் உண்டு.

தீயொழுக்கமுடைய ஆடவனை முற்றாக வெறுத்து வாழ இயலாத பெண்மையின் தன்மையை

> ''கடை இய நின்மார்பு தோயலம் என்னும்
> இடையும் நிறையும் எளிதோ நிற்காணின்
> கடவுபு கைத்தாங்கா நெஞ்சென்னும் தம்மோடு
> உடன் வாழ் பகையுடையார்க்கு''[46]

என்றும்

> ''புலப்பெனியான் என்பேன் மன் அந்நிலையே
> அவற்காணின்
> கலப்பென் எனும் இக் கையறுநெஞ்சே''[47]

என்னும் பகுதிகள் தெளிவுறக் காட்டவல்லன.

தலைவனிடம் ஊடல் கொண்ட தலைவி, ''நின்னால் வருத்தமுற்ற பரத்தையர் நீ செய்யும் கொடுமைகளை என்னிடத்தே வந்து வெறுத்துச் சொல்லாமையை யான் பெறின், அதுவே போதும்'', என்றும்

நின் பாணன் எம்முடைய மனையிடத்தே வந்து, ''நீ போயிருக்கும் பரத்தையர் மனையே எனக்கேட்டு வாராதிறுந்தலையான் பெறின் அதுவே போதும்'' என்று தலைவி கூறினாள்.

தலைவன் தலைவியைத் திருமணம் செய்வதற்கு முன்பே, பரத்தையருடன் தொடர்பு கொண்டுள்ளான் என்பதும் அத் தொடர்பு தலைவிக்கும், தோழிக்கும் தெரியும் என்பதும் சங்க இலக்கியப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது. இதனை

**''நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த**
**கொடியன் ஆகிய குன்று கெழு நாடன்**
**வருவதோர் காலை இன்முகம் திரியாது**
**கடவுட் கற்பின் அவன் எதிர் பேணி**
**மடவை மன்றநீ எனக் கடவுபு''[48]**

என்று குறுந்தொகையில் 'குறிஞ்சி'த் திணை பற்றிபாடலில் செய்திகள் காணப்படுகிறது.

தோழி தலைவியிடம், தலைவன் பரத்தையர் வீட்டிலிருந்து நின்னை காணவருங்கால் நின்னுடைய கடவுட் தன்மையுடைய கற்பு திரியாமல் இனிய முகம் மலர்ந்து எதிர்கொண்டு பேணுதலால், நீ உறுதியாக அறியாமையுடையவள் ஆயினை என்றாள்.

கொடியனாகிய தலைவன் வரும்போது இன்முகம் திரியாது, கடவுட் கற்புடன் வரவேற்றல் என்ற கருத்து பெறப்படுகிறது. குறிஞ்சி நிலத்திலும் பரத்தையுண்டென பெறப்படுகிறது. தலைவியைச் சந்திப்பதற்கு முன்போ

அல்லது தலைவியைச் சந்தித்துப் பழகிய காலத்திலோ தலைவன் பரத்தையரிடம் சென்றுள்ளான்.

தலைவனுக்கு தலைவியுடன் இருக்கும் களவு காலத்திலும், பரத்தையர் தொடர்பு உண்டு என்பதை நம்பியகப்பொருள், 'காதற் பரத்தையர் களவிற்கும் உரியர்' என்று கூறுகிறது.

தலைவி தன்னை, திருமணம் செய்து கொண்டால், பரத்தையர் தொடர்பை விட்டுவிடுவான் என்றும் நினைத்து இருக்கலாம்.

சங்க காலத்தில் மங்கைப் பருவம் அடைந்த பெண்கள் நல்ல கணவனும் சிறந்த வாழ்க்கையும் அமைய மாலைக் காலத்தில் பிறையினை போற்றி வழிபட்டனர்.

தங்கள் கணவரைப் பிரியாதிருக்க சங்க காலப் பெண்கள் வைகையை வழிபட்டனர் என்பதை பரிபாடல் **11** வழி அறிய முடிகிறது.

பிரிந்து சென்ற தம் கணவர் விரைந்து வந்து சேர்ந்து பின்னர், தம்மை பிரியாதிருக்கும்படி, செவ்வேளை வேண்டித்துதித்து யாழிசை எழுப்பிப் பாடியதை பரிபாடல் கூறுகிறது.

பிரிந்த தலைவர் மீண்டும் வந்து சேர்ந்த பின், பிரியாது உறைய வேண்டுமென்று மகளிர் கொற்றவையை வழிபட்டனர். அவ்வாறு வழிபடும் போது, கையில் காப்பு நூல் கட்டி, நோன்பு நோற்று சூலிக்குப் பலிக்கடன் செலுத்தினர் என்பதையும் குறுந்தொகைப் பாடல் புலப்படுத்துகிறது.

சங்க கால மகளிர் கணவரின் பிரிவை எப்போதும் எதிர்நோக்கியிருந்தமையை தெரியவருகிறது. வழிபாட்டு நிலையில் கணவனின் அன்பு தன் மீது எப்போதும் நிலைபெற்றிருப்பதற்கும், கணவன் தன்னை விட்டுப் பிரியாதிருக்கவும் வேண்டிக்கொள்ளுதல் அவள் வாழ்வில் முக்கியமான செயல்பாடாக அமைந்திருத்தல் வேண்டும்.

எம் தலைவனைக் காணாத இடத்து அவன்பால் ஊடியிருக்க எண்ணினாலும், அவனைக் கண்டுற்ற போது அவன் தவறுகள் புலப்படாது கூடுதலை விரும்பும் என்று தலைவி வாயில் நேர்ந்தாள் என்பதை

''ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு''[49]

என்றும்

''காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்
காணேன் தவறல் லவை''[50]

என்று கூறினாள் என்பதை திருக்குறள் மூலம் அறியமுடிகிறது.

பாகனும் ஊடல் தணிக்கும் வாயிலாகச் செயல்பட்டுள்ளான் என்பதை கலித்தொகை 71வது பாடல் விளக்குகிறது.

## 6.17 ஊடல் தீர்க்கும் வாயில்களுள் காமக்கிழத்தி

தலைவி, தலைவன் மேல் ஊடல் கொண்டு இருந்தாள். ஊடலைத் தீர்க்கும் பொருட்டு காமக்கிழத்தி தலைவியிடம், ''தலைவனின் தொடர்பை நீ விரும்பினால் என் சொல்லைக் கேட்பாயாக. உன் தகுதிக்கு இவ்வூடல் தகாது. அவனை வண்டென்று பலரும் கூறுவர். மலருக்கு மலர் தாவும் இயல்பினன். எனவே நீயும் ஊடாதே'' என்று கூறினாள் என்பதை

''நீயே பெரு நலத்தையே அவனே
நெடு நீர்ப் பொய்கை நடு நாள் எய்தி
தண் கமழ் புது மலர் ஊதும்
வண்டு என மொழிப மகன் என்னாரே''[51]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

### 6.18 நொதுமற் பெண்டிற் முனிவு நீங்க உரைத்தல்

ஊடல் தீர்க்கும் வாயில்களாக பன்னிருவரையே தொல்காப்பியர் குறித்துள்ளார். இருப்பினும் மேலும் சிலர் வாயில்களாகச் செயல்பட்டதை, சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது. நொதுமற் பெண்டிரும் ஊடல் தீர்க்கும் வாயில்களாக செயல்பட்டுள்ளனர் என்பதை பரிபாடல் மூலம் அறியமுடிகிறது.

தலைவன் பரத்தையர் பிரிவு மேற்கொண்டானாக, தலைவி கோபம் கொண்டாள். அறிவுரை கூறவந்த நொதுமற் பெண்டிர் அவளை நோக்கி, "நல்ல பண்புகட்கு இருப்பிடமானவளே, தாம் காமம் நுகர்வதற்குப் பொருத்தமானவள் எனத்தான் கருதிய பரத்தையர்பால், ஓர் ஆடவன் செல்வது இயல்பு. அத்தகையவனை அவன் மனைவி அங்ஙனம் செல்லாது தடுத்தலும், அங்ஙனம் சென்றமைக்காக அவனை விலக்கித் தணித்து வாழ்தலும் இயலுமோ? இயலாது. எனவே தலைவன் பால் கோபம் கொள்ளாமல் தலைவனை ஏற்றுக் கொள்" என்று ஊடல் தீர்க்கும் வாயில்களாகச் செயல்பட்டனர் என்பதை

**"சேக்கை இனியார்பால் செல்வான் மனையாளால்**
**காக்கை கடிந்து ஒழுகல் கூடுமோ? கூடா**
**தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்**
**இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவர்**
**நிகழ்வது அறியாது - நில்லு நீ நல்லாய்**
**மகளிரை மைந்துற்று அமர்பு உற்ற மைந்தர்**
**அகலம் கடிகுவேம் என்பவை யார்க்கானும்**
**முடிபொருள் அன்று - முனியல் முனியல்**
**கடவரை நிற்குமோ காமம்? கொடி இயலாய்"**[52]

என்ற பாடலடி மூலம் பெறப்படுகிறது.

"சான்றாண்மை மிக்க கற்புடை மங்கையர், தம்மை தம் கணவன்மார் இகழ்ந்து ஒதுக்க நேர்ந்தபோதும், தாம் அவர்களை ஏத்தி வணங்கி, வாழ்தலை இயல்பாகக் கொள்வர். பின் விளைவு நோக்காது, பரத்தையரிடம் மயங்கி, அவர்களை விரும்பிச் சேர்ந்த ஆடவர் மார்பை

இனி தழுவமாட்டோம் என்று உறுதிபூண்டு வாழ்தல் என்பது, குலப்பிறப் பாட்டியர்க்கு அவர்கள் யாவரேயாயினும் கைகூடுவது அன்றாம். எனவே நீ நின் கணவனை வெறுத்தலைக் கைவிடுக. கொடி போலும் இயல்புடையாய் காமம் என்பது தக்க வழியில் நிற்கக் கூடியதோ'' என்று கூறித் தெருட்டினர்.

''கட்டுக்கடங்காத காமவேட்கையாளர்களைக் கணவன்மார்களாகப் பெற்ற பெண்டிர், இது காரணமாக வெறுத்து ஒதுக்க இயலாது'' என்ற அறிவுரை பொருள் பொதிந்ததாகும்.

'இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவர் குலமாதர்' என்பது அவர்கள் அங்ஙனம் வாழ்வது தவிர வேறு வழியில்லை என்பது குறித்ததே. இஃது ஆணாதிக்கச் சமூகத்தின் இயல்பாகும். மணவிலக்கோ, மறுமணமோ ஏற்றுக்கொள்ளப்படாத பண்டைச் சமூகத்தில், கணவன்மாரின் தீயொழுக்கம் காரணமாக அவர்களோடு விஞ்சிய அளவில் ஊடுவதும், அறிவீனம் என்ற கருத்து அன்று நிலவியது.

'நிகழ்வது அறியாது' என்னும் தொடர் கணவனால் வெறுத்தொதுக்கப்பட்டுப் பெண்டிர் துயர் எய்தக் கூடிய நிலையைச் சுட்டுவதோடு, உலக நடைமுறையில் ஆடவரைச் சார்ந்தே வாழ வேண்டிய நிலை, பெண்டிர்க்கு உள்ளது என்பதனை உணர்ந்து பெண்டிர் நடந்து கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்துவதாகவும் உள்ளது.

இதனை உணர்ந்து வாழும் பெண்டிரைத் 'தகவுடை மங்கையர்' என்றும் 'சான்றாண்மை சான்றார்' என்றும் பாராட்டியுள்ளமை நோக்கத்தக்கது.

## 6.19 தொகுப்புரை

1. பரத்தையர் ஒழுக்கம் புரிந்து தலைவன் மீண்டு வந்து இல்லம் புகுகையில் அவனோடு தலைவி வேறுபடும் பிணக்கு நிலை 'ஊடல்' எனப்படும்.

2. தலைவி தலைவன்மேல் ஊடல் கொண்டு நிற்கும் போது, தலைவியிடம் சென்று கூறுபவராகவும் வாயில்கள் செயலாற்றுவார்கள்

3. வாயில்கள் தலைவியின் இல்லற மாண்புகளை தலைவனுக்கு எடுத்துரைப்பர்.

4. தோழி தலைவியிடம் ஊடல் கொள்வதால் பயனில்லை என்றும், ஊடல் கொண்ட பெண்களின் மனநிலைப் பாதிக்கப்படுவதுடன், சமைக்க அரிசி இன்றியும், குழந்தைக்கு பால் இன்றியும், சுற்றத்தார் யாரும் இன்றியும் தனித்து நின்று வருத்தப்படுவதைக் கண் கூடாகக் கண்டும், நீ தலைவனிடம் ஊடுவது சரியல்ல என்றாள்.

5. மனைவி கையால் தொட்ட உணவு, வானவர் அமிர்தம் போல் இனிக்கிறது என்று பாராட்டியவன் இப்போது வெறுத்தான். தோழி தலைவனிடம், வேப்பங்காயை தந்தால் ஒரு காலத்தில் இனிய வெல்லக்கட்டி என்று பாராட்டினீர். ஆனால் இப்போது குளிர்ந்த சுவையுடையது என்றது இப்போது சுவையுடைய நீரை தந்தாலும் வெப்பமுடன் உப்பு சுவையுடையது என்று கூறினான் தலைவன்.

6. ஒருவருடைய கருத்தை மற்றொருவரிடம் சரியாகக் கொண்டு சேர்ப்பதும் வாயில் என்பது தான். அவ்வாறு செவிலியே செயல்பட்டாள்.

7. தலைவியின் வருத்தத்தை தலைவனிடம் கூறினான். தலைவனின் செய்தியை தலைவியிடம் கூறினான். தலைவன் வினைவயிற் பாசறையில் தங்கியதைக் கண்ட தலைவி வருந்தி அழுதபோது, தலைவனிடம் சென்ற பாணன் ''நின் மனைவியின் கண்ணீர் பற்றி நீ கவலைப் படாததால் யான் நினக்கு பாணரும் அல்லோம். நீ எனக்கு குரிசிலை இல்லை'' என்றான்.

8. புதல்வன், விருந்தினர், காமக்கிழத்தியும் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே உள்ள ஊடலைத் தணிக்கும் வாயிலாகச் செயல்பட்டனர்.

9. பாகனும், நொதுமற்பெண்டிரும் ஊடல் தணிக்கும் வாயிலாகச் செயல்பட்டனர் என்பதை சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. திருக்குறள் 1302
2. மேலது 1306
3. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 52
4. அகப்பொருள்விளக்கம் - நூ. 68
5. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ.11
6. மேலது நூ.37
7. மேலது நூ.38
8. மேலது நூ.25
9. அகநானூறு 316
10. குறுந்தொகை 397
11. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 16
12. திருக்குறள் 1303
13. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 5
14. குறுந்தொகை 196
15. நற்றிணை 180
16. ஐங்குறுநூறு 401
17. குறுந்தொகை 167
18. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 36
19. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல், நூ. 195.
20. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 41
21. மேலது நூ. 42
22. மேலது நூ. 28
23. ஐங்குறுநூறு 473
24. அகநானூறு 14
25. ஐங்குறுநூறு 480
26. மேலது 82
27. மேலது 89

28. மேலது 49
29. அகநானூறு 56
30. கலித்தொகை 95
31. மேலது 68
32. மேலது 71
33. பதிற்றுப்பத்து 46
34. தொல்காப்பியம் - பொருளதிகாரம் கற்பியல், நூ. 29
35. மேலது நூ.30
36. நற்றிணை 81
37. மேலது 374
38. மேலது 41
39. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 27
40. மேலது நூ. 28
41. மேலது நூ. 13
42. குறுந்தொகை 277
43. கலித்தொகை 9
44. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியல், நூ. 10
45. மேலது நூ.31
46. கலித்தொகை 77
47. மேலது 67
48. குறுந்தொகை 252
49. திருக்குறள் 1284
50. மேலது 1286
51. நற்றிணை 290
52. பரிபாடல் 20 - வையை

# தலைவனை இழந்த தலைவியின் பிரிவாற்றாமை

7.0 முன்னுரை

7.1 கணவனுடன் உயிர்த்துறத்தல்

7.2 கணவனுடன் உயிர்விடுதலின் வகைகள்

7.2.1 உடனுயிர் விடுதல்

7.2.2 ஆவிசோரும் மனைவி

7.2.3 கணவனைத் தழுவி உயிர்விடும் பெண்

7.2.4 தாழியில் அடக்கமாதல்

7.2.5 உடன்கட்டை ஏறுதல்

7.2.6 கலிங்கத்துப்பரணியில் காணப்படும் செய்திகள்

7.2.7 ஆனந்தப்பையுள்

7.2.8 மணிமேகலையில் காணப்படும் செய்திகள்

7.3 உடன்கட்டை ஏறும்முறை

7.3.1 கணவனுடன் உயிர் நீத்தலுக்குரிய காரணங்கள்

7.3.2 கைம்மைத் துன்பம்

7.3.3 மிகுதியான அன்பு

7.3.4 மான உணர்வு

7.3.5 மேலுலகக் கோட்பாடு

7.3.6 தீயின் தூயத்தன்மை

7.4 கைம்மை நோன்பு

7.4.1 சங்க இலக்கியங்களில் கைம்மை நோன்பு

7.4.2 கைம்மை முறைமைகள்

7.4.3 கூந்தல் களைதல்

7.4.4 கூந்தல் களைதல் வழக்கமானவை

7.4.5 அணிகலன்களைக் களைந்துவிடுதல்

7.4.6 தரையில் பாயின்றி படுத்து உறங்குதல்

7.4.7 உணவில் கட்டுப்பாடு

7.4.8 கணவனுக்குப் பிண்டமளித்தல்

# தலைவனை இழந்த தலைவியின் பிரிவாற்றாமை

## 7.0 முன்னுரை

கணவனை இழந்த பின்னர் மகளிர் நிலை மிகவும் இரங்கத்தக்கதாகவே இருந்தது. கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்துகொள்வதை, சங்ககாலம் முதல் தோன்றிய நூல்கள் மறுத்தே பேசியுள்ளன. கணவனின் இறப்பு, மனைவிக்கு நிரந்தரமான பிரிவு. பிரிவாற்றாமையினால், கணவனுடன் உயிர்விடும் நிலைகளாகிய உடன் உயிர்த்துறத்தல், தாழியில் அடக்கமாதல், உடன்கட்டை ஏறுதல், கைம்மை நோன்பு ஆகியவை பற்றிய கருத்துக்களை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 7.1 கணவனுடன் உயிர்த்துறத்தல்

கணவனுடன் உயிர்விடும் நிலை தொல்காப்பியர் காலத்திலேயே வழக்கில் இருந்தது. தொல்காப்பியர் கணவர் இறந்த பின்னர் மனைவியின் நிலையினை இரண்டு பிரிவுகளாகப் பிரித்துள்ளார். அவை

1. கணவனோடு உடன் உயிர்த்துறத்தல்
2. கணவன் இறந்த பின்னர் தவ வாழ்வை மேற்கொள்ளல்

இது ‘தாபத நிலை’ என்ற பெயரால் சுட்டப்படுகிறது.

கணவனுடன் உயிர்விடும் மனைவியர் நிலைக் குறித்துத் தொல்காப்பியர்

> “நீத்த கணவன் தீர்த்த வேலின்
> பேஎத்த மனைவி ஆஞ்சியானும்”[1]

என்று இறந்த கணவன் விட்ட வேலினாலே தன்னுயிரை மாய்த்துக் கொள்ளும் மனைவி, தலையோடு மார்பையும், முகத்தையும் சேர்த்து

இறக்கும் மனைவி ‘மூதானந்தம்’ என்று சிறப்பித்துக் கூறுவார். கணவன் உயிர்துறந்த போது உயிரை விடுவது, உயிரை மாய்த்துக் கொள்வது, கணவனோடு பெரிய தீயில் புகுந்து உயிரை விட்ட மனைவி ஆகியோரது தன்மையினை தொல்காப்பியர் கூறுவார். தலைவனின் உரிமை மகளிரும் உயிர் துறப்பர் என்பதை,

"பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்
கோடு ஏந்து அல்குல் குறுந்தொடி மகளிரொடு
காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப
மேலோர் உலகம் எய்தினான் எனாஅ"[2]

என்று ஆய்அண்டிரன் இறந்தபோது, அவனுடைய உரிமை மகளிரும் உயிர்த்துறந்தனர் என்ற செய்தி பெறப்படுகிறது.

மேற்கூறப்பட்ட செய்திகள் யாவும், கணவருடன் உயிர்விடும் பெண்களின் நிலையை விளக்கவல்லன. தொல்காப்பியர் காலம் தொடங்கி, இவ்வழக்கம் நடைமுறையில் இருப்பதால், இதன் தோற்றம் தொல்காப்பியர் காலத்திற்கு முந்தைய சமுதாயத்திலேயே ஏற்பட்டிருக்க வேண்டும், என்பது தெளிவு.

## 7.2 கணவனுடன் உயிர்விடுதலின் வகைகள்

பெண்கள் கணவனுடன் உயிர்விடுதலில் மூன்று வகைகள் உள்ளன.

1. உடனுயிர் விடுதல்
2. தாழியில் அடக்கமாதல்
3. உடன்கட்டை ஏறுதல்

### 7.2.1 உடனுயிர் விடுதல்

கணவன் உயிர்விட்டு இறந்ததை உணரும் நிலையிலேயே, உயிர் விடுதலை ‘உடன்உயிர்விடுதல்’ எனலாம். போரிலோ அன்றி வேறு காரணத்தினாலோ தன் கணவன் இறந்தபோது, ‘அவனின்றி பிறர் தமக்குத் துணையாகார்’ என்று, கணவனின் மார்பை பொருந்தியோ, இணையடி

தொழுது உயிர்த்துறப்பது 'தலைக்கற்பினர்' என்று புகழப்படுவர். இவர்கள் முதல்வகையினராவர்.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளிக்கும் இடையே கடுமையான போர் நடைபெறுகிறது. போரின் முடிவில் இருபெருவேந்தரும், வீரர்களும் மடிகின்றனர். வெற்றி பெற்றவர் யார் என்பதை அறிவதற்குக்கூட, பாசறையிலும் வீரன் ஒருவனுமின்றி அனைவரும் களத்திலேயே மாண்டுள்ளனர். அப்பொழுது அவ்வீரர்களின் மனைவியர் தத்தம் கணவரின் மார்பைத் தழுவி அவர்களும் இறக்கின்றனர் என்பதை

"இடங்கெட ஈண்டிய வியன்கண் பாசறைக்
களங்கொளற்குரியோ ரின்றித் தெறுவர
உடன்வீழ்ந் தன்றோ லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பணிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்க மைந்தனரே"[3]

என்ற பாடல் வரிகளின் மூலம் பெண்கள் உடனே, இறக்கின்றனர் என்பது தெரிகிறது. கணவன் இறந்த பின் மேற்கொண்டு வாழும் கைம்மை வாழ்வை மூன்றாம் நிலை வாழ்வை மேற்கொள்ளாமல், உடனே இறக்கின்றனர் என்பது தெரிகிறது.

இவ்வாறு வீர மறவரான கணவரோடு இணையராகச் செல்லும் மகளிர், வானுலக தேவர்களுக்கு நல்விருந்தாக அமைகின்றனர் என்பதை

"வாடாப் பூவினிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னோரும் மாற்ற
அரும்பெற லுலகம் நிறைய
விருந்து பெற்றன ராற் பொலிகநும் புகழே"[4]

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

தலைவன் ஒருவன் போர்க்களத்தில் வீரப்புண்பட்டுக் கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளான். இறக்கும் நிலையில் உள்ள அத்தலைவனின்

மனைவி, இதுநாள் வரை இத்தலைவனால் புரக்கப்பட்டு வந்துள்ள துடியர், பாணர், விறலியரை நோக்கி, உங்களின் வாழ்வு என்னாவது அதைக் காட்டிலும், என் கணவன் இறந்து பட்டால், தான் உயிர் வாழ்வது இயலாது அறிதாகும் என்று மொழிந்துள்ளாள் என்பதை

''மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்று தாமுடுத்த அம்பகைத் தெரியற்
சிறுவெள்ளாம்ப வல்லி யுண்ணும்
கழிகல மகளிர் போல
வழி நினைந்து இருத்தல் அதனினும் அரிதே''[5]

என்ற பாடலடி மூலம் கணவன் இறந்த பின், கைம்மைவாழ்வை மேற்கொண்டு வாழாமல் உடனே இறப்பேன் என்பது பெறப்படுவதால் கணவனுடன் உயிர்துறப்போர் 'முதல்வகையினர்' என்பது பெறப்படுகிறது.

### 7.2.2 ஆவிசோரும் மனைவி

போர் புரியக் களத்துக்கு சென்ற வீரனொருவன், அங்கு உதடுகளை மடித்துக்கொண்டு கிடந்தான். அவன் மனைவி அவனைக் கண்டாள். அவன் ஒன்றும் பேசவில்லை. வெற்றியுடன் மீளவும் இல்லை. அவனைப் பார்த்து 'நீ இதழ் மடித்துக் கிடப்பதற்கு காரணம் என்ன? அழகிய உதடுகளில் ஏதேனும் வடுபட்டனையோ? என்று கூறி புலம்பினாள். வெறுப்பு மிகுதியால், அவனருகே நின்று தானும் உயிர்விடுகின்றாள் என்பதை

''வாய் மடித்துக் கிடந்ததலை மகனை நோக்கி
மணி அதரத்து ஏதேனும் வடு உண்டனயோ
நீ மடித்துக் கிடந்தது எனப் புலவி கூர்ந்து
நின்று ஆவி சோர்வாளைக் காண்மின் காண்மின்''[6]

கலிங்கத்துப்பரணி கூறுகிறது.

### 7.2.3 கணவனைத் தழுவி உயிர்விடும் பெண்

தன் கணவனுடைய உடம்பை நிலமகளும் தாங்குவதற்கு விடாமல், தன் மார்போடு அணைத்துக் கொண்டு, தேவருலகத் தெய்வப் பெண்கள் அவனுடைய உயிரைத் தழுவுவதற்கு முன்பே, தன் உயிரையும் தன் கணவரின் உயிரோடு ஒரு சேர விடுகிறாள் ஒருத்தி என்பதை,

''தரைமகளும்தன் கொழுநன் உடலம் தன்னைத்
தாங்காமல் தன் கரத்தால் தாங்கி விண்ணாட்டு
அரமகளிர் அவ்உயிரைப் புணரா முன்னம்
ஆவி ஒக்க விடுவானைக் காண்மின் காண்மின்''[7]

கலிங்கத்துப்பரணி மூலம் அறியமுடிகிறது.

கணவன் இறந்தவுடனோ அல்லது இறக்கும்போதே உயிர் விடுகின்ற மனைவியே, புகழ்பெற்றவளாகப் போற்றப்பெறுகிறாள் என்பதை

''மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே தென்னவன்
கோப்பெருந்தேவி குலைந்தனள் நடுங்கிக்
கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்று
இணையடி தொழுதுவீழ்ந் தனளே மடமொழி''[8]

என்று இளங்கோவடிகள் பாண்டியன்தேவி உயிர்விடுதலை விளக்குகிறார். பாண்டியன் இறந்தவுடன், ''கணவனை இழந்தோர்க்கு காட்டுவது இல்'' என்று கருதி உயிர்விட்டாள். கோப்பெருந்தேவி தன் கணவன் இறந்தமையால் உண்டான துன்பம் உணரும் முன்பே, உயிர்விட்டாள். இவ்வாறு இறக்கும் நிலையை 'உடனுயிர் விடுதல்' எனலாம்.

### 7.2.4 தாழியில் அடக்கமாதல்

பழந்தமிழர் இறந்தவரை எரித்தலோ அன்றி, புதைத்தலோ செய்வர். புதைக்கப்பட வேண்டிய பிணங்களை தாழியிலிட்டு மண்ணில் புதைப்பர். பிணங்களை விலங்குகள் பற்றி இழுத்தலாகாது என்று கருதி, தாழிகளைக்

கவிழ்த்துப் புதைப்பர். எரியூட்டுவர் அல்லது புதைப்பர் என்ற இவ்விரண்டு முறையும் இடம் பெற்றிருந்தமையை

**"இடுக ஒன்றோ! சுடுக ஒன்றோ!**
**படு, வழிப்படுக இப்புகழ் வெய்யோன் தலையே"**[9]

என்ற புறநானூற்றுப்பாடல் தெளிவுறுத்துகின்றது.

கணவன் இறந்த பின்னர் உயிர்விடத் துணியும் பெண்கள், பிணத்தை எரிக்காது, தாழியிலிட்டுப் புதைக்கும் வழக்கத்தையுடைய இனங்களில், மனைவி அத்தாழியிலேயே அடக்கமானாள்.

கணவனை இழந்த பெண் ஒருத்தி ஈமத்தாழி வனைவோனை, விழித்து "கணவனோடே கூடி இருக்கும்படி தனக்கும் சேர்த்துப் பெரிதாக ஈமத்தாழியை வனையுமாறு வேண்டுவதாக உள்ளது" என்பதை

**"கலம் செய்கோவே! கலம் செய்கோவே**
**அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய**
. . . . .
. . . . .
**அகலிதாக வனைமோ**
**நனந்தலை மூதூர்க் கலம் செய்கோவே"**[10]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

இப்பாடல் மூலம் கணவன் இறந்த பின்பு வாழ விரும்பாமல் பிரிவுத் துன்பம் அதிகமானதால், அவளே குயவனிடம் பெரிதாகத் தாழி செய்து தருமாறு வேண்டுகிறாள். இதன் மூலம் கணவனும் மனைவியும் ஒரு சேர ஒரே தாழியில் அடக்கம் செய்யப்பட்டமை தெரிகிறது. ஆனால் மனைவியை உயிரோடு புதைத்தனரா அல்லது கொன்று புதைத்தனரா என்ற செய்திகள் காணப்படவில்லை.

இறந்தவனை அடக்கும் தாழி அவரவர்க்கு பெருமைக்குரிய வகையில் அமைய வேண்டும் என்பர்.

### 7.2.5 உடன்கட்டை ஏறுதல்

கணவனது சிதைத்தீயில் மனைவியர் வீழ்ந்து தற்கொலை செய்து கொள்ளுதலை, 'உடன்கட்டைஏறுதல்' என்ற சொல்லாட்சி குறிப்பிடுகின்றது.

> ''நல்லோள் கணவனோடு நனியழல் புகீஇச்
> சொல்லிடை இட்ட பாலை நிலையும்''[11]

என்னும் தொல்காப்பிய நூற்பா உடன்கட்டைஏறுதலை 'அழல் புகுதல்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறது. தமிழில் உடன்கட்டைஏறுதல் என்ற சொல்லாட்சி பிற்காலத்தில் தான் வழக்கில் இடம் பெற்றது. முற்காலத்தில் அழல்புகுதல், தீப்பாய்தல், தீக்குளித்தல் என்பனவே பயன்படுத்தப்பட்டன.

புறப்பொருள் வெண்பாமாலையில் ஐயனாரிதனார். தொல்காப்பியர் கூறிய கருத்தையே உடன் கொண்டு, உடன்கட்டைஏறுதலைக் குறிப்பிடுவார் என்பதை

> ''காதற் கணவ னொடு கனை யெரி மூழ்கும்
> மாதற் மெல்லியல் மலிபுரைத்தன்று''[12]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

புறநானூற்று 246 வது பாடலில் அடிக்குறிப்பில் ''பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது'' என்ற செய்தி காணப்படுகிறது. அதற்கு அடுத்தப்பாடலில் ''அவள் தீப்பாய்தலைக் கண்டு மதுரை பேராலவாயர் சொல்லியது'' என்ற செய்தியும் காணப்படுகிறது. இதிலிருந்து தீப்பாய்தல் என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளமை தெரியவருகிறது.

உடன்கட்டைஏறும்போது பெரும்பாலும் உற்றார் உறவினர் அவள் தீப்பாய்தலை தடுத்தனர் என்பதும், துணிந்து சில மனைவியர்

உடன்கட்டை ஏறினர் என்பதும் புறநானூறு 247வது பாடலின் மூலம் தெளிவாகிறது.

தீப்பாய விரும்பாத கைம்பெண்ணை வற்புறுத்தித் தீப்புகச் செய்ததாகச், சங்கத்தமிழில் சான்றுகளிலிருந்து நமக்கு தெரியவில்லை.

தீப்பாய்ந்த மகளிர் எண்ணிக்கை குறைவாகவே இருந்திருக்கும். உண்மையில் தீப்பாய்ந்தோர் வரலாறுகளை விட, கைம்மைநோன்பு நோற்றோரது வரலாறு மிகுதியும் காணப்படுகிறது.

உடன்கட்டைஏறுதலை வடமொழியில் 'ஸதி' (சதி) என்ற சொல்லால் குறித்தனர். இவ்வடமொழி சொல்லிற்கு 'நற்குணமுடைய மனைவி' என்பது பொருளாகும் என்றாலும், இச்சொல் கைம்பெண் கணவனோடு மரித்ததற்குத் 'தற்கொலை செய்து கோடல்' என்று மருவி பொருள்படுவதாயிற்று.

தன் கணவன் இறந்தபோது, அல்லது இறந்துவிட்டான் என்ற செய்தியை அறிந்தபோது, நெருப்பினை மூட்டிக் குளிர்ந்த நீரில் நீராடுவது போல் புகுந்து உயிரைவிடுவர். இவர்கள் 'இடைக்கற்பினர்' என்று சிறப்பாகக் கூறப்படுவர். இவர்கள் 'இரண்டாம் வகையினர்' ஆவர். இதனை

**''பெருங்கோட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்**
**நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்**
**பெருஞ்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற**
**வள்ளி த ழவித்த தாமரை**
**நள்ளிரும் பொய்கையுற் தீயுமோ ரற்றே''[13]**

என்று கூறுவதன் மூலம் தீ உண்டாக்குதல், தீப்பாயும் இடம், தீப்பாயும் பெண்களின் நிலை, தீப்பாயும் தன்மை போன்ற செய்திகளால் தெரிகின்றன.

நாயகனுடன் மரணமடைந்த கற்புடையாள், தங்கள் தேகத்தில் உரோம வரிசைகள் எவ்வளவு உண்டோ அவ்வளவு காலம் சொர்க்கத்து உறைவர் என்கிறது ‘அபிதான சிந்தாமணி’ என்று ‘சங்க இலக்கியம் கருத்தியல் வளம்’ என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

இறப்பிற்குப் பின்னால் ஒரு வாழ்க்கை உண்டென என்னும் பெண்களுக்கு, மேலுலக வாழ்க்கை சொர்க்கமாக அமையும் என்று ஆசையூட்டி, உடன்கட்டை ஏறுவதில் தவறில்லை என்ற எண்ணத்தை உருவாக்கிவிட்டனர். கல்வியறிவற்ற, கணவன்மீது அன்பும் அக்கறையும் கொண்ட பெண்கள், கணவனுக்காக என்று கூறினால், எந்தக் கட்டுக்கதைகளையும் நம்பிவிடுவர் என்றே எண்ணினர். இறந்த கணவனோடு சொர்க்கம் உறைவதும், உடன்கட்டை ஏறினால் சாத்தியமாகும் என்று வலியுறுத்தினர். பெண்களும் அதை அப்படியே நம்பினர்.

கணவனின் நலனுக்காக மட்டுமே மனைவி வாழவேண்டும் என்னும் எதிர்பார்ப்பினை உடைய சமூகம், அவன் இறப்பிற்குப் பின்னால் வாழக்கூடாது என்பதற்காகப் பல கட்டுக்கதைகளைக் கூறி நம்ப வைத்தது எனலாம்.

கற்பு ஒன்றினால் மட்டுமே, சமுதாயத்தில் நற்பெயர் பெறமுடியும் என்ற எண்ணத்தில் இருக்கும் பெண்களிடம், எந்தவிதமான அடக்குமுறைகளையும், கற்பு என்கிற கட்டுப்பாட்டுக்குள் விதிக்கமுடியும் என்று எண்ணினர். எனவே உடன்கட்டை ஏறுவதையும் கைம்மை நோன்பையும், கற்பொடு தொடர்புபடுத்தினர். கணவனோடு உடன் இறப்பவர்கள் ‘முதல்தரகற்பினர்’ என்று கூறுவதால் அதைப்பெற பெண்கள் கணவனின் சிதையில் விழுவதற்குத் தயாராக இருந்தனர்.

### 7.2.6 கலிங்கத்துப் பரணியில் காணப்படும் செய்திகள்

போர்க்களத்தில் பெரிய குருதி வெள்ளம் அதில் மதயானைகள் மாய்ந்து கிடக்கின்றன. அவற்றோடு அரசர்களுக்குரிய கொடிகளும் சாய்ந்து மடிந்து கிடக்கின்றன. இக்காட்சி சுடுகாட்டில் நெருப்பாகிய படுக்கையில் கணவனோடு கற்புடை மகளிர் உடன்கட்டை ஏறிக் கிடந்ததை ஒத்திருக்கிறது என்பதனை

''சாய்ந்து விழும் கடகளிற்றி னுடனே சாய்ந்து
தடங்குருதி மிசைப்படியும் கொடிகள் தங்கள்
காந்தருடன் கனல் அமளி அதன் மேல் வைகும்
கற்புடை மாதரை ஒத்தல் காண்மின் காண்மின்''[14]

கலிங்கத்துப்பரணி கூறுவதன் மூலம் அறியமுடிகிறது.

### 7.2.7 ஆனந்தப்பையுள்

கணவன் இறந்த பிறகு மனைவி துன்பமிகுதியால் மெலிந்து வருந்தியது, 'ஆனந்தப்பையுள்' ஆகும். தன் கணவன் இறந்த பிறகு தீயும், பொய்கையும் ஒன்றே என்று கூறி கைம்மைத்துயரைக் குறிப்பிடுவர்.

### 7.2.8 மணிமேகலையில் காணப்படும் செய்திகள்

மாதவி சுதமதியிடம் என் காதலன் உற்ற கடுந்துயர் கேட்டும், என் உயிர் போகவில்லை, அன்றே இவ்வூர் மக்களின் புகழுரையினையும், என் நாணத்தையும் இழந்துவிட்டேன் என்று கூறியபோது, அத்துடன் தன் காதற்கணவன் இறப்பின், எரிகின்ற நெருப்பினையுடைய ஊதுத்துருத்தி முனையிலே தோன்றும் அனலைப் போன்று பெருமூச்சு விட்டவராகத் தன் இனிய உயிரையும் நல்கிவிடுவர், பத்தினிப்பெண்கள் அவ்வாறு நல்காது நறுநீர்ப்பொய்கையில் நீராடுவோர் போன்று மிக்க மகிழ்ச்சியுடன் ஈமத்தீயுள் புகுந்து தன் இன்னுயிர் ஈவர் என்பதை

''காதல் நிறப்பின் கனையெரி பொத்தி
ஊது லைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர் ஈயாராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளிஎரி புகுவர்
நளியெரி புகாஅ ராயின் அன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு தோன்றுடன் படுவர்
பத்தினிப் பெண்டிர்''[15]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

அதிலும் புகார் ஆயின் தன் அன்பரோடு உடனுறைகின்ற வாழ்க்கையினை விரும்பி நோற்றவர்களாகிக் கைம்மைநோன்பு நோற்று தம்மை வருத்திக் கொண்டு நலிவர். இவை தம் கணவரையிழந்த கற்புடைப் பெண்டிர் தம் செயல்களாகக் கண்டுள்ளோம் என்று குறிப்பிடுவாள்.

## 7.3 உடன்கட்டை ஏறும்முறை

கணவர் இறந்தபின் அவர்தம் மனைவியர் உடன்கட்டை ஏறினர் என்ற செய்திகள் பல பாடல்களில் காணப்படுகிறது. எனினும் அவர்கள் எவ்வாறு உடன்கட்டை ஏறினர் என்பது பற்றிய செய்திகள் காணப்படவில்லை.

தொடக்கத்தில் காதலன் மறைவு தாளாது மடிந்த காதல் நிலையையே, உடன்கட்டைஏறுதல் காட்டுகிறது. கணவனுடன் உடன்கட்டை ஏறுவோரை 'நல்லோள்' என்று தொல்காப்பியரே குறித்துள்ளார். விருப்பப்போக்காக இருந்த உடன்கட்டைஏறுதல், காலப்போக்கில் கட்டாயப்போக்காக, காதலற்ற சமூகத்தில் வற்புறுத்தப்பட்டது. ''திணிப்பது தவிர்ப்பது ஆகும்'' என்ற விதிப்படி உடன்கட்டை ஏறுதல் எதிர்க்கப்பட்டது. பின்னர் நிறுத்தப்பட்டது.

உடன்கட்டைஏறுதல் ஆகிய இவ்வழக்கம் (1829ல்) பெண்டிங் பிரபு ஆட்சிக்காலத்தில் இராஜாராம் மோகன்ராயின் பெருமுயற்சியால் சட்டப்படி ஒழிக்கப்பட்டது. ஆனால் வடஇந்திய மாநிலங்களில் இன்றளவும் தொடர்கிறது. 1987 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஆறாம் நாள்

இராஜஸ்தான் மாநிலத்தில் தியோராலா கிராமத்தில் ருப்கன்வர் என்ற இளம்பெண் இறந்த கணவரோடு சேர்த்து எரிக்கப்பட்டாள். பெண்ணின் உயிரோடு இருத்தல் என்ற மனித உரிமைக்கு எதிரான இச்சதிக்குச் சட்டப்படி தீர்வு கிடைத்துள்ளது. ஆனால் சமுதாயப்பூர்வமான தீர்வு இன்னமும் வழங்கப்படவில்லை என்பதையே இந்நிகழ்வுகள் சுட்டிக்காட்டுகின்றன.

### 7.3.1 கணவனுடன் உயிர் நீத்தலுக்குரிய காரணங்கள்

பெண்கள் தம் கணவருடன் உயிர்விடுவதற்கும், இறந்துவிட வேண்டும் என்று எண்ணுவதற்கும், அவ்வக்கால சமுதாய, சமய, பொருளாதார அமைப்புகள் காரணங்களாக இருந்தன எனலாம். இதையே அடிப்படையாக வைத்து அதற்குரிய காரணங்களை வகைப்படுத்தலாம்.

1. கைம்மைத்துன்பம்
2. மிகுதியான அன்பு
3. மான உணர்வு
4. மேலுலகக்கோட்பாடு
5. தீயின் தூயத்தன்மை

### 7.3.2 கைம்மைத் துன்பம்

கைம்மைநோன்பு மிகக் கடுமையான விதிகளைக் கொண்டதாகயிருந்தது. கைம்பெண்கள் அணிகலன்களைக் களைந்து, கூந்தலை நீக்கி, தம்மை அழகற்றவர்களாக ஆக்கிக்கொண்டனர். காம உணர்வுகளைத் தூண்டும் உணவு வகைகளை நீக்கிவிட்டு, உயிர் வாழ்வதற்குத் தேவையான உணவுகளை மட்டுமே உண்ணவேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. எனவே உணவில் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. பஞ்சு போன்ற மென்மையான படுக்கைகளைத் துறக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இவற்றுக்கு மேலாக இளம்பெண்கள் இயற்கை உணர்வுகளைக் கட்டுப்படுத்த வேண்டியிருந்தது. கணவன்

இறந்த நிலையில் காமுறுதல், காமுறப்படல் ஆகியவற்றிற்கான உணர்வுகள் தம்பால் தோன்றாமைக்கு உதவும் வகையில் மனைவியர் மேற்கொண்ட செயல்களே கைம்மைநோன்பின் நிகழ்ச்சிகளாயின. எனவே கணவனுடன் உயிரைவிடத்துணிந்தனர். இத்தகைய துன்பத்திலிருந்து விடுபட இறத்தலே மேலானது என்று கைம்பெண்கள் எண்ணியிருத்தல் வேண்டும்.

### 7.3.4 மிகுதியான அன்பு

கணவன் மனைவி இருவரும் அதிகமான அன்பு கொண்டிருந்தனர். கணவரின் பொருள் வயிற்பிரிவைக் கூட தாங்காதவளாகி

**''செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்**
**வல்லரவு வாழ்வார்க்கு உரை''**[16]

என்ற குறட்பா கூறுகிறது. பொருள்வயிற் பிரிந்து சென்றால், சில காலத்திற்குப் பின் திரும்பி வந்துவிடுவான் என்றாலும், அப்பிரிவைக்கூட தாங்காமல் இறந்துவிடுவேன் என்கிறாள்.

**'' இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீ ஆகியர் என் கணவனை**
**யான் ஆகியர் நின்நெஞ்சு நேர்பவளே''**[17]

இப்பிறவியில் மட்டுமல்லாமல் மறுபிறவியிலும் சேர்ந்து, கணவன் மனைவியாகவே வாழ விரும்புகிறார்கள். இவ்வாறு அன்புடைய காதலர்களிடையே, நிலையான பிரிவு ஏற்படும்போது, அப்பிரிவை தாங்க முடியாமல் கணவன் இறந்தவுடன் மனைவியும் உயிரை விடத்துணிந்திருக்க வேண்டும்.

### 7.3.5 மான உணர்வு

அரச குடும்பங்களில் மன்னர், பகைவரிடம் தோற்று இறப்பின், அவர்தம் மனைவியர்நிலை இரங்கத்தக்கதாகவே இருந்தது. தோல்விபெற்ற மன்னனின் மனைவியரும், அந்நாட்டு அழகிகளும் வென்ற மன்னனின்

நாட்டுக்கு அடிமைகளாகக் கொண்டு செல்லப்பட்டனர். பகைவரது மகளிர்க்குத் தரப்படும் தண்டனை வேறுவிதமாக இருந்தது. நன்னன் தனது பகைவரைப் போரில் கொன்று, அவர்தம் உரிமை மகளிரைப் பற்றி வந்து, அவர் கூந்தலைக் கொய்து, அதனை கயிராகத் திரித்துப் பகைவரது யானைகளைப் பிணித்தான் என்று சங்க இலக்கியம் நற்றிணை கூறுகிறது.

இதுபோல் கடல்பிறக்கோட்டியசெங்குட்டுவனும் தன் பகைவனாகிய, பழையனுடைய உரிமை மகளிரது கூந்தலைக் கொய்தான் என்று பதிற்றுப்பத்துப் பதிகம் கூறுகிறது என்பதை

> **''பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்**
> **முழாரை முழுமுதல் துமியப் பண்ணி**
> **வால் இழை கழித்த நறும்பல் பெண்டிர்**
> **பல் இருங்கூந்தல் முயர்சியால்**
> **குஞ்சர ஒழுகை பூட்டி வெந்திறல்''**[18]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

பகைவரது நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட மகளிரை அடிமைத் தொழிலுக்கு மட்டுமின்றிப் பரத்தமை தொழிலுக்கும் பயன்படுத்தினர், இத்தகைய மகளிரைத் 'தொண்டி மகளிர்' என்று அழைத்தனர்.

இவ்வாறு அரசக் குடும்பத்திலும், பிற உயர்க்குடும்பத்திலும் உள்ள பெண்கள், பல்வேறு இன்னல்களைச் சந்திக்க வேண்டியிருந்தது. இவ்வின்னல்களை விடவும், மானத்தையே இழக்க வேண்டிய நிலைமை இருந்தது. மானமே உயிரென்று மதிக்கும் நம் சமூகத்தில் மானத்தை இழப்பதை விட உயிர்விடுதலே சிறந்தது என்று கருதப்பெற்றது.

மானத்தை இழக்க வேண்டிய சூழல் வரும் என்பதால், தன் கணவர் இறந்தவுடன் உயிர்விடவும் துணிந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### 7.3.6 மேலுலகக் கோட்பாடு

தமிழிலும் மேலுலக வாழ்வைப் பெரிதும் போற்றுகின்றன.

> ''இம்மை செய்தது மறுமைக்கா மெனும்
> அறவிலை வணிக னாயலன்''[19]

என்ற புறநானூற்றுப் பாடல் மறுமை வாழ்க்கையைக் குறிப்பிடுகிறது. நல்ல பல அறங்கள் செய்து வீடுபேறு அடைவதே மானுடத்தின் நோக்கம் என்று இலக்கியங்கள் கூறுகின்றன. கணவனுடன் இறக்கும் மகளிர் வானுலகில் நற்பேறு பெறுவர் என்று கூறப்பட்டது.

### 7.3.7 தீயின் தூயத்தன்மை

வேள்விகளில் கடவுளர்க்குரிய அவிர் பாகங்களை அக்கினியே பெற்றுக்கொள்வதாக வேதங்கள் கூறுகின்றன. வேதங்களில் வேள்விகளில் கடவுளர்க்குரிய அவிர்பாகங்களை, பிற கடவுளர்க்கு அக்கினி கொண்டு சேர்ப்பது போலவே மனிதர்களையும், மேலுலகிற்குக் கொண்டு சேர்க்கும் என்று நம்பப்படுகிறது. இதனை பதிற்றுப்பத்து நன்கு விளக்கும். சேரமான் பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாலை கௌதமனார் பத்துப் பாடல்களால் பாடிச் சிறப்பு செய்தார். அதன் பொருட்டு மன்னர், ''நீர் வேண்டிய பரிசில் கொண்மின்'' என்று கூறப் பாலைகௌதமனாரும்'' ''யானும் என் பார்ப்பிணியும் சுவர்க்கம் புகல் வேண்டும்'' என்றார். மன்னனும் ஒன்பது பெருவேள்விகள் வேட்பிக்கப்பட்டு, பத்தாம் வேள்வியில் மறைந்தனர் என்று பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்தின் அடிக்குறிப்பு கூறுகின்றது.

## 7.4 கைம்மை நோன்பு

கணவனை இழந்த மகளிர் 'கைம்மை மகளிர்' என்றும் 'கைம்பெண்' என்றும் குறிக்கப்படுவர். இன்று இவர்களை 'விதவை' என்று அழைக்கின்றோம். பழைய நூல்களில் இச்சொல் இல்லை. 'வைதவ்யம்'

என்னும் வடசொல் விதவை நிலையைக் குறிப்பதாகும். இச்சொல்லின் அடிப்படையில்தான் பிற்காலத்தில் தோன்றியது 'விதவை' என்ற சொல்லாகும்.

கணவனை இழந்த பெண்கள் கணவனின் நினைவாக நோன்பு நோற்று வாழ்வதனை 'கைம்மைநோன்பு' என்று குறிப்பிடுவர். இதனை 'தாபத நிலை' என்று இலக்கண நூலார் கூறுவர். இது மிகுந்த துன்பத்தைத் தருவது, அஃறிணை உயிர்கள் கூட, இக்கைம்மை நோன்பை ஏற்க விரும்புவதில்லை என்பதனை கரவீரனார் பாடல் மூலம் அறியமுடிகிறது.

''கருங்கண் தாக்கலை பெரும் பிறி துற்றெனக்
கைம்மை உய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளை முதற் சேர்த்தி
ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்து உயிர் செருக்கும்''[20]

ஆயினும் இலக்கியங்களில் நோன்பு நோற்கும் பெண்களை 'உயவற்பெண்டிர், கழிகலமகளிர்' என்று குறிப்பிடுகிறது.

கணவன் இறந்தவுடன் மனைவியும் அவனுடன் சேர்ந்து இறந்து விடுதல் வேண்டும், இல்லைஎன்றால் இயல்பான வாழ்வில் இருந்து விலகி தன்னைத்தானே வருத்திக் கொள்ளவேண்டும். கைம்மை என்ற பெயரில் அந்த முறைகளில் இருப்பவரே 'பத்தினிப்பெண்டிர்' என்று கருதப்பட்டனர்.

கற்பினை முறையுறுத்தும் பிறிதொரு கூறு கைம்மைநோன்பாகும். கணவனை இழந்த பெண்கள் உடனுயிர் துறந்தனர், உடன்கட்டை ஏறினர் அல்லது கைம்மை வாழ்வு வாழ்ந்தனர். அடுத்து வரும் பிறவிகளிலும் கணவனைக் கூட வேண்டி கைம்மைநோன்பு நோற்றனர். தொல்காப்பியமும் கைம்மை வாழ்வைக் கூறியுள்ளது. எனவே தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே கைம்மை வாழ்வு வழக்கில் இருந்தது என்பது பெறப்படுகிறது.

தொல்காப்பியர் கணவன் இறந்த பின்னர் மனைவியின் நிலையினை இரண்டு பிரிவாகப் பிரித்துள்ளார்.

1. கணவனோடு உயிர்துறத்தல்
2. கைம்மை நோன்பை நோற்று வாழ்தல்

''காதலன் இழந்த தாபத நிலை''[21]

என்று தொல்காப்பியம் குறிப்பிடும். தன் கொழுநன் இறந்ததும் அவன் மனைவி கைம்மை நோன்பு எய்தும் நிலை தாபத நிலை ஆகும்.

தாபத நிலை என்ற தொடரில் உள்ள தாபதம் என்பதற்கு துறவு, தவம் என்பன பொருளாகும்.

''நாலிரு வழக்கின் தாபதப்பக்கமும்''[22]

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு உரையெழுதும் இளம்பூரணர் 'தாபதம்' என்பதற்குத் 'துறவு' என்றே பொருள் கூறியுள்ளார். எனவே கணவனை இழந்த மனைவி மேற்கொள்ளும் துறவு வாழ்க்கையே தொல்காப்பியரின் தாபத நிலை என்ற துறை குறித்திருத்தல் வேண்டும்.

### 7.4.1 சங்க இலக்கியங்களில் கைம்மை நோன்பு

சங்க இலக்கியப் பாடல்கள் கைம்மை வாழ்வைக் குறிப்பிடுகின்றன. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் பகைவர் தம் மனைவியர் தம் கணவன் இறந்தவுடன் மார்பம் அழல அறைந்து கொண்டு அழும் மகளிர் தம் வளைகள் வாழைப்பூவைப்போல் சிதறி விழுந்தன என்பதை

''அறன் இல் கூற்றம் திறன் இன்று துணிய
ஊழின் உருப்ப எருக்கிய மகளிர்
வாழைப் பூவின் வளை முறி சிதற
முதுவாய் ஒக்கற் பரிசிலர் இரங்க''[23]

என்று கூறுகிறது. அம்மகளிர் அறிவு மயங்கிக் கைம்மை கொண்டு அறலையொக்கும் கூந்தலைக் கொய்தனர். ''கணவனை இழந்தப் பெண்டிர் குளிர்ந்த நீரின்கண் மூழ்குவர். பசிய இலையினை உண்பர். நெய் ஊற்றப் பெறாமல் இலையுடன் கூடிய நீர்ச் சோற்றுத்திரளுடன் புளியைக் கூட்டி செய்யப்பெற்ற வேளைக்கீரையை உணவாக உண்பர்''.[24] ''பரற்கற்களால் ஆன படுக்கையின் கண் பாயின்றி தூங்குவர்''.[25] ''தன் கணவன் விண்ணுலகத்தை சென்று புக, அவனுக்கு உணவு கொடுத்தல் வேண்டிச் சிறிய இடத்தைத் தனது கண்ணீராலே சாணத்தைக் கொண்டு மெழுகுவார்''.[26] ''குறுவளையைக் களைவர் அல்லியரிசியாகிய உணவினை உண்பர்''.[27] ''தம் அணிகளைக் கழிப்பர்''[28] எனச் சங்க இலக்கியங்கள் கைம்மை வாழ்வை விளக்குகின்றன.

இச்செய்திகள் எல்லாம் கைம்மை வாழ்வு சமுதாயத்தில் நன்கு வளர்ச்சி பெற்றுள்ளது என்பதையே காட்டுவனவாக உள்ளன. எனவே சங்க காலத்திற்கு முன்பே தமிழரிடையே கைம்மை வாழ்வு வழக்கில் வந்துவிட்டமை தெளிவு.

### 7.4.2 கைம்மை முறைகள்

கைம்பெண்டிரின் வாழ்க்கை முறைகள் பற்றி சங்க இலக்கியங்கள் கூறியுள்ளன. அவ்விலக்கியச் செய்திகளை அடியொற்றிக் கைம்மை முறைகளை

1. கூந்தலைக் களைதல்
2. அணிகளைக் களைதல்
3. தரையில் பாயின்றி படுத்துறங்குதல்
4. உணவில் கட்டுப்பாடு
5. கணவனுக்குப் பிண்டமளித்தல்
6. குளிர்ந்த நீரில் மூழ்குதல்

என்று ஆறு வகைப்படுத்தலாம்.

### 7.4.3 கூந்தல் களைதல்

கணவனை இழந்த மகளிர் கைம்மை நோன்பை நோற்கும் பொருட்டு அழகியக் கூந்தலைக் கொய்தனர் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. தலைவனை இழந்த பெரிய இல்லமானது கணவனை இழந்து கொய்து மழிக்கப்பட்ட தலையோடு கைம்மையுற்று கலங்கிய மகளிர் போல பொழிவற்றிருந்தமையை

> ''இவன் வேல் விடலை இன்மையின் புலம்பி
> கொய்ம் மழித் தலையொடு கைம்மை புறக் கலங்கிய
> கழிகல மகடூஉப் போலப்
> புல்லென்றனையால் பல் அணி இழந்தே''[29]

என்ற பாடல் சுட்டுகிறது. இச்செய்திகள் எல்லாம் கைம்பெண்கள் கூந்தல் களைந்தமையை விளக்குகின்றன.

### 7.4.4 கூந்தல் களைதல் வழக்கமானவை

கைம்பெண்கள் கூந்தல் களைந்தமை தமிழரிடம் வழிவழியாகப் பெறப்பட்ட வழக்கமாகவே இருந்திருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. சில சங்கப் பாடல்களை ஆராய்ந்து அவைதரும் செய்திகளை அடியொற்றிக் கூந்தல் களைதல் தொடர்பாக சில கருத்துக்கள் பெறப்படுகின்றன.

1. ''கூந்தல் உரிமை தலைவனுக்கு கணவனுக்கு மட்டுமே உரியது எனத் தெரிய வருகிறது. கூந்தலில் மலரணியும் உரிமையும், துயிலும் உரிமையும்''[30] கணவனுக்கு வழங்கப்பெற்றமையை அறியமுடிகிறது. இவ்வுரிமை கருதியே தலைவனை 'கூந்தல்கிழவர்' என்று அழைத்தனராதல் வேண்டும்.

2. திருமணம் ஆகாத மகளிரின் கூந்தலை தீண்டுவதற்கு இயலாது என்பதைக் 'குமரிக்கூந்தல்'[31] என்ற சொல்லால் குறிப்பிடப்படுகின்றது. இக்கூந்தல் கணவனுக்கு மட்டுமே அல்லது

வருங்கால கணவனுக்கு மட்டுமே உரியது என்பதை இத்தொடர் உணர்த்துகிறது.

3. கூந்தலில் முல்லைப் பூவினைச் சூடுவது திருமணத்தின் அடையாளக் குறியாகும். ஒரு பெண் திருமணம் ஆனவள் என்பதை முல்லைப்பூவே சுட்டிக் காட்டும்

4. தலைவனைப் பிரிந்திருந்த காலத்தில் மகளிர் கூந்தலில் நெய் பூசுவதையும், மலர் அணிவதையும் ஒழித்திருந்தனர் என்பதும் தெரிகிறது.[32]

5. உரிமை மகளிரின் கூந்தலைக் கொய்வது, மன்னன் ஒருவரின் உரிமையைப் பறிப்பது போன்றதாகும். அதாவது, அவனைத் தண்டிப்பது அல்லது அவமானப்படுத்துவது போன்றதாகும்.

இவற்றிலிருந்து இரண்டு செய்திகள் தெளிவாகின்றன.

1. கூந்தல் தலைவனுக்கு மட்டுமே உரிமை உடையது.

2. கணவன் பார்த்து ரசிக்க அவன் இல்லாது, பிரிவின்போது கூந்தலுக்கு ஒப்பனை செய்யாதது. இதன் அடிப்படையில் பார்த்தால் கணவனுக்கு உரிமை உடைய கூந்தல், அவன் இறந்த பொழுது அவனுடைய உரிமை கருதி களையப் பெற்றிருத்தல் வேண்டும்.

கணவன் பிரிந்த காலத்தில் ஒப்பனை செய்யப்படாது விடப்பட்டிருந்த கூந்தல், கணவர் வருவது தெரிந்தால் ஒப்பனை செய்யப்பட்டது. அவனுக்காவே அவன் வரவை எதிர்நோக்கிக் காத்திருந்தது. கணவர் இறந்தபோது காத்திருத்தலும் தேவையில்லாமல் போய்விட்டது. ஒப்பனையும் தேவைப்படாமல் போனது. கூந்துலும் தேவையேயில்லாத ஒன்றாகிவிட்டது.

''தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றுள்ளதால் தலைவி தோழியிடம் வருந்திக் கூறுவதாக வரும் பாடலில் நம் தலைவர்

கொத்தாகவுள்ள நெறிப்புடன் கூடிய மலர்ச்சாந்தணிந்த கூந்தலை வளரச் செய்து அதில் மலரைச் சூட்டுவான். மணம் கமழும் நெற்றியில் பொட்டிடுவார். புதிய மலர்களைக் கிள்ளி எடுத்து அவ்வம் மலர்களின் பூந்துகள்களை அழகிய முலைகளில் அப்பி மகிழ்வார் என்று குறிப்பிடும் போது தலைவன் தன் கையால் தலைவிக்கு ஆசையுடன் பூ சூட்டியதும், அன்புடன் திலகமிட்டதும் அவனுடைய இறப்பிற்குப் பின் தலைவி இரண்டையும் இழந்தாள் என்பதாகும்''.[33]

### 7.4.5 அணிகலன்களைக் களைந்து விடுதல்

கைம்பெண்கள் தம் அழகுக்கு அழகு சேர்க்கும் அணிகலன்களை தம் அழகினைச் சிதைக்கும் வகையில் அணிகலன்களைத் துறந்தனர். இதனை 'கழிகல மகடூஉ' என்ற சொல் விளக்கும்.[34] கலன்கள் அணிகலன்கள் கழித்த பெண் என்பது பொருளாகும். கரிகாலன் இறந்தபோது அவனது உரிமை மகளிர் பூ முதலிய அனைத்தையும் உதிர்த்து நின்ற வேங்கை மரம் போல அணிகலன்கள் முழுவதையும் துறந்தமையை புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது.

### 7.4.6 தரையில் பாயின்றிப் படுத்துறங்குதல்

பஞ்சினால் செய்யப்பட்ட மென்மையான படுக்கை விரிப்புகள் கைம்பெண்கள் பயன்படுத்த ஆகாது என விலக்கப்பெற்றன. பரற்கற்கள் பெய்யப்பட்டது போன்ற படுக்கைகளைக் கைம்பெண்கள் பயன்படுத்தினர் என்பதை

> ''பரற் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்
> உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ''[35]

என்ற புறநானூற்றுப் பாடல் கூறுகிறது.

### 7.4.7 உணவில் கட்டுப்பாடு

கைம்பெண்ணுக்கு உணவு வகைகளில் கடுமையான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன. இந்தக் கட்டுப்பாடுகள் அவர்களை, அவர்களது உணர்வுகளை ஒரு நிலைக்குள் கட்டுப்படுத்தியிருக்க வேண்டும் என்பதற்காக பசிய இலைகளை உண்டதாக

"அணில் வரிக் கொடுங் காய் வாள் போழ்ந்திட
காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது
அடை இடைக் கிடந்த கை பிழி பண்டம்
வெள் எட் சாந்தொடு புளிப் பெய்து அட்ட
வேளை வெந்தை வல்சி ஆக"[36]

என்று புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. உணவில் நெய் சேர்க்கப் பெறுதல் இல்லை. கீரையுடன் கூடிய நீர்ச் சோற்றுத் திரளுடன் புளியைக் கூட்டிச் செய்யப் பெற்ற வேளைக்கீரையை உணவாக உண்டனர். அல்லியரிசியை உண்டனர் என்பதை புறப்பாடல் குறிப்பிடுகிறது.

### 7.4.8 கணவனுக்குப் பிண்டமளித்தல்

கணவனை இழந்த பெண்கள் கைம்மை நோன்பு மேற்கொண்டு மேலுலகில் இருக்கும், வாழும் கணவனுக்கு பிண்டமளித்தனர். இப்படி பிண்டமளித்தமையை கணவன் ஏற்றுக் கொள்வதாக நம்பப்பட்டது. கணவனை இழந்த பெண் ஒருத்தி தன் கணவனுக்குப் பிண்டமளிக்க வேண்டி, இடத்தை தன் கண்ணீரால் மெழுகினாள் என்ற செய்தியை[37] புறப்பாடல் குறிப்பிடுகிறது. தலைவன் பலரோடு உண்டவன் அப்படிப்பட்ட தலைவன் தன் தலைவி, புல்மேல் வைத்த சிறுபிண்டத்தை எப்படி உண்டானோ என்று புலவர் வருந்துவதாக

"பிடி அடி அன்னசிறு வழி மெழுகி
தன் அமர் காதலி புல்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்கு உண்டனன் கொல்"[38]

என்ற புறப்பாடல் குறிப்பிடுகிறது.

### 7.4.9 குளிர்ந்த நீரில் மூழ்குதல்

"கணவனை இழந்த பெண்கள் குளிர்ந்த நீரில் மூழ்கி நோன்பு இருந்தனர் என்பதை ஒரு புறநானூறு பாடல் குறிப்பிடுகின்றது. போர்க்களத்தில் வீழ்ந்து இறந்த வீரர்களின் மார்பகம் பொருந்தி, அவருடைய மனைவியர் உயிர்விட்டனர். இவ்வாறு அவர்கள் உயிர் விட்டமையால் அவர்கள் இலையுணவை உண்ணாததிலிருந்தும், குளிர்ந்த நீரில் மூழ்குதலினின்றும் விடுபட்டனர் என்ற செய்தி தெரியவருகிறது". [39]

திருப்பரங்குன்ற மலையில் பல ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. ஓவியங்களைப் பார்த்த சில ஆடவர் தம் பெண்டிர் வினவ இவன் காமன், இவன் ரதி என்று விடையளித்தனர் என்ற செய்தி காணப்படுகிறது.

"விரகமாவது கணவரைப் பிரிந்த பெண்டிர் உறும் காமநோயாகும்"[40] இங்கு விரகியர் வினவியதன் நோக்கமாவது தாம் தன் கணவன்மாரைப் பிரிய அஞ்சினர் என்பதனைக் காட்டுவதாகும். இதனால் இவர்களால் காணப்பட்ட ஒன்றிய சுடர்நிலை திங்களும் உரோகிணியும் உடனிருக்கும் நிலையை உணர்த்தும் ஓவியம் உய்த்துணரப்படும்.

கணவனைப் பிரிந்திருந்த பாண்டிமாதேவி திங்களும் உரோகிணியும் உடனிருப்பதாக வரையப்பட்ட ஓவியத்தைக் கண்டு கண்ணீர் விட்டமையை நெடுநல்வாடையால் அறியலாம்.

## 7.5 பருத்திப் பெண்டிர்

கணவனை இழந்த பெண்கள் நூற்புத் தொழிலில் ஈடுபட்டனர். இவர்களைப் 'பருத்திப்பெண்டிர்' என்று அழைத்தனர்.

**"பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து"[41]**

பருத்திப்பெண்டின் சிறுதீ விளக்கின் ஒளியில் கோழி சேவலோடு கூடித் தன்னுடைய நடுக்கம் தீர்ந்தது கைம்பெண் தம் தனிமைத்

துயரினின்றும் நீங்கவும் பிழைப்பின் பொருட்டும் ஆடை நெய்ய நூல்நூற்பர் என்பதைக் கூறுகிறது.

ஒய்வாகவும், பொறுமையாகவும், மன ஒருமைப்பாட்டோடும் செய்ய வேண்டிய செயலாதலின், அன்று மகளிர் இதனை மேற்கொண்டது பொருத்தமுடையதாகவே உள்ளது.

ஏதும் ஆள் துணையோ, எந்தவகையான ஆதரவோ அற்ற பெண்டிர் பல வேலைகள் செய்து பிழைத்தனர். அதில் முதன்மையாக பருத்தி நூல் நூற்றல் அமைந்தது. இதனால் 'பருத்திப்பெண்டிர்' என்று அழைத்தனர்.

கணவன் இறப்பு, தனிமை, உரிய ஊதியம் கிடைக்காத நிலை வறுமை, உலகின் வெறுப்பு, கைம்மைநோன்பு ஆகிய இத்துணைத் துன்பங்களும் இருந்தன.

## 7.6 திலகம் இழத்தல்

திலகம் இழத்தல் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் கூறப்படவில்லை. பெண்கள் திலகம் அணிந்திருந்தனர் என்பதை நற்றிணை

> **"..... முள் எயிற்று**
> **திலகம் தைஇய தேம் கமழ் திருநுதல்**
> **எமதும் உண்டு"[42]**

குறிப்பிடுகிறது.

பிற்காலத்தில் தமிழ்ப்பண்பாட்டில் திலகம் இடுதல் சிறப்பாகக் கருதப்பெற்றது. மகளிர் மங்கலத்தன்மைக்குச் சான்று பகர்கின்றது. கைம்பெண்ணாக மாறும்போது தாலியோடு திலகம் இடுதலையும் இழத்தல் மரபாக்கப் பெற்றது. சங்க காலத்திற்குப் பின் இரட்டைக்காப்பிய காலத்தில் 'திலகம் இடுதல்' மங்கலக் குறியீடாகக் கருதப்படவில்லை. 'மங்கல அணி அன்றிப் பிறிதணி மகிழாள்' என்ற பாடலடி மங்கல அணி கணவன் இறந்தாலன்றி களைதல் ஆகாது என்ற கருத்தைக் கூறுகிறது.

பிற்காலத் தமிழ் பண்பாட்டின்படி திலகம் இடுதல் மங்கல அணிக்கு இணையாகக் கருதப் பெற்றிருக்குமாயின் கண்ணகி கோவலனைப் பிரிந்த காலத்திலும், திலகம் இட்டிருக்க வேண்டும். ஆயின் அவ்வாறு திலகம் இடவில்லை. இதனை 'பவள வானுதல் திலகம் இழப்ப' என்ற பாடலடி விளக்குகிறது. ஆக திலகம் ஒருவகை அணி அல்லது ஒப்பனையாகக் கருதப்பெற்ற காலத்தில் அதனை இழத்தல் தவறாகக் கருதப்பெறவில்லை. ஆயின் பிற்காலத்தில் திலகம் இடுதல் மங்கல அணிக்கு இணையாகக் கருதப் பெற்று, மங்கலக் குறியீடாக ஆக்கப்பெற்றது. இவ்வாறு ஆக்கப் பெற்றதால் தான் கணவன் பிரிந்த போதும் திலகம் இடுதலை பெண்கள் விலக்கவில்லை. பிறகு மங்கலத் தன்மையை இழக்கும்போது திலகத்தையும் இழந்தனராதல் வேண்டும்.

> ''நுசுப்பு அழித்து ஒலிவரும் தாழ் இருங்கூந்தல்
> மாக விசும்பின் திலகமொடு பதித்த
> திங்கள் அன்னநின் திருமுகத்து''[43]

நிலவை மாதர் முகத்துக்கு உவமை கூறும் மரபு ஆகும்.

> ''மாதர் முகம் போல ஒளிவிட வல்லையேல்
> காதலை வாழி மதி''[44]

என்றும் கூறப்பட்டுள்ளது.

## 7.7 வெண்ணூல் சூட்டுதல்

திருமணம் ஆகும் மகளிர்க்கு வெண்ணூல் சூட்டப்பெற்றதை

> ''மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
> பழங்கன்று கறித்த பயம்பு அமல் அறுகைத்
> தழங்கு குரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற
> மண்ணுமணி அன்ன மா இதழ்ப் பாலைத்
> தண்முறு முகையோடு வெண்நூல் சூட்டி
> தூஉடைப் பொலிந்து மேவரத் துவன்றி''[45]

என்று அகநானூறு கூறுகின்றது. இப்பாடலில் வாகையிலையினையும், அறுகம்புல்லின் கிழங்கினையும் முகையோடு சேர்த்துக் கட்டிய வெண்ணூல் மணமகளுக்கு அணிவிக்கப் பெற்றதாகக் கூறப்படுகிறது. இது தாலியை ஒத்து இருந்ததாகக் கருதற்குரியது. தாலியின் தோற்றம் வெண்ணூலாக இருந்திருக்கலாம் என்று கருதத் தோன்றுகிறது.

## 7.8 மங்கல அணி

மங்கல அணி / தாலி பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் குறிப்பாகவே கூறப்பட்டுள்ளது. விரிவான விளக்கங்களும், தெளிவுகளும் சங்க இலக்கியங்களில் இல்லை.

> **''ஆரம் தாங்கிய அலர்முலை ஆகத்துப்**
> **பின் அமை நெடுவீழ் தாழ துணை துறந்து**
> **நல்நுதல் உலறிய சில்மெல் ஓதி''[46]**

முன்பு அரச மாதேவியின் முத்துக்கள் பதித்துச் செய்யப்பட்ட கச்சுத் தாங்கிய பருத்த முலையைக் கொண்ட மார்பில் குத்தும் தன்மையைக் கொண்ட நீண்ட தாலி நாண் ஒன்று மட்டும் தொங்கிக் கிடந்தது என்று நெடுநல்வாடையில் 'தாலி' என்பது 'நெடுவீழ்' என்று குறிக்கப்பட்டுள்ளது பெறப்படுகிறது.

## 7.9 உடை

கைம்பெண்கள் கூந்தலை நீக்கி, அணிகலன்களைத் துறந்து, அல்லியரிசியை உணவாக்கி, பஞ்சு மெத்தையில் படுக்காமல், பரற்கல்லில் படுத்து உறங்கி கைம்மை நோன்பு நோற்று வாழ்க்கை நடத்தினர் என்பன போன்ற பல குறிப்புக்கள் காணப்படுகின்றன. ஆனால் உடையில் கைம்பெண்கள் என்ன வகையான ஆடை அணிந்தனர் என்பன பற்றிய குறிப்புக்கள் காணப்படவில்லை. பிற்காலத்தில் காவி உடை தரித்து சன்னியாசிகள் உடைபோல உடுத்தினர் அல்லது வெள்ளைச் சேலையே அணிந்தனர் என்பது தெரிகிறது.

பிற மகளிரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டச் சமுதாயம் விதித்த விதியாக இருக்கலாம் அல்லது அவர்கள் தங்கள் மங்கல வாழ்வு முடிந்தது என்ற எண்ணத்தில் மனம் தூய்மையாக இருக்கவும், பிறர்க்குத் தம்மை உணர்த்துவதோடு பிறர் தம்மை விரும்பாதிருக்கவும் எண்ணி வெண்ணிற ஆடை புனைந்திருக்கலாம்.

மணிமேகலையில் மணிமேகலை வெள்ளாடை உடுத்தி எளிமையாகக் காட்சி தந்ததாக

**''புனையா ஓவியம் புறம்போந்தன்ன''**[47]

என்று சாத்தனார் குறிப்பிடுகிறார். வெள்ளாடையை துறவிகள் அணிந்தனர் என்பது தெரிகிறது.

இறந்த வீரர்களின் உடலை தூய வெள்ளையாடையால் மூடும் வழக்கம் இருந்தது என்பதை

**''புலைத்தி கழீஇய தூவெள் அறுவை''**[48]

என்று பாடல் குறிப்பிடுகிறது. இது பண்டைய மரபாகத் தெரிகிறது. அரசனால் மதிக்கப்பட்ட தன் மகன் அரசனுக்காகப் போர் புரிந்து உயிரையும் விடும் வாய்ப்பு கிடைக்கவில்லையே என்று தாய் வருத்தப்படும் பாடலில்

**''பலர்மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்**
**கால்கழி கட்டிலில் கிடப்பி**
**தூவெள் அறுவை போர்ப்பித்திலதே''**[49]

என்ற வரியிலிருந்து தூய வெள்ளாடை போர்த்தப்படுகிறது தெரியவருகிறது.

## 7.10 கைம்மை நோன்பும் மாற்று நோன்பும்

கைம்மை நோன்பு மிகக் கடினமான விதிமுறைகளைக் கொண்டிருந்தது. இக்கைம்மைத் துன்பத்திலிருந்து விடுபெற இரு வழிகள் உள்ளன.

1. தீப்பாய்ந்து உயிர்விடுதல்
2. சமயத்துறவு மேற்கொள்ளுதல்

மாதவி துறவியானதன் மூலம் கைம்மை நோன்பிலிருந்து விடுபெற்றாள். உலகியல் துன்பங்கள் அனைத்தையும் ஒழிப்பது பௌத்த சமயத்தின் தலையாயக் கொள்கையாகும். கைம்மை என்ற துன்பத்திலிருந்து விடுபெற மாதவி துறவு பூண்டாள் எனல் வேண்டும். கைம்பெண்கள் துறவு பூண்டதன் மூலம் இரண்டு நன்மைகள் விளைந்துள்ளன.

1. கைம்மையின் இழிவு, சமூக ஒதுக்கம் போன்றவற்றிலிருந்து வீடு பேறு
2. மாயப்பிறப்பறுத்து உய்வு பெறுதல்

இந்துமத விதிகளின்படி விதவை முகத்திரையிட்ட பெண், துறவியாக உலகத்தையே துறக்கவேண்டும். தலைமுடியைக் களைத்து அணிகலன்களை நீக்கி, எளிமையான ஆடைகளையே உடுத்த வேண்டும். அவளுடைய வரவு தீயநிமித்தத்தின் அறிகுறி எனக் கருதப்பட்டதால் அவள் குடும்பத்தின் நன்நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளக்கூடாது. அனைத்துத் துன்பங்களுக்கும் மேலாக அவள் கணவனின் இறப்பு அவள் முற்பிறவியில் செய்த தீமைகளின் விளைவு என்று கருதப்பட்டது.

## 7.11 கூந்தலின் வகைகள்

பழங்காலத்தில் கூந்தலை ‘ஐம்பால்’ என்று வழங்குவர். மகளிர் கூந்தல் உச்சியில் முடிதல், பக்கத்தில் முடிதல், பின்னிச் செருகல், சுருட்டி முடிதல், சடையாகப் பின்னிவிடுதல் என ஐவகையால் ஒப்பனை

செய்யப்படும். இவை முறையே முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை எனப்படும்.

நீராடும்போது பெண்கள் அணிந்த பத்து வகைத்துவரினும், ஐந்து வகை விரையினும், முப்பத்திருவகை ஓமாலிகையானும், ஊறிக் காயப்பட்ட மணநீர் (சாறும்) சந்தனக்குழம்பு (சேறும்) நறுமணமுள்ள எண்ணெயும் மலர்களும் ஆகிய அனைத்தும் நீரில் கலப்பதால் ஆற்றுநீர் மணக்கும்படியாக ஓடியது என பரிபாடல் கூறுகிறது.

> ''வலியோர் புதுப்புனலை உள்புக்காடுதலாற்
> பத்துத் துவர் முதலாயின ஊறின நீரும் சந்தன
> முதலியவற்றது குழம்பும் வாச எண்ணெயும் சூடிய
> பூக்களும் நாற ஒழுகாநின்றது, இவ்வியாறு
> வருகின்றவாறு''

என்கிறார் பரிமேலழகர்

> ''பத்துத் துவரினும் ஐந்து விரையானும்
> முப்பத் திருவகை யோமா விகையினும்
> ஊறின நன்னீர் உரைத்த நெய் வாசம்
> நாறிருங் கூந்தல்''[50]

என்று இளங்கோவடிகள், மாதவி அணிந்த மணப்பொருள்களைக் குறிப்பிடுகின்றார்.

வைகையில் நீராடும் பெண்களில் சிலர், தம் தலையில் தமாய எண்ணெய் நீங்குமாறு நுண்ணிய அரைப்புத்தூளைத் தேய்த்துப் பிசைந்தனர் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. பெண்கள் தலையில் அணியும் அணி 'தலைக்கோலம்' எனப்படும். இவ்வணி பல வடிவங்களில் செய்யப்படுவது இங்கு மகர மீனின் வடிவில் செய்யப்பட்ட 'மகர வலயம்' குறிக்கப்பட்டது.

கரையில் அம்மகளிரால் உண்டாக்கப்பட்ட தீயினால் கொளுத்தப்பட்ட அகிலின் நறுமணப் புகை வையைக் கரையின் பக்கத்திலுள்ள பூஞ்சோலைகளில் பரவியது என்று கூறப்பட்டுள்ளது.

### 7.11.1 கூந்தலில் சூடிய மலர்கள்

கணவனை இழந்த பெண்கள் தங்கள் கூந்தலை நீக்கி தங்களை அழகற்றவர்களாக்கிக் கொண்டனர். கணவர் உயிருடன் இருக்கும் போது கூந்தலை முடித்து, பூச்சூடி அழகு செய்து கொண்டனர்.

தலைவன் தலைவியை மணம்புரியும் நாளில் தன் காதலியின் கூந்தலில் மலர்ச்சூட்டும் சடங்கினைச் செய்வான். களவுக்காலத்தில் பிறர் அறியா வண்ணம், அவள் கூந்தலில் மலர் அணிந்து மகிழ்ந்து தலைவன், இப்போது கற்பு காலத்தில் திருமணத்தன்று, இவ்வதுவைச் சடங்கிலும், அவளுடைய பின்னப்பட்ட கரிய கூந்தலில் மலர் அணிந்து இனிய செயலினைச் செய்தான்.

திருமணச் சடங்கில் மணமகன், மணமகள், கூந்தலில் மலரணிதல் இன்றும், வழக்கமாக உள்ளது. இதனாலேதான் 'கூந்தற்கிழவன்' என்று தலைவனை அழைத்தனராக இருக்கலாம்.

பெண்ணின் கூந்தலுக்கு உரிமையுடையவன் எவனோ, அவனே அவள் கூந்தலில் மலரணிய உரிமையுடையவன் என்பதே தமிழ் நாகரிகமாகும்.

அல்லி, அனிச்சம், ஆம்பல், அவிரம், கல்லகாரம், காஞ்சி, காந்தள், குருக்கத்தி, குவளை, குளவி, கொன்றை, ஞாழல் (புலிநகக்கொன்றை), செண்பகம், செங்கருங்காலி, தாழம்பு, நரந்தம், நறா, நீலம், பகன்றை, வெண்கடம்பு, வேங்கை, ஆகிய மலர்களை கூந்தல் ஒப்பனைக்கு சங்ககால மகளிர் பயன்படுத்தினர்.

### 7.11.2 மணப்பொருட்கள்

குங்குமக் குழம்பு, அகிற்சாந்து ஆகியவற்றை பலவாகிய கற்பூரங்களுடன் சேர்த்து சாந்து அரைக்கும் அம்மியிலிட்டுக் குற்றமற்ற குழவியினால் மேற்கண்ட பொருள்களை ஒன்றாக்கி, வேள்விக் குண்டத்திலிருந்து எழும் நெருப்பில் நிறம் போல சிவந்து தோன்றுமாறு அரைத்தனர். இவ்வாறான மணச்சாந்தினை மகளிர் அணிந்து கொள்வது வழக்கம். வைகை ஆற்றில் நீராட வரும் மகளிர் நான்கு காததூரம் நறுமணம் கமழும் உடம்பினையுடையவராக விளங்கினர் என்றசெய்தியும் பரிபாடலில் கூறப்பட்டுள்ளது.

கணவனை இழந்த பெண்கள், கைம்மை மேற்கொண்டு வாழும்போது, குளிர்ந்த நீரில் மூழ்கிக் குளித்தனர் என்பது போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன. கணவர் உயிருடன் இருந்த போது, அவர்கள் மணப்பொருட்களை அரைத்து உடலில் பூசி குளித்து வந்தனர்.

## 7.12 படுக்கை

சிறுபூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு, சேணம், அன்னத்தின் தூவி ஆகிய ஐந்து பொருள்களும் இடப்படுவதால் படுக்கைக்குப் 'பஞ்சணை' என்று பெயர். இடமகன்ற காட்டுப் பகுதியில் பூத்த முல்லைப் பூக்களும் அவற்றில் வேறுபாடு புலப்படும்படி, ஏனைய பல பூக்களும் கட்டிலின் மேல் நிரப்பப்பட்டுள்ளன. கட்டிலின் மேல் இரண்டாக அமைந்த படுக்கைகள் இணைத்து இடப்பட்டன. மென்மையான துணியால் அவை போர்த்தப்பட்டன. அன்னப்பறவை, எலும்பும் உருகும் வண்ணம் அன்புடன் தன்னுடைய துணையைத் தழுவும் போது ஏற்படும் உடல் வெப்பத்தால் அதன் உடலிலிருந்து நுண்மயிர் உதிரும் அதனைப் படுக்கையின் மீது பரப்புவர். அப்படுக்கையின் மீது அணைகள் இடப்பட்டன. கஞ்சியில் தோய்த்த மெல்லிய தூய மடிப்புடைய ஆடை அப்படுக்கைகளின் மீது விரிக்கப்பட்டது என்பதை நெடுநல்வாடை 124-135 வரிகள் மூலம் அறியமுடிகிறது.

கணவனை இழந்த பெண்கள் கைம்மை நோன்பு மேற்கொண்டு வாழ்ந்து வந்த போது, பரற்கல்லை ஒத்த தரையிலே படுத்து உறங்கினர். கணவனுடன் சேர்ந்து வாழும் போது, அவர்களுடைய படுக்கை மென்மையாக இருந்தது என்பது பெறப்படுகிறது.

## 7.13 துவர்

கணவர் உயிருடன் இருக்கும்போது மகளிர் மணப்பொருட்கள் கலந்த நீரில் நீராடினர். துவர் என்றது துவர் பொருட்கள் பலவும் கிடந்து ஊறிய நீராகும். துவர்கள் பத்து என்பர். அவையாவன நாவல், கடு, நெல்லி, தான்றிக் கொட்டை, ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்துக்காசு, மாந்தளிர் என்பனவாகும். ஆடலரசி மாதவி பத்துத்துவரும், ஐந்துவகை விரைப்பொருட்களும், 32 ஓமாலிகைகளும் கிடந்து ஊறிய நன்னீரில் நீராடினாள் என இளங்கோவடிகள் கூறுவார் (சிலப்பதிகாரம் - கடலாடுகாதை 76-78) கணவர் இறந்தபின் குளிர்ந்த நீரில் மட்டுமே நீராடினர் என்பது இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது.

சாந்தினை தம் உடல் முழுவதும் பூசிக் கொண்டனர். சிலர் மேகம் போன்ற தங்கள் கருநிறக் கூந்தலை குழலாக ஒப்பனை செய்து கொண்டனர். சிலர் ஒப்பனை செய்யப்பட்ட கூந்தலில் வெட்டிவேர், விலாமிச்ச வேர் போன்ற மணம் மிக்க வேர்களுடன் பல வகை மலர்களைக் கலந்து கட்டிய மாலைகளைச் சூடிக் கொண்டனர் என்ற செய்தியும் காணப்படுகிறது.

கண்ணாடியில் அழுக்கு நீக்க நறுநெய்ப்பூசி, வெண்மையான கல்லாலான பொடியினை (கல்மாவு) தூவித்துடைத்து, தூய்மை செய்யும் வழக்கம் கூறப்பட்டுள்ளது. பெண்களுக்கு இயற்கையழகு, ஒப்பனை செய்து கொள்ளும் செயற்கையழகு தங்கள் காதலருடன் கூடுவதால் ஏற்படும் புதிய ஒளியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 7.14 தாம்பூலம்

தாம்பூலம் மெல்லும் போது தக்கோலம், தீம்பு, இலவங்கம், கற்பூரம், சாதிக்காய் இவற்றுடன் கூடிய பாக்குத்தூளை பயன்படுத்துவர் என்பதும் பெறப்படுகிறது. கணவர் உயிருடன் இருந்த காலத்தில் தாம்பூலம் தரித்தனர் என்பது பெறப்படுகிறது.

## 7.15 சங்ககால மகளிர் ஆடைகள்

சங்ககால மகளிர் தழையாடை, பருத்தியாடை, பட்டாடை, ஆடை வகைகள் பல பலவகையாக ஆடை அணிந்துள்ளனர்.

நெய்தல், ஞாழல், ஆம்பல், குவளை, செயலை, நொச்சி, அசோகு போன்றவற்றின் தழைகள் மலர்கள் கொண்டு செய்யப்பட்ட ஆடையே 'தழையாடை' ஆகும். நிலத்திற்கேற்ப தழையாடை வேறுபடும். நிலத்திற்கேற்ப வாழ்வு கொண்ட ஐந்நிலமகளிரும் அவரவர்க்குரிய ஆடைகளை அணிந்தனர். இளைய மகளிரே தழையாடை அணிந்தனர் என்பதனை பாடற்குறிப்புகளின் வாயிலாக அறியமுடிகிறது.

இளவயதில் தழையாடையாய் உதவிய ஆம்பல், கணவனை இழந்த காலத்தில், அதன் அல்லியிடத்து உண்டாகும் புல்லரிசியாய் உதவின என்று கூறி, கணவனை இழந்த பெண்ணொருத்தி வருந்தி அழுததனைப் புறம் 248 வது பாடலின் வழி அறியமுடிகிறது. கணவனை இழந்த மகளிர் தழையாடை அணியும் பழக்கம் இல்லை என்பதனை உணரமுடிகிறது.

பிற்காலத்தில் கணவனை இழந்த மகளிர் வெண்ணிற ஆடை உடுத்தினர். பிற மகளிரிடமிருந்து அவர்களை வேறுபடுத்திக் காட்டச் சமுதாயம் விதித்த விதிமுறையாக இருக்கலாம். அல்லது அவர்கள் தங்களின் மங்கல வாழ்வு முடிந்தது என்ற எண்ணத்தில் மனம் தூய்மையாக இருக்கவும் பிறர்க்கு தம்மை உணர்த்துவதோடு பிறர் தம்மை விரும்பாதிருக்கவும் எண்ணி வெண்ணிற ஆடையை அணிந்திருக்கலாம்

என்று ' சங்க கால மகளிர் வாழ்வியல்' என்ற நூலில் முனைவர் திலகவதி குறிப்பிட்டுள்ளார் (ப 346).

## 7.16 சங்ககால மகளிரின் அணிகலன்கள்

சங்க இலக்கியங்களில் அணி, பூண், பணி, இழை, கலன், நகை, குழை, தொடி, வளை முதலிய சொற்கள் அணிகலன்களைக் குறித்து வழங்கப்படுவனவாக அமைந்துள்ளன.

இயற்கை அணிகளாக ஆம்பல் தண்டிலும், குவளைத் தண்டிலும் வளைகள் செய்து கொண்டனர். காதுகளிலும் குழையாக அணிந்து கொண்டனர்.

செயற்கை அணிகளாக உலோகங்களிலும், நவமணிகளிலும் அணிகலன்கள் செய்து அணிந்து மகிழ்ந்தனர். சங்க கால மகளிர் தலையணி, நுதலணி, காதணி, கழுத்தணி, தோளணி, மார்பணி, கையணி, விரலணி இடையணி, காலணி எனும் பலவகை அணிகலன்களை உடல் உறுப்புகளில் அணிந்து மகிழ்ந்தனர்.

### 7.16.1 தலையணி

1. வாடா பொன்னரிமாலை
2. தொய்யகம்
3. தெய்வ உத்தி
4. தலைக்கோலம்
5. வயந்தகம்
6. சுரிதகம்
7. திருகுப்பூ
8. உத்தி
9. மகல வலயம்
10. மத்தக நிலத்திலம் (தலைக் கோலமுத்து)

### 7.16.2 நுதலணி

1. நெற்றிச்சுட்டி
2. நெற்றிப்பட்டம்
3. திலகம்

திலகம் என்பது நெற்றிப் பொட்டைக் குறிப்பதன்றி நுதலில் அணியும் பொன்னாற் செய்யப்பட்ட ஓர் அணிகலன்களைக் குறிக்கும் பெயராகவும், சங்க காலத்தில் வழங்கப்பட்டுள்ளது. ஒருத்தி அணிந்த திலகமெனும் அணியைச் சேர்ந்த முத்து வடத்தை மற்றொருத்தியின் மகரக்குழை பற்றி இழுத்தது என்றும், பரத்தை திலகமாகிய பட்டத்தினை நெற்றியில் அணிந்திருந்தாள் என்றும் கலித்தொகை குறிப்பிடுகிறது.

### 7.16.2 காதணி

1. பொலங்குழை
2. ஒண்குழை
3. கனங்குழை
4. சிறுகுழை
5. மகரக்குழை
6. கொடுங்குழை
7. தோடு
8. புல்லிகை அல்லது கன்னப்பூ, வாளி, குடைக்கடுக்கண் (காதினின்றும் தொங்கும் இயல்புடையது)
9. கடிப்பு (குழை அணிவதற்கு முன் கடிப்பு என்னும் அணியை இட்டு காதைப் பெரிதாக்கியபின் குழையை அணிவர்)

### 7.16.4 கழுத்தணி

சங்கு, பவளம், ரத்தினம், முத்து, பொன் ஆகியவற்றால் செய்யப்பட்டோ பலவகையான வடங்களைக் கொண்டு செய்யப்பட்டோ

அமைந்த கழுத்தணிகளையும் தொங்கும் பதக்கங்களையும் அன்றைய மகளிர் விரும்பி அணிந்தனர்.

1. காசுமாலை
2. மதாணி
3. நெடுவீழ் (தாலி)

### 7.16.5 தோளணி

1. தொடி
2. தோள்வளை அல்லது வாகுலயம்

### 7.16.6 மார்பணி

1. மார்பில் அணியும் அணி 'பூண்' எனப்பட்டது

### 7.16.7 கையணி

1. தொடி
2. கடகம்
3. வளை
4. கைவந்தி
5. காப்பு

### 7.16.8 விரலணி

1. மோசை
2. செங்கேழ் விளக்கம்
3. மோதிரம்
4. ஆழி
5. காலாழி (கால்விரல் மோதிரம்)

### 7.16.9 இடையணி

1. ஒட்டியாணம்
2. இடுப்புப்பட்டை
3. உத்ரபந்தம்
4. சன்னவீரம்
5. பாண்டில்
6. மேகலை
7. சில்காழ்
8. பல்காழ்
9. பைங்காழ்
10. பருமம்
11. காஞ்சி
12. ஏணிப்படுகால்
13. விரிசிகை

### 7.16.10 தொடையணி (குறங்கணி)

சங்க இலக்கியங்களில் தொடையணி பற்றிக் குறிப்பு காணப்படவில்லை. அதுபோல மூக்கணி பற்றி செய்திகளும் காணப்படவில்லை. சிலப்பதிகாரத்தில் மாதவி அணிந்த அணிகளை கூறுமிடத்து இளங்கோவடிகள் தொடையணியைக் குறிப்படுவார்

> "குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறிந்து"
>
> *(சிலம்பு 6:86)*

### 7.16.11 காலணி

1. சிலம்பு
2. கிண்கிணி

இதிலிருந்து சங்க கால மகளிர் பல்வேறு வகையான அணிகலன்களை அணிந்து மகிழ்ந்திருந்தனர். கணவனை இழந்த பெண்கள் அணிகலன்களைக் களைந்து பொலிவிழந்து காணப்பட்டனர் என்ற செய்திகளையும் சங்க இலக்கியத்தின் மூலம் அறியமுடிகிறது.

## 7.17 சங்ககால மகளிர் ஒப்பனைக் கலைத்திறம்

சங்க கால மகளிர் தங்களைப் பல வகையாகவும் அழகுப்படுத்திக் கொண்டனர். அழகில் சற்று குறைந்த மகளிர், தங்களை அழகுடையவர்களாக காட்சியளிக்கவும், அழகுடையவர்கள் மேலும் அழகுடையவர்களாகக் காட்சியளிக்கவும் ஒப்பனை செய்து கொண்டனர். மகளிர் ஒப்பனை செய்து கொள்வதால் அவர்களுக்கு மகிழ்ச்சியும், பிறர்க்கு குறிப்பாகக் கணவர்க்கு கவர்ச்சி ஏற்படுகிறது. சங்க கால மகளிர் கூந்தல் ஒப்பனை, முக ஒப்பனை, நக ஒப்பனை, உடல் ஒப்பனை, கண் ஒப்பனை, நுதல் ஒப்பனை, உதட்டு ஒப்பனை செய்து கொண்டனர் என்ற செய்திகளையும் சங்க இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது.

கணவர் உடனிருக்கும் காலத்தில் மகளிர் ஆடை அணிகலன்கள் அணிவதிலும், ஒப்பனை செய்து கொள்வதிலும் மிக்க மகிழ்ச்சியோடு ஈடுபடுவர். கணவர் பிரிந்து சென்ற காலத்தில் அழகுபடுத்திக் கொள்வதில் ஆர்வமின்றி வருத்தத்துடன் இருப்பர்.

இவ்வாறு பல வகையாக தங்களை அழகாகக் காட்டிக் கொண்ட மகளிர், கணவன் இறந்த பிறகு அனைத்து ஒப்பனைகளையும் கலைந்து விட்டனர் என்பதும் சங்க இலக்கியங்கள் வாயிலாக பெறப்படுகிறது.

## 7.18 தொகுப்புரை

1. கணவனை இழந்த மகளிர் உடன் உயிர் விடுதலை 'தலைக்கற்பு' என்றும், உடன்கட்டை ஏறி உயிர்விடுதலை 'இடைக்கற்பு' என்றும், கைம்மை நோன்பு ஏற்று வாழ்தலை 'கடைக்கற்பு' என்றும் கூறினர்.

2. தாழியில் இறந்த கணவனுடன் அடக்கமாவர்.

3. உடன் உயிர்த்துறத்தல், உடன்கட்டை ஏறுதல், கைம்மை நோன்பு இவற்றை சங்க இலக்கியங்கள், தொல்காப்பியம், மணிமேகலை, கலிங்கத்துப்பரணி போன்ற நூல்களில் காணமுடிகிறது.

4. கணவனை இழந்த மகளிர் 'உயவற்பெண்டிர், கழிகல மகளிர்' என்று அழைக்கப்பட்டனர்.

5. கைம்மைத்துன்பம், மிகுதியான அன்பு, மான உணர்வு, மேலுலகக் கோட்பாடு, தீயின் தூயத்தன்மை என்பன போன்ற காரணங்களால் கணவனுடன் உயிர் நீத்தல் என்ற நிலைக்கு ஆளாகிறாள்.

6. கைம்மை நோன்பின் முறைகளாவன கூந்தல் களைதல், அணிகலன்கள் களைதல், தரையில் பாயின்றி படுத்து உறங்குதல், உணவில் கட்டுப்பாடு, குளிர்ந்த நீரில் மூழ்குதல் என்பனவாகும்.

7. கணவனை இழந்த பெண்கள், நூற்புத் தொழிலில் ஈடுபட்டனர். இவர்களைப் 'பருத்திப் பெண்டிர்' என்று அழைப்பர்.

8. கைம்மை நோன்பிற்கு மாற்றாக சமயத்துறவு மேற்கொள்ளல்.

9. கணவனுடன் வாழும் பெண்கள் பலவகையான ஆடைகள் அணிகலன்கள், ஒப்பனை அலங்காரம், பஞ்சுப் படுக்கை சுவையான உணவு என பலவகைகளிலும் இன்பமாக வாழ்ந்தனர் என்பதும், கணவன் இறந்த பின் அவை அனைத்தையும் இழந்து

தன்னைத்தானே வருத்திக் கொண்டு வாழ்வதே கற்பின் அடையாளம் என்று சங்க காலத்தில் கூறப்பட்டுள்ளது.

10. அஃறிணை உயிர்கள் கூட கைம்மை நிலையை ஏற்க விரும்புவதில்லை என்பதனை குறுந்தொகை **96**வது பாடலின் வழி அறியமுடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணையியல், நூ. 22
2. புறநானூறு 240
3. மேலது 62
4. மேலது 62
5. மேலது 280
6. கலிங்கத்துப்பரணி 483
7. மேலது 484
8. சிலப்பதிகாரம் 20: 78-81
9. புறநானூறு 239
10. மேலது 256
11. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணையியல், நூ. 22
12. புறப்பொருள்வெண்பாமாலை , காஞ்சி 22
13. புறநானூறு 246
14. கலிங்கத்துப்பரணி 481
15. மணிமேகலை - ஊரலருரைத்த காதை (42-48)
16. திருக்குறள் 1151
17. குறுந்தொகை 49
18. பதிற்றுப்பத்து 5:13-17
19. புறநானூறு 134
20. குறுந்தொகை 69
21. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணையியல், நூ. 22
22. மேலது நூ 18
23. புறநானூறு 237
24. மேலது 62
25. மேலது 246
26. மேலது 249
27. மேலது 280

28. மேலது 261

29. மேலது 261

30. நற்றிணை 140, அகநானூறு 92, 233

31. புறநானூறு 301

32. குறுந்தொகை 192, ஐங்குறுநூறு 463

33. அகநானூறு 253

34. புறநானூறு 261

35. மேலது 246

36. மேலது 246

37. மேலது 234

38. மேலது 234

39. மேலது 63, 62

40. பரிபாடல் 19: 500

41. புறநானூறு 326

42. நற்றிணை 62

43. அகநானூறு 253

44. திருக்குறள் 1118

45. அகநானூறு 136

46. நெடுநெல்வாடை 136

47. மணிமேகலை -ஆதிரையிட்ட பிச்சையிட்ட காதை 131

48. புறநானூறு 311

49. மேலது 286

50. சிலப்பதிகாரம் 6: 76-78

# கையறுநிலை

# கையறுநிலை

## 8.0 முன்னுரை

இறந்தோரை எண்ணிப் புலம்பிப் பாடும் பாடல்களே 'கையறுநிலைப் பாடல்கள்' எனப்படும். நாட்டுப்புற மக்களின் வழக்கிலுள்ள ஒப்பாரிப் பாடல்களும், இறந்தவர்களை எண்ணிப்பாடும் நிலையில், கையறுநிலைப் பாடல்களாகவே கருதப்படுகிறது. மேலை நாட்டார் கையறுநிலைப் பாடலை 'எலிஜி' (Elegy) என்று அழைப்பர். இறந்தவர்களால் ஏற்பட்ட பிரிவாற்றாமையாக, வருந்திப் பாடிய பாடல்களான கையறுநிலைப் பாடல்கள் பற்றிய கருத்துக்களை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 8.1 கையறுநிலை

தொல்காப்பியர், நிலையாமையை பற்றி பேசும் காஞ்சித்திணையில், கையறுநிலைப் பாடல்களைப் பற்றி

> **''கழிந்தோர் தேயத்து அழிபடர் உறீஇ**
> **ஒழிந்தோர் புலம்பிய கையறுநிலையும்''**[1]

என்று குறிப்பிட்டுள்ளார்.

கையறுநிலை என்பது, ''இறந்தவர்க்காக அவரின் சுற்றத்தினர் புலம்பிப் பாடுவது'' என்று ச.வே.சுப்பிரமணியன் தனது நூலில் கூறியுள்ளார். இதன் உரையாக இளம்பூரணர், ''செத்தோர் மாட்டுச் சாவாதோர் வருத்தமுற்று புலம்பிய கையறுநிலை'' என்று கூறுகிறார்.

புறப்பொருள்வெண்பாமாலை ஆசிரியர் ஐயனாரிதனார் தொல்காப்பியர் கூறிய கருத்தினின்று, சிறிது மாறுபட்டு கூறியுள்ளார். கரந்தைத் திணையிலும் கையறுநிலையைச் சுட்டியுள்ளார்.

''வெருவரும் வாளமர் விளிந்தோற்கண்டு
கருவி மாக்கள் கையற வுரைத்தன்று''[2]

அச்சம் தரும் வாட்போரில் இறந்தவர்களைக் கண்டு, பாணர்கள் அத்தகைய வீரர்களின் துன்பநிலையைக் கூறுவதாகும்.

பொதுவியல் திணையிலும் கையறுநிலையினை இரண்டாகப் பகுத்துக் குறிப்பிடுகிறார்.

''செய்கழன் மன்னன் மாய்ந்தெனச் சேர்ந்தோர்
கையற வுரைத்துக் கைசோர்ந்தன்று''[3]

''கழிந்தோன் தன்புகழ் காதலித் துரைப்பினும்
மொழிந்தனர் புலவர் அத்துறை என்ப''[4]

என்ற இவ்விரு திணைகளும், கையறுநிலையை இறந்தோர் குறித்துப் பாடுகின்ற இரங்கற்பாக்களாகச் சுட்டுகின்றன.

## 8.2 புறநானூற்றில் கையறுநிலைப் பாடல்கள்

புறநானூற்றில் கையறுநிலைப் பாடல்கள் காணப்படுகின்றன. அவற்றுள் அரசர்களின் வீரமரணம் பற்றிய பாடல்களே, அதிகமாக காணப்படுகின்றன. இறந்துபோன ஒருவருக்காக, அவரால் புறக்கப்பட்டவர் இறந்தவர்களின் நிலையை எண்ணிப்பாடுவது கையறுநிலை பாடல்களின் பாடுபொருள்களாக அமைந்துள்ளன.

தந்தையின் மறைவு குறித்து வாடும் மகளிர், மகனின் வீரமரணம் கேட்டுப் புலம்பும் தாய், கழிந்த இளமையை எண்ணி வருந்தும் முதியோன், நடுகல் போற்றும் சான்றோன் என்று மனத்தின் துயரத்தை வெளிப்படுத்தும் கையறுநிலைத்துறைக் குறித்தப் பாடல்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன.

## 8.3 கையறுநிலைப் பாடல்களில் பொதுத்தன்மைகள்

கையறுநிலைப் பாடல்களுக்கென்று தனித்த நிலையில் சில பொதுத் தன்மைகள் காணப்படுகின்றன. அவை

1. இறந்த வீரன் அல்லது மன்னனை எண்ணி வருந்துதல்
2. மன்னன் வெற்றிச் சிறப்பைக் கூறுவது
3. நாட்டு வளங்களைப் போற்றுவது
4. இறப்பினால் நாட்டுக்கும், மக்களுக்கும் ஏற்படும் அவலம் பற்றிய செய்திகள்.
5. கொடைச் சிறப்பை அறிந்து வந்த இரவலர்கள், மன்னர்கள் இல்லாமையால் வறிதே திரும்பிய நிலைப் பற்றிய செய்திகள்
6. முன்னோர்களின் பெருமை பற்றி பேசுவது
7. வீரர்களைத் தெய்வமாக்கிய நடுகல் பற்றியது.

என்பனவாகும்.

மேற்கூறிய அனைத்து கூறுகளும், புறநானூற்றில் கையறுநிலைப் பாடல்களில் காணப்படுகின்றன.

## 8.4 கையறுநிலைப் பாடல்களில் இறப்பு பற்றிய செய்திகள்

போரையும் போர்த்தொழிலையும் விரும்பிய மன்னர்களும், மறவர்களும் வெற்றியே பிறப்பின் பயனாகக் கருதினர்.

> **''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
> **தம் புகழ் நிறீஇத்தாம் மாய்ந்தனரே''[5]**

என்னும் வரிகள் தமிழரின் வீரத்தை விளக்குகின்றன. இருவர் மேற்கொள்ளும் போரில் ஒருவரே வெற்றி பெறுதல் இயற்கை. தோல்வியடைந்த மன்னர்களும், வீரர்களும் விழுப்புண் பெற்றோ அல்லது பழி பாவங்களுக்கு அஞ்சியோ வடக்கிருந்து வீரமரணம் அடைந்தனர்.

## 8.5 கையறுநிலைப் பாடல்கள் சுட்டும் கொடைச் சிறப்பு

மன்னனின் வீரம், வெற்றிச் சிறப்பு, கொடை, புகழ், அரசியல் என்று பலவற்றைப் புகழ்ந்தும் பாடிய புலவர்கள் பரிசில் பெற்றனர். பரிசிலின் சிறப்பு, மன்னரின் பண்பு ஆகியவற்றால் பரிசில் பெற்ற புலவர்கள், பிற புலவர்களை இம்மன்னனிடத்து ஆற்றுப்படுத்தினர்.

பரிசில்துறை, பரிசில்விடை ஆகிய துறைகளும் மன்னர்களின் கொடைச் சிறப்பையே வலியுறுத்துவனவாக அமைந்துள்ளன.

மன்னனின் கொடைத்திறம் அறிந்து, அவனிடம் பரிசில் பெற விரும்பி வந்த இரவலர்கள், மன்னன் இல்லாமையால் பரிசில் பெறாது வறிதே திரும்பிய நிலையையும் சில பாடல்களில் காணமுடிகிறது.

புகழ் ஒன்றையே விரும்பி நாட்டின் எல்லையை விரிவுபடுத்தும் நோக்கோடு, போர் மேற்கொண்ட மன்னன் போரில் வெற்றியும் பெற்றான். போரில் சிறப்பாக செயல்பட்டு வெற்றிபெற்ற மன்னனை, இரவலர்கள் பாடி, மன்னனிடம் பரிசில் பெற்றனர். பரிசில் பெற்ற இரவலர்கள் பரிசிலின் சிறப்பையும், பிற மன்னர்களிடம் பாடி மன்னனின் புகழைப் பரப்பியதோடு, அயல் மன்னர்களையும் பாடிப் பரிசில் பெற்றனர்.

## 8.6 கையறுநிலைப் பாடிய புலவர்கள்

கழாத்தலையார், கபிலர், பொத்தியார், கண்ணாகனார், பெருஞ்சதுக்கத்துப்பூதனார், கருங்குழலாதனார், ஆலந்தூர்கிழார், ஆடுதுறைமாசாத்தனார், வெள்ளெருக்கிலையார், பெருஞ்சித்திரனார், பேரெயின்முறுவலார், குட்டுவன்கீரனார், ஏணிச்சேரிமுடமோசியார், குடவாயில்கீரத்தனார், தொடித்தலைவிழுத்தண்டியார், கோட்டம்பலத்துஞ்சியமாக்கோதை, இளம்பொன்வணிகனார், மாறோகத்துநப்பசலையார், பாரிமகளிர், ஔவையார் போன்ற புலவர்கள் கையறுநிலையைப் பாடியுள்ளனர்.

## 8.7 கையறுநிலைப் பாடல்களில் புரவலர்கள்

சேரமான்நெடுஞ்சேரலாதன், பாரி, பிசிராந்தையார், கோப்பெருஞ்சோழன், கரிகால்பெருவளத்தான், சோழன்நலங்கிள்ளி, கிள்ளிவளவன், அதியமான்நெடுமானஞ்சி, வேள்எவ்வி, வெளிமான், நெடுஞ்செழியன், ஆய்அண்டிரன், பெருஞ்சாத்தன், மூலங்கிழார், சிறுகருந்தும்பியார்.

## 8.8 போருக்குரியக் காரணங்கள்

போருக்குரிய காரணங்களாகப் பற்பல உரைக்கப் பெறுகின்றன. இயல்பான மறப்பண்பு, மண்ணாசை இடஞ்சிறிதென்னும் ஊக்கமேலீடு, அரசர்க்கரசராகத் திகழும் உட்கோல், அரசுரிமை யார்க்கெனும் சிக்கல், மானக்குறைவு உண்டாக மற்றையோர் நடத்தல், மகள் மறுத்தல் ஆகியக் காரணங்களால் போர்த்தோன்றக் கூடும் என்பர் அறிஞர் வித்தியானந்தன் என்பர்.

பழைய இந்து சமூகத்தில் போர்கள் நடைபெற்றமைக்குரிய உளவியல் காரணங்களாக

1) சாதி மனநிலை
2) போர்த்தொழிலின்றி வாளா அமைய இயலாத மனநிலை
3) வீரச்செயல்களில் நாட்டம்
4) உடல் தினவு
5) தற்காப்பு எண்ணம்
6) வெகுளியும், பொறாமையும்
7) பிறர் மீதுஆளுகை செலுத்தும் நோக்கம்

ஆகியவற்றை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

அரசுகள் தோன்றுவதற்கு முன்னர் இனக்குழு மக்களிடையே செல்வப்பொருளாக விளங்கிய ஆநிரைகளை கவரும் மாடு பிடிச்சண்டையே அரசுகளும், அதிகாரமும் தோன்றிய பின்னர்

பிரதேச உணர்வின் அடிப்படையில், நாடுபிடிச் சண்டையாகி இருக்க வேண்டும் என்று கூறுவதும் எண்ணுதற்குரியதாகும்.

## 8.9 புரவலனும் புலவனும்

அரசனை இல்லோரைக் காக்கும் சிறந்த புரவலனாகவும், போர்க்களம் விரும்பும் மறவனாகவும், செங்கோலையும் பற்றி போற்றுகின்ற புலவர்கள் அவனுடைய இன்ப வாழ்வில் மட்டுமல்லாமல், இறந்த நிலையிலும் கையறுநிலைப் பாடல்கள் பாடியுள்ளனர். ஒல்லையூர் வேந்தனாகிய பெருஞ்சாத்தன் இறந்து பட, அந்நிலைக் கண்டு பொறாத குடவயிற்கீரத்தனார் காலம் உணராது முல்லைப் பூவை சாடி தன்னுடைய மனத்துயரினை வெளிப்படுத்தியதை,

**''இளையோர் சூடார் வளையோர் கொய்யார்**
**நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்**
**பாணன் சூடான் ஆடவர்க் கடந்த**
**ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த**
**வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை**
**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே''**[6]

என்ற பாடலடிகளின் மூலம் அரசனிடம் புலவர் கொண்டிருந்த அன்பினை அறியமுடிகிறது.

## 8.10 தானும் உடன் இறத்தல் நல்லது

பெருஞ்சித்திரனார் தனது பாடலில், மன்னனின் இறப்பினைக் கண்டு கூற்றுவனையே பழித்து, தம் வாழ்வின் பொருளறியாது, புலம்பி தானும் இறந்துவிடுதலே நல்லது என்று துணிந்து புலம்பினார். புலவரின் வருத்தத்தை

**''மாரி இரவின் மரங்கவிழ் பொழுதின்**
**ஆரஞர் உற்ற நெஞ்சமொடு ஓராங்குக்**
**கண்இல் ஊமன் கடற்பட்டாங்கு**
**வரையளந்து அறியாத் திரையரு நீத்தது**
**அவல மறுசுழி மறுகலின்**
**தவலே நன்றுமன் தகுதியும் அதுவே''**[7]

என்ற பாடலின் மூலம் இருப்பதைவிட இறப்பதே நல்லது என்று புலம்பியதை அறியமுடிகிறது.

இளவெளிமான் இறந்த செய்தி அறியாமல், பரிசில் பெறும் எண்ணத்துடன், அவனைக் காண வந்த பெருஞ்சித்திரனார், அவன் பிரிவினால் மிகவும் வருந்தினார்.

"போய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்
காடு முன்னினனே கட்காமுறுநன்
தொடி கழி மகளிரின் தொல்கவின் வாடி
பாடுநர் கடும்பும் பையென்றனவே"[8]

என்ற பாடலடியின் மூலம், அவன் பிரிவால் "தொடி நீங்கிப் பொலிவிழந்த உரிமை மகளிர் போலப் பாடும் புலவர் தம் சுற்றமும் பழைய அழகற்றுப் பொலிவிழந்தது" என்று பாடியுள்ளார்.

எதை இழந்தாலும் அதற்கு இணை கூறிவிட முடியும். ஆனால் கணவன் இறப்பிற்கு ஈடு சொல்ல முடியாது. அந்த அளவிற்கு, ஒரு மனைவி அடையும் துன்பத்தைப் போல, பாடும் புலவர் தம் சுற்றமும் பழைய அழகற்று பொலிவிழந்து போகும் என்று பாடியுள்ளதிலிருந்து இளவெளிமான் இழப்பு பெருஞ்சித்திரனாரை அந்த அளவுக்கு பாதிப்புக்குள்ளாக்கியது என்பதை அறியமுடிகிறது.

கோப்பெருஞ்சோழனது மக்கட்செல்வம் சிறப்பாக அமையவில்லை. இவனது புதல்வர்கள் சிற்றின்பச் சேர்க்கையால் அறிவு பேதுற்று, இவன்பால் பகைமை கொண்டு போருக்கெழுந்தனர். அவர்களுக்கு எத்துணை அறிவுரைகளைச் சான்றோர்கள் கூறிய போதிலும் அவன் கேட்கவில்லை.

தந்தையுடன் போர் செய்வது ஒன்றைத் தவிர, வேறு எதுவுமே எண்ணாத புதல்வர்களின் செயல், கோப்பெருஞ்சோழனுக்குக் கொதிப்பை உண்டு பண்ணியது. பொறுக்க முடியாமல் போனமையால் அவனும் போருக்கு எழுந்தான்.

போருக்குத்தயாரான கோப்பெருஞ்சோழனிடம், புல்லார்சார் எயிற்றியனார் என்ற புலவர் சென்று, அறிவுரைக் கூறிப் போரைத் தடுத்தார். மனம் மாறிய கோப்பெருஞ்சோழன் மானக்குறைவாக எண்ணி, வடக்கிருந்து உயிர்விட்டான்.

போர்க் களத்தில் மட்டுமில்லாமல், பிற இடங்களிலும் மானக்குறைவு ஏற்பட்டால், வீரர்கள் வடக்கிருந்து உயிர்த்துறப்பர் என்பது கோப்பெருஞ்சோழன் வரலாறு மூலம் அறியமுடிகிறது.

வீரம், கொடை, புகழ் என பலவும் பெற்று சான்றோரால் புகழப்பட்ட கோப்பெருஞ்சோழன், வடக்கிலிருந்து உயிர் நீக்க இருந்த போது, தன் நண்பரான பிசிராந்தையாரும் நிச்சயம் வருவார் என்றார். அது போலவே பிசிராந்தையாரும் வந்து கோப்பெருஞ்சோழன் இறந்த இடத்திலேயே தானும் அமர்ந்து உயிர்நீத்தார்.

கோப்பெருஞ்சோழனின் அமைச்சர் பொத்தியார் மன்னனைப் பிரிய மனமில்லாமல், தானும் வடக்கிருந்து உயிர்விட முனைந்தார், அதற்கு மன்னர், ''உனக்கு பிள்ளை பிறந்த பின் வா'' என்றார். பொத்தியாரும் மகன் பிறந்த பின் வந்தார். மன்னனின் இறப்புக்குக் கையற்று கலங்கி தானும் அவ்விடம் சென்று, யான் நோன்பு இருந்து இறத்தற்குரிய இடம் தா என்றார். கல்லாகியும் இடம் கொடுத்தார் கோப்பெருஞ்சோழன். அவரை வடக்கிருந்த பொத்தியார் பாடினார். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்துறந்த போது பலரும் கையற்று வருந்தி அவனுடனே உயிர்விடத் துணிந்தனர் என்பதை,

> ''உள் ஆற்றுக் கவலைப் புள்ளி நீழல்
> முழுஉ வள்ளூரம் உணக்கும் மள்ள
> புலவுதி மாதோ நீயே
> பலரால் அத்தை நின் குறி இருந்தோரே''[9]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

## 8.11 குருடனான கூற்றுவன்

ஆய்அண்டிரன் இறந்த பிறகு, கீரனார் என்ற புலவருக்கு ஆறாத துயரம் ஏற்பட்டது, தன்னுடைய துயரத்தை புலவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

> ''பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்
> கோடு ஏந்து அல்குல் குறுந்தொடி மகளிரொடு
> காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப
> மேலோர் உலகம் எய்தினை எனாக''[10]

என்ற பாடலடி மூலம் ஆய்அண்டிரன் அவனுடைய உரிமை மகளிருடன் கூற்றுவன் என்னும் குருடன் கொண்டு போக, தேவர் உலகம் அடைந்தான் என்று கூறி வருந்தினார்.

தன் வருத்தம் அதிகமானதால், 'கூற்றவனையே குருடன்' என்று கூறினார், என்பது பெறப்படுகிறது.

## 8.12 பிண்டமிடலைக் கண்டு வாழ்நாள் குறைவதாகக் கூறுதல்

வேள்எவ்வி இறந்த பிறகு அவன் மனைவி பிண்டமிட்டு, இறந்தவரை வழிபட்டதைப்பார்த்த புலவர், ''முன்பு இரவலர் பலரோடு உண்டவன், இன்று தனித்து, இப்பிண்டத்தை எவ்வாறு உண்டானோ இதைக் கண்டு நான் வருந்துகிறேன். என் வாழ்நாள் குறைவதாக'' என்று பாடியுள்ளதை புறநானூற்று 234வது பாடலின் வழி அறியமுடிகிறது.

## 8.13 ஈன்றோள் நீத்த குழவி போல

அதியமான் இறப்பிற்கு வருந்திய அரிசில்கிழார், பிரிவுத் துன்பம் தாளாமல், ஈன்றோள் நீத்த குழவி போல அதாவது பெற்ற தாயால் கைவிடப்பட்ட உண்ணாத குழந்தை போல தாம் வருந்துவதாகக் குறிப்பிட்டுப் பாடியுள்ள பாடலை

"பொய்யா எழினி பொருது களம் சேர
ஈன்றோள் நீத்த குழலி போல
தன் அமர் சுற்றம் தலைத்தலை இனைய"[11]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது.

## 8.14 கூற்றுவனும் பணிதல் வேண்டும்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை, மாரோக்கத்து நப்பசலையார் பாடிய கையறுநிலைப்பாடலில் போர்க்களத்தில் எதிர்த்து நின்று சண்டை செய்வது, கூற்றுவனேயானாலும் உனக்கு வெற்றி கிட்டாது, பாடுநர் போல் தாழ்ந்து பணிந்து கைதொழுது, பரிசிலைப் பெற வேண்டும் என்றும், கூற்றமே நீயாகச் சென்றால் பெற முடியாத மன்னனின் உயிரைத் தாழ்ந்து பணிந்தால் மட்டுமே பெறமுடியும். தானாகவே முன் வந்து உயிரையும் கொடுப்பான் என்பதால் கொடையாக மன்னனே முன் வந்து தன் இன்னுயிரையும் கொடுக்கும் மன்னனின் சிறப்பு புலனாகிறது.

## 8.15 கூற்றுவனே நீ அறிவில்லாதவன்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆடுதுறை மாசாத்தனார் பாடிய கையறுநிலைப் பாடலில், "கூற்றுவனே, நீ அறிவில்லாதவன், உனக்கு ஒரு செயலின் கண் செல்வதற்குரிய அறிவு இல்லை, அதனால் தொடர்ந்து பயிரை விளைவிக்கும் விதையைச் சமைத்து உண்டனை போலும் செய்கிறாய். உன் பசியை அடக்குவதற்கு பல உயிர்களையும் ஊட்டுவான். அத்தகையவனை நீ உட்கொண்டாய் இனி உன் பசியைத் தீர்க்கப் போவது யாரெனக் கூறுவாயாக" என்று வருந்திப் பாடுவதை

"வாடுபசி அருந்திய வசை நீர் ஆற்றல்
நின் ஓர் அன்ன பொன் இயற் பெரும் பூண்
வளவன் என்னும் வண்டு மூத கண்ணி
முனையோற் கொண்டனை ஆயின்
இனியார் மற்று நின் பசி தீர்ப்போரே?"[12]

என்ற புறநானூற்றுப் பாடலடி மூலம் அறியமுடிகிறது.

## 8.16 நடுகல்

போரில் இறந்துபட்ட வீரர்களுக்கு 'நடுகல் இடுதல்' அக்காலத்தில் மரபு. அதற்குத் தக்கதோர் கல்லைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு வந்து அதைத் தூயநீரால் கழுவி நட்டு, அதற்கு மலரிட்டு பூசை செய்து, கோயில் கட்டி அவ்வீரனை தெய்வமாக எண்ணி வணங்குவர்.

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்த மரபின் பெரும்படை வாழ்த்தல்"[13]

என்ற துறைகளைச் சார்ந்தவை. இவ்வாறு போரில் இறந்துபட்ட வீரர்களை எண்ணி புலவர்கள் கையறுநிலையில் பல பாடல்கள் பாடியுள்ளனர்.

பல வீரர்கள் தாங்கள் போரில் வென்று, கொண்டு வந்த செல்வத்தைத் தாங்கள் மட்டுமின்றி சுற்றத்தார், பாணர், புலவர், இரவோர் ஆகியோரின் பசிப்பிணியை நீக்க, உணவு, மது, இறைச்சி முதலியன தந்தும் நிலம், ஆநிரைகள் ஆகியவற்றை அளித்தும் வாழ்ந்திருக்கின்றனர். எனவே அவர்களின் பிரிவை அவர்களால் தாங்க இயலாமல் கையறுநிலையில் நடுகல்லை மலர்கள், மயில்தோகை போன்றவற்றையிட்டு வணங்கினர். பசியை நீக்கும் உணவினை அளித்தவர்களை அக்காலத்தில் தெய்வமாகவே கருதினார்கள் என்பதை அறியமுடிகிறது.

## 8.17 வீரத்தாயின் நிலைப்பாடு

மறக்குடியின் முதுமகளிடம் வாளால் வெட்டுண்டு வீரமரணம் எய்தியுள்ள நின் மகனைக் கண்டு மூவேந்தனும் போற்றி வாழ்த்தி இரங்கிய செய்தியுரைத்து ஆறுதல் கூறும் வண்ணம் கழாந்தையார் பாடிய கையறு நிலைப் பாடல் இதனை

"நறுநீரை துறந்த நாறா நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே
நோ கோ யானே நோக்குமதி நீயே
மறப்படை நுவலும் அரிக்குரல் தண்ணுமை
இன்னிசைக் கேட்ட துன்னரும் மறவர்
வென்றி தரு வேட்கையர் மன்றம் கொண்மார்
பேரமர் உழந்த வெருவரு பறந்தலை
விழநவி பாய்ந்த மரத்தின்
வாண்மிசைக் கிடந்த ஆண்மையோன்திறத்தே"[14]

என்ற பாடலின் வழி அறியமுடிகிறது. இதிலிருந்து மகனின் மறைவு குறித்து வருந்தும் தாயிடம், வீரமரணத்தின் திறத்தினை எண்ணிப் பெருமை கொள்வதே மறக்குடிப் பெண்டிர் மாண்பாகக் கூறப்பட்டுள்ளது.

## 8.18 தந்தையின் பிரிவுத்துயரம்

தந்தையை இழந்து வாடும் பாரி மகளிரின் கையறுநிலைப் பாடலாக அமைந்துள்ளது ஒரு பாடல். வெண்ணிலவைச் சுட்டிக்காட்டி காலச் சுழற்சியின் கொடுமையையும், வஞ்சம் செய்து தன் தந்தையைக் கொன்ற மூவேந்தர்களின் சூழ்ச்சியினையும் இகழ்ந்து பாடும் கையறுநிலைப் பாடலாக

"அற்றைத் திங்கள் அவ்வெண்நிலவின்
எந்தையும் உடையேம் எம் குன்றும் பிறர் கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
வென்று எறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே"[15]

என்ற பாடல் அமைந்துள்ளது.

## 8.19 மறுபிறவியிலும் தொடர விரும்பிய நட்பு

பாரி இறந்துவிட, அவன் பிரிவினால் வருந்திய கபிலர் பாரி மகளிர்க்காக, உயிர் வாழ்ந்திருந்தார். சிற்றரசர்கள் பலரிடம் பாரி மகளிரை, மணம் செய்ய வேண்டிக் கேட்டுக் கொண்டும், அவர்கள் மறுக்கவே பாரி மகளிரை, அந்தணரிடம் ஒப்படைத்துக் காக்குமாறு கூறி வடக்கிருந்து

உயிர்த்துறந்தார். ''இப்பிறப்பில் நீயும் நானும் நட்புடன் இன்பமடைந்து இருந்தோம், நம் நட்பு தொடராது தடைப்பட்டது, மறுபிறவியிலாவது நட்பு தொடர்தல் வேண்டும், அதை உயர்ந்த விதி சேர்க்கட்டும்'' என்ற கருத்து புறநானூற்று 236வது பாடலின் வழி பெறப்படுகிறது.

பாரி இறந்த பிரிவினால் ஏற்பட்ட துயர் ஒருபுறம் இருந்தாலும், பாரி மகளிரை, தன் மகள் போல் கருதி மணம் முடித்து வைக்க வேண்டும் என்று பலவாறு முயன்றும் முடியாததால், மிகவும் மனம் வருந்தி காக்கும் பொறுப்பை அந்தணர்களிடம் விட்டுவிட்டு, அவரும் வடக்கிருந்து உயிர் நீத்தார். பாரியின் மகளிர்க்குச் செய்ய வேண்டிய கடமைகளை செய்யும் பொருட்டு, உடன் இறக்கமுடியவில்லையே என்று பிரிவு ஆற்றாமையால் பாடியதால் கையறுநிலைப் பாடலாயிற்று.

## 8.20 வாழ்ந்திருந்த ஊரைப் பிரிதல்

பாரி வள்ளல் இறந்த பிறகு, அவருடைய நண்பர் கபிலர், தான் வாழ்ந்த பறம்பு நாட்டைப் பிரியுங்கால் தமக்கு இதுகாறும் உணவும், உடையுளும் தந்து, இன்புறுவித்த பறம்பு மலையை நினைத்து நன்றியை நினைத்து புலம்பிய நிலையைக் காணமுடிகிறது. தான் பறம்பு மலையை விட்டுச் செல்லும் போது, வேள்பாரியின் பெருமையும் புகழும், கொடையும் உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்கும்படி செய்ததால் பறம்பு மலையை ''வாழியோ பெரும் பெயர் பறம்பே'' என்று வாழ்த்தினார். தான் பறம்பை விட்டுச் செல்வதற்குரிய காரணமாக பாரி மகளிர்க்கு மணம் முடித்து வைக்கும் பொருட்டு கணவனைத் தேடிச் செல்கிறேன் என்று கூறுவதிலிருந்து அறியமுடிகிறது.

பாரி வாழ்ந்தபோது, புகழுடைய மலையாகத் தோன்றிய மலை இப்போது பாரி இறந்ததால், ஏனைய மலைகளைப் போல கண்ணுக்குப் புலனாகும் மலையாகத் தோன்றுகிறதே என்று வருந்தி கையற்று உரைப்பதிலிருந்து அறிய முடிகிறது.

## 8.21 புறப்புண் நாணி வடக்கிருந்தான்

பகையரசர்கள் ஒருவரோடு ஒருவர் போர் செய்யும் போது, தோற்றோடுபவரிடம் வலிந்து சென்று போர் செய்தலை விரும்பாது நின்றனர். ஒத்த வலிமையுடையவருடன் மட்டுமே போர் செய்தலை விரும்பினர். புறப்புண்படாது மார்பிலே வேலைத் தாங்கி விழுப்புண் பெறுதலையே விரும்பினர். பகைவர்களின் செயலால் புறப்புண் அடைய நேரும் போது புறப்புண்ணுக்கு நாணி வடக்கிருந்து உயிர்நீத்தனர் என்பதை

> ''தன் போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
> புறப்புண் நாணி மறத் தகை மன்னன்
> வாள் வடக்கிருந்தனன் ஈங்கு
> நாள் போல கழிய ஞாயிற்றுப் பகலே''[16]

என்ற புறநானூற்று பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது.

புறப்புண்பாடாது விழுப்புண் பெறுதலையே விரும்பி ஏற்றுக் கொண்ட தமிழர்களின் போர்த்திறம் பற்றிய செய்திகளையும் கையறு நிலைப் பாடல்களின் மூலம் அறிய முடிகிறது.

போரில் தவறிய நிலையில் கூடப் புறப்புண்படுதலை விரும்பாத வீரத்தாய்மாரை புறநானூற்றில் காணமுடிகிறது. புறப்புண்பட்டுப் போர்க்களத்தில் நின்மகன் வீழ்ந்தான் என்ற சொல்கேட்டு, வஞ்சினம் கூறி இது உண்மையாயின் அவன் பாலுண்ட என் மார்பகத்தை அறுத்தெறிவேன் என்று கூறியதை,

> ''படை அழிந்து மாறினன் என்று பலர்கூற
> மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்
> முலை அறுத்திடுவென், யான் எனச் சினைஇ''[17]

என்ற பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது.

## 8.22 கையறுநிலைப் பாடல்களில் இயற்கை வருணனை

மன்னனின் புகழ், வீரம், கொடை, வெற்றிச் சிறப்பு ஆகியவற்றை மட்டுமே பாடுவதோடு அல்லாமல், மக்களின் நிலை, நாட்டின் சிறப்பு, இயற்கைவளம் ஆகியவற்றையும் பாடு பொருளாகக் கொண்டதை கையறுநிலைப் பாடல்களில் காணமுடிகிறது. புறநானூற்றில் கையறுநிலைப் பாடல்களில், ''நீரையுடைய பெரிய ஆழ்ந்த சுனையில் பூத்த செங்கழுநீரானது முகையவிழ்த்த புறவிதழ் ஒடித்த முழுப்பூவால் செய்த தழையசையும், அல்குலை உடையவளின் முற்றத்தில் முள்ளால் வேலியமைக்கப்பட்ட பஞ்சு படர்ந்த இடமும், பீர்க்கு முளைந்த முற்றமும் உள்ளன. மேலும் பூக்களையுடைய சோலையின் கண் மயில் ஆடும். ஆண்குரங்கானது, மலைகளுக்கிடையே தாவும். மரங்கள் பலவும் காய்கள், பழங்கள் ஆகியவற்றைக் கொடுக்கும். இத்தகைய வளம் கொண்ட இயற்கை வளமிக்க நாட்டுக்குப் பாரி மன்னனாக விளங்கினான் எனப் பாரியின் நாட்டு வளங்களைக் கபிலர் போற்றுகின்றார்.

## 8.23 கையறுநிலைப் பாடல்களில் நாட்டு வளம்

கையறுநிலைப் பாடல்களில் நாட்டு வளமும் கூறப்பட்டுள்ளது. பாரி மகளிரின் தந்தை நாடு பாரி இருந்த போது வளமையுடையதாய் இருந்த நிலையையும், இன்று பாரி இறந்த பிறகு அதனை இழந்து நிற்கும் நிலையையும் கண்டு வருந்திப் பாடும் பாடலில் நாட்டு வளம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

> ''மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
> தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்
> வயலகம் நிறைய புதல் பூ மலர
> மனைத்தலை மகவை ஈன்ற அமர்க்கண்
> ஆமா நெடு நின்ற நன் புல் ஆர்''[18]

என்ற பாடலில் சனியாகிய விண்மீன் புகைகளோடு கூடிப் புகையினும், எல்லாத் திசையினும் புகை தோன்றினும் தென்திசையின் கண்ணே

வெள்ளிமீன் செல்லினும் மழை பிழைப்பறியாது. வயலிடத்து விளைச்சல் மிகுந்திருந்தது. பூ மலர்ந்தது. கன்றை ஈன்ற பசுக்கூட்டம் நல்ல புல்லை மேய்ந்தது. செங்கோல் ஆட்சித் திறத்தால் சான்றோர் பலர் நிறைந்திருந்தனர். அத்தகைய நாடு இன்று அவனை இழந்து நலன் அனைத்தும் கெட்டுப் புன்புலமாயிற்று என்று வருந்திப் பாடியுள்ளார்.

பறம்பு நாட்டில் வயல்களில் வேலை செய்வோர் செய்யும் ஆரவாரமும், குடியிருப்புகளில் ஆடவர் மது தந்தும், பெண்டிர் உணவு சமைத்து விருந்தோம்பி செய்யும் ஆரவாரமும் மிகுதியாக இருந்தது என்று கூறுவதிலிருந்து அந்நாட்டின் வளத்தை அறியமுடிகிறது.

பாரி இருந்தபோது பாரிமகளிர் பறம்புமலையின் உயர்ந்த சிகரத்தில் ஏறி நின்று, பகை அரசனுடைய குதிரைகளை எண்ணுவர். ஆனால் இப்போது பாரி இறந்த பிறகு, குப்பையின் மீது ஏறி உப்பு வணிகர் உப்புச் செலுத்தும் வண்டியை எண்ணுகின்ற காட்சியைக் கண்டு, வருத்தமுற்ற கபிலர் ''இதைக் கண்டு என் வாழ்நாள் கெடுவதாக என்று வருந்திக் கூறினார்'' என்பதை அறியமுடிகிறது.

## 8.24 வேள்விமுறை செய்தமை

கையறுநிலைப் பாடல்களில் வேள்வி முறைசெய்தது பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன என்பதை

> ''முறை நற்கு அறியுநர் முன்னுறப் புகழ்ந்த
> தூஇயல் கொள்கைத் துகள் அறு மகளிரொடு
> பருதி உருவின் பல் படைப் புரிசை,
> எருவை நுகர்ச்சி, யூப் நெடுநீதூண்
> வேத வேள்வித் தொழில் முடிந்ததூஉம்
> அறிந்தோன் மற்ற அறிவுடையாளன்''[19]

என்ற புறநானூற்றுப் பாடலின் மூலம் அறத்தை முற்ற உணர்ந்த ஒழுக்கம் சிறந்த அந்தணர்களின் அவையின் கண் வேள்விக்குரிய முறையை நன்றாக அறிந்த சடங்கு இயற்றுவோர் சடங்கு செய்ய, தன்

மனைவியரோடு வேள்விகளைச் செய்து முடித்தது. வேள்விகள் செய்வதால் என்னென்ன பயன் கிடைக்கும் என்பதை எல்லாம் நன்கு அறிந்த கரிகாலன் இறந்துவிட்டானே என்று வருந்தி கையற்று கருங்குழலாதனார் பாடியதன் மூலம் அறியமுடிகிறது.

## 8.25 ஊர்களையும் தேர்களையும் தருவான்

மன்னர்களின் சிறப்பைப் பாடிய புலவர்களுக்கும் இரவலர்களுக்கும் மன்னர்கள் நாடுகளையும், ஊர்களையும், குதிரைகளையும், யானைகளையும், பொன்னையும், பொருளையும் வாரி வழங்கினர் என்பது புறநானூற்றுப் பாடலின் மூலம் தெரிய வருகிறது.

## 8.26 சிறந்த உணவை அளிப்பான்

பாரி இறந்த பின் பறம்பு மலையை விட்டுச் செல்லத் தொடங்கிய கபிலர், அங்கு தங்கியிருந்த நாளெல்லாம் இன்சுவை உணவையும் ஊன் துவை கறிச் சோறும் உண்டு அருந்திய சிறப்பையும் நினைத்துப் பாடியுள்ளார் என்பதை,

> ''மட்டுவாய் திறப்பவும் மைலிடை வீழ்ப்பவும்
> அட்டான்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்
> பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுநி
> நட்டனை மன்னோ முன்னே''[20]

இப்பாடலின் மூலம் அறியமுடிகிறது.

இத்தகைய உணவு வகைகள் சராசரி மக்களுக்கு உரியதாக அமையாமல், மன்னனுக்கும், மன்னனை நாடிய இரவலர்களுக்கும் உரியதாக விளங்கியதை உணர முடிகிறது.

மன்னனைப் புகழ்ந்து பாடிய இரவலர்களுக்கு, புளிங்கறிச் சோறு, நெய்ச்சோறு ஆகிய உணவுகளையும் அளித்து பசியாற்றினான். உலகத்தார் யாவரும் பரிசில் பெற்று பலரோடு கூடி உண்ணும் சிறப்பினை

உடைய மன்னனது முற்றத்தின் தன்மையினை கையறுநிலைப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

பரிசில் பெற வந்த புலவர்களுக்கு உணவு அளித்து மன்னர்கள் அகமகிழ்ச்சி செய்தனர். இரவலர்களின் வறுமையறிந்து உணவளித்த செய்தியினை கையறுநிலைப் பாடல்கள் மூலம் தெரிய வருகிறது.

**''செம்புற் றீயலி னின்னைப் புளித்து''[21]**

என்ற பாடலடி மூலம் ஈயல் கலந்த புளிங்கறி சோறு படைத்ததையும்

**''நறு நெய்க்கடலை விசைப்பச் சோறிட்டு''[22]**

என்ற பாடலடி மூலம் கடலைச் சேர்த்த நெய்ச்சோறு அளித்ததையும் அறியமுடிகிறது.

## 8.27 கள் வழங்குதல்

உணவில் 'கள்' முக்கிய இடத்தை பெற்றிருந்தது. மன்னர்களுக்கு இணையாகப் புலவர்களும் சேர்த்து கள்ளுண்டதையும், கள்ளை நிலத்தில் புதைத்து வைத்து பதப்படுத்தியதையும்,

**''நிலம் புதைப் பழனிய மாட்டின் தேறல்''[23]**

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. ஔவையார் முதலிய பெண்பாற் புலவர்களும் கூட மன்னனுடன் சேர்ந்து மது அருந்தினர் என்பதை

**''சிறுயகட் பெறினே எமக்கு ஈயும் மன்னே
பெரிய கட் பெறினே
யாம் பாட, தான் மகிழ்ந்து உண்ணும் மன்னே''[24]**

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் மூலம் பெறப்படுகிறது.

வள்ளல்கள் இறந்தபோது புலவர்கள் வருந்திப் பாடிய கையறுநிலைப் பாடல்களில் அவர்கள் இரவலர்களுக்குக் கள்ளை

வழங்கியது பாராட்டப்படுகிறது. அதியமான்நெடுமான்அஞ்சி கள் குறைவாக இருந்தால் அதனை ஔவையார்க்கும், இரவலர்க்கும் கொடுப்பான் தான் சிறிதும் உண்ணான். மிகுதியாக இருந்தால் தானும் உண்டு புலவர்களுக்கும் அளிப்பான்.

கபிலர் போன்ற புலவர்களும் கள்ளைப் பாராட்டிப் பேசினர். ஊர் வளத்தைப் பேசும் போது கள் மிகுதியை சேர்த்துப் பேசினர்.

> ''இன்கடுங்கள்ளி இழையணி நெடுந்தேர்க்
> கொற்றச் சோழர்''[25]

நன்கு புளித்த கள் தேள் கடுப்பன்ன கடுமையுடையதாகும் என்று பாடினார்.

எல்லாக் கொடையிலும் முதன்மையானது உணவுக் கொடையே என்பதையும், இரவலர்க்குக் கொழுப்பு, இறைச்சி, மற்றும் மதுவும் வழங்கப்பட்டன என்பதையும் அதுவே பெருமிதமாகக் கூறப்பட்டது என்பதையும் அறியமுடிகிறது.

## 8.28 இறந்தோரில் சிறந்தோர் துறக்கம் புகுவர்

ஆய் அண்டிரன் இறந்த துக்கம் தாளாத புலவர் தாம் கையற்று பாடிய பாடலில் ''இறந்தோரில் சிறந்தோர் துறக்கம் புகுவர்'' என்பார். ஆய் அண்டிரனை துறக்கத்தின் தலைவராகிய இந்திரனே வரவேற்பான் என்று அவனுடைய சிறப்பை பாடுவதை புறநானூற்று **241** வது பாடலின் வழி அறியமுடிகிறது.

## 8.29 நிரை மீட்டு உயிர்த்துறந்தவன்

வேந்தனுக்கு போருண்டாகிய பொழுதெல்லாம் அவனுக்குத் துணையாய் நின்று பொழுது வெற்றியை தேடித் தந்தவன் நிரை மீட்கப் போர் செய்து கல்லாகியவனுக்கு கோவலர் பாடலை சூட்டி வழிபாடு செய்து வருந்திப் பாடுவர்

அச்சந்தரும் வாள்போரில் வீழ்ந்தோரைப் பார்த்த யாழ்ப்பாணர், தன் ஊர் ஆனிரைகளைப் பகைவர் கவர்ந்தமை அறிந்த தலைவன் ஒருவன் அப்பகைவரை வென்று, ஆநிரைகளை மீட்குங்கால் மார்பில் அடிபட்டு தன் ஊர்க்கு அண்மையில் வந்து உயிர்த்துறந்தான்.

## 8.30 முதுமைத் துன்பம்

உலகில் மனிதர்கள் பல்வேறு பருவங்களை எய்துவர். குழந்தை சிறுவனாகிறது. சிறுவன் வாலிபனாகின்றான். வாலிபர் முதியவராக மாறுகிறார். முதுமைப் பருவம் எய்திய ஒருவர் தம் இளமைப் பருவத்தை நினைத்து வருந்துவது இயல்பே. இக்கருத்தைக் கொண்டு புறநானூற்றில் பாடல் உள்ளது.

''பிரிந்தவரைஎண்ணிப் பாடுவதுடன் கழிந்த பொருள் ஒன்றனைக் கருதிப் பாடுவதும் கையறுநிலையேயாகும்''. தன் இளமைக் கழிந்ததைக் கருதிப் பாடியதால் இப்பாடலும் கையறுநிலைப் பாடலேயாகும்.

**''இனி நினைத்து இரக்கம் ஆகின்று திணி மணல்**
**செய்வுறு பாவைக்குக் கொய் பூத் தைஇ**
....
....
**குளித்து மணற் கொண்ட கல்லா இளமை**
**அளிதோ தானே யாண்டு உண்டு கொல்லோ**
**றுதாடித் தலை வனிமுத்தண்டு ஊன்றி நடுக்குற்று**
**இவரும் இடை மிடைந்த சில சொற்**
**பெரு மூதாளரேம் ஆகிய எமக்கே''**[26]

என்ற பாடல் மூலம் வருந்தும் வருத்தம் தெரிகிறது. இப்போது நினைத்தால் வருத்தம் ஏற்படுகிறது. மணல் பாவைக்கு பூச்சூடியது குளிர்ப் பொய்கையில் விளையாடும் பெண்களோடு விளையாடியது. மருத மரத்தின் தாழ்ந்த கிளைப் பற்றி ஏறி, கரையில் இருப்பவர்கள் வியக்குமாறு 'சூடும்' என்னும் ஒலி உண்டாகுமாறு ஆழம்மிக்க நீர் நிலையில், குதித்து மூழ்கி அடி மணலை அள்ளிக் கொண்டு வந்து காட்டியது, ஆகிய இளமைக் கால செயல்கள் இனி எப்போ வாய்க்கும். பூண் பிடித்ததும் வளைந்த

உச்சியை உடையதுமான பெரிய கம்பினை ஊன்றி, தளர்ந்த இருமல் இடைஇடையே வந்து, சில சொல் உடைய பெரிய முதியவராகிய எனக்கு என்று கூறி வருந்துகிறார்.

இப்பாடல் இளமையின் இன்பத்தின் இயல்பு, முதுமையின் துன்பத்தின் இயல்பு இரண்டையும் கூறுகிறது. உலகில் மனிதராக பிறந்த அனைவருக்கும் இவ் அனுபவம் பொதுவானவையே ஆகும்.

## 8.31 தலைவியை இழந்த தலைவன்

ஆண் பெண் என்ற இரண்டு வேறு உள்ளங்கள் இணைந்த அறம் சார்ந்த பண்புகளோடு வாழ்க்கையை தெளிதலே இல்லறமாகும். அதில் ஒன்று குறைந்தாலும் அவ்வில்லறத்தின் பயன் முழுமையாகாது. அதனால் தான் தொல்காப்பியரும் இல்லறத்தில் ஒருவரையிழந்து இருப்போர் நிலை கைம்மையாக, கையறுநிலையாக இருக்குமேயன்றி வாழ்க்கையாகாது என்று குறிப்பிட்டுள்ளார். இதற்கு,

''காதலி இழந்த தபுதார நிலையும்''[27]

என்பார்.

அன்பைப் பெறும் உள்ளம் பிரிவை நாடும் போது வாடி துன்பம் அடைகின்றது. தலைவி திடீரென்று உயிர்த்துறக்கிறாள் தலைவன் வாடி நான் இன்னும் உயிரோடு இறக்கின்றேனே என்று அன்பு மிகுதியால் செய்வதறியாது கையற்று புலம்பிப்பாடுவது,

''யாங்குப் பொது ஆயினும் நோய் அளவு எனைத்தே
உயிர் செகுக்கல்லா மதுகைத்து அண்மையின்?
கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளிடைப் பொத்திய விளை விற்கு ஈமத்து
ஒள் அழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஆங்கர் மாய்ந்தனள் மடந்தை
இன்னும் வாழ்வல் என் இதன் பண்பே''[28]

என்ற பாடலில் சேரமான் கோட்டம்பலத்துத்துஞ்சியமாக்கோதை தன் மனைவி பெருங்கோப்பெண்டு இறந்த சோகத்தில் கையற்று புலம்பி பாடுவதாகும். கள்ளிச் செடிகள் முளைத்த களர்நிலமாகிய சுடுகாட்டில் வெளிப்பகுதியில் தீயை உண்டாக்கும் சிறிய விறகைப் படுக்கையாக அடுக்கி, அதில் மூட்டிய ஒளி பொருந்திய நெருப்பில் என் மனைவி மேல் உலகம் அடைந்துவிட்டாள். அவள் சென்ற பின்பும் நான் இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன் என் உயிரைப் போக்குகின்ற வலிமையற்று இருக்கிறேன்.

## 8.32 நானும் என் கலியும் எவ்விடம் புகுவேம்

மூன்றாம் நந்திவர்மன் இறந்தபோது, வருந்தி கண்ணீர் வடித்த புலவர் பிரிவாற்றாமையால் கையற்று, கையறுநிலையில் பாடுகிற பாடல் அரிய உவமைகளைக் கொண்டதாக உள்ளது என்பதை,

''வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்
தேனுறு மலராள் அரியிடம் புகுந்தாள்
செந்தழல் அடைந்ததுன் தேகம்
நானும் என்கலியும் எவ்விடம் புகுவேம்
நந்தியே நந்தியா பரனே''[29]

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. நந்தி தயாபரனே, மதி போன்ற உன் முகத்தொளி வானத்துச் சந்திரனை அடைந்தது. கடல் போன்ற நின் புகழ் கடலில் மூழ்கிவிட்டது. புலிபோலப் பாயும் உனது வீரம், காட்டில் வாழும் புலியிடம் சேர்ந்தது. கற்பகம் அன்ன நின் திருக்கரங்கள், கற்பகத்தருவை அடைந்தன. திருமகள் தன் நாயகன் திருமாலிடமே சேர்ந்துவிட்டாள். உன் புகழுடம்போ நெருப்பிடம் சேர்ந்தது இனியானும் என் வறுமையும் எங்கே செல்வோம் என்று புலவர் கையறுநிலைப் பாடலாக பாடியுள்ளார் என்பதை அறியலாம்.

## 8.33 தொகுப்புரை

1. இறந்தோரை எண்ணிப் புலம்பிப் பாடும் பாடல்களே 'கையறுநிலைப் பாடல்கள்' எனப்படும்.

2. தொல்காப்பியர் காஞ்சித்திணையிலும், புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் கரந்தை, பொதுவியல் திணைகளிலும் கையறுநிலையைப் பாடியுள்ளனர்.

3. கையறுநிலைப் பாடல்களில் சில பொதுத்தன்மைகள் காணப்படுகின்றன.

4. கையறுநிலைப் பாடல்களில் இறப்பு பற்றிய செய்திகள், மன்னனின் கொடைச்சிறப்பு, இயற்கைவளம், நாட்டுவளம், ஆகியவை பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

5. மன்னனின் இறப்பு புலவர்களுக்கு மிகுந்த துன்பத்தைத் தந்ததால், தானும் இறந்து விடுதல் நல்லது என்று எண்ணினர்.

6. கூற்றுவனை 'குருடன்' என்று குறிப்பிடுவதை கையறுநிலைப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

7. நடுகல் பற்றிய பல செய்திகள் கையறுநிலைப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

8. தந்தையின் மறைவு குறித்து வாடும் மகளிர், மகனின் வீர மரணம் கேட்டுப் புலம்பும் தாய், கழிந்த இளமையை எண்ணி வருந்தும் முதியோன், நடுகல் போற்றும் சான்றோன் என்று மனத்தின் துயரத்தை வெளிப்படுத்தும் விதம் கையறுநிலைத் துறைப் பாடல்களில் காணப்படுகிறது.

9. போர்க்களத்தில் மட்டுமல்லாமல், பிற இடங்களிலும் மானக்குறைவு ஏற்பட்டால், வீரர்கள் வடக்கிருந்து உயிர்த்துறப்பர் என்பதும் கையறுநிலைப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

10. வேள்வி செய்தமுறை பற்றிய செய்திகளை அறியமுடிகிறது.

11. மன்னர்கள் இரவலர்களுக்கு, நாடுகளையும், ஊர்களையும், குதிரைகளையும், யானைகளையும், பொன்னையும், பொருளையும், வாரி வழங்கினர்.

12. சிறந்த உணவு, கள் வழங்கி சிறப்பு செய்த செயல் ஆகியவை அறியமுடிகிறது.

13. பிரிந்தவரை எண்ணிப் பாடுவதுடன், கழிந்த பொருள் ஒன்றனைக் கருதிப் பாடுவதும் கையறு நிலையேயாகும்.

# அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம் - இளம்பூரணர் உரை - பொருளதிகாரம் புறத்திணையியல், நூ. 22.
2. புறப்பொருள் வெண்பாமாலை - கரந்தை, நூ. 10
3. புறப்பொருள் வெண்பாமாலை - பொதுவியல், நூ. 28
4. மேலது நூ.29
5. புறநானூறு 165
6. மேலது 242
7. மேலது 238
8. மேலது 238
9. மேலது 219
10. மேலது 240
11. மேலது 230
12. மேலது 227
13. தொல்காப்பியம் - இளம்பூரணர் உரை - பொருளதிகாரம் புறத்திணையியல், நூ. 2
14. புறநானூறு 270
15. மேலது 112
16. மேலது 65
17. மேலது 278
18. மேலது 117
19. மேலது 224
20. மேலது 113
21. மேலது 119
22. மேலது 120
23. மேலது 120
24. மேலது 235
25. நற்றிணை 10
26. புறநானூறு 243

27. தொல்காப்பியம் - இளம்பூரணர் உரை பொருளதிகாரம் - புறத்திணையியல், நூ. 22

28. புறநானூறு 245

29. நந்திக்கலம்பகம் 113

## முடிவுரை

முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் மழையின்மையால் திரிந்து, தத்தமது நிலையை இழந்து பாலையாக மாறும் என்று சிலப்பதிகாரத்திலும், சிறுபாணாற்றுப்படையிலும், நம்மாழ்வார்ப் பாடல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

'செம்புலம்' என்பது பாலை நிலத்தையே குறிக்கும், பாலை நிலத்தின் வெம்மையை பெரும்பாலான பாடல்கள், விலங்குகளைச் சுட்டியும், பறவைகளைச் சுட்டிக்காட்டியும், இயற்கைச் சீரழிவைச் சுட்டிக்காட்டியுமே விளக்கியுள்ளன. வெம்மையால் உருவானது மட்டுமே பாலை நிலமாகக் கருதப்படவில்லை. ஒன்றுக்கும் உதவாத களர் நிலங்களும், பிணங்களை எரிக்கும் இடம், போரால் பாழ்பட்ட நிலம், பகைவர்களால் தீயிட்டுக் கொளுத்தப்பட்ட இடமும் 'பாலை' என்றே பெயர் பெறும்.

கோல் கோடிய மன்னனின் செங்கோலாட்சிக்கு பாலை நிலமே உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

பாலை நிலத்தில் வாழ்ந்த ஆறலைக்கள்வர்கள், தம் தொழிலாகிய வேட்டையாடுதலையே மேற்கொண்டனர். மழையின்றி வறுமையானதால் தான் 'ஆறலைத்தல்தொழிலை' மேற்கொண்டனர். மக்களின் வாழ்வியல் உண்மைகளும் பாலைத்திணையிலேயே அதிகமாக பாடப்பட்டுள்ளன.

காதல் வாழ்க்கை உடையவர்க்கு கடமையும் உண்டு, கடமை ஆற்றுவதற்காக தலைவன் தலைவியைவிட்டுப் பிரிவும் நிகழ்த்துவான்.

ஓதற்பிரிவு, பகைப்பிரிவு, தூதுப்பிரிவு, காவற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு, பரத்தையர் பிரிவு என்று பிரிவின் வகைகள் ஆறு என்பதை, தொல்காப்பியம், இறையனார்அகப்பொருள்,

நம்பியகப்பொருள், மாறனகப்பொருள் ஆகிய நூல்களும் குறிப்பிடுகிறது. தலைவன் களவு, கற்பு இரு வகைக் காலத்தும் பிரிவு நிகழ்த்துவான்.

தலைவன் தலைவியை தன்னுடன் உடன்கொண்டு செல்லுதலும் உண்டு. உடன்போக்கும், ஒரு வகையான திருமணமேயாகும். உடன்போக்கை பாலைத்திணையில் வைத்ததும் பொருத்தமேயாகும்.

பிரிவுக்காலத் துன்பங்களைக் குறிப்பிடும்போது தலைவனைப் பிரிந்த தலைவியின், துன்பமே மிகுதியாகக் காட்டப்படுகிறது. ‘வினையே ஆடவர்க்கு உயிரே’ என்பதால், வினை முடிப்பதிலேயே கண்ணாக இருப்பதால், பிரிவுத் துன்பம் தலைவனை வெகுவாக பாதிப்பதில்லை.

தலைவியின் துன்பம் உடல்மொழியால் வெளிப்படுகிறது. உள்ளத்தின் கழிபடர்கலக்கம், புதுக்கவின் இழத்தல், கால் விரலால் நகத்தைக் கீறல், கால் நிலையாமை, நாநடுக்கம், நவிலாக்கிளவி, பசலை, மேனி நலம் தொலைதல், மெலிதல், உறக்கமின்மை, வெப்பப்பெருமூச்சு என்பதாகும். தோழியுடனும், சில நேரங்களில் நெஞ்சுடனும் புலம்புவாள்.

இங்ஙனம் பிரிவால் வருந்திய தலைவிக்கு, கார்காலமும், கூதிர்காலமும், மாலைப்பொழுதும், வாடைக் காற்றும், புள்ளின் ஓசையும், மலரின் மலர்ச்சியும், மணியின் ஓசையும், கடலின் குரலும், கோவலர் ஊதும் குழலின் ஓசையும் பிரிவுத்துன்பத்தை அதிகப்படுத்தும்.

இவற்றையெல்லாம் கண்ட தலைவனுக்கும் பிரிவுத் துன்பத்தை அதிகப்படுத்தும். தலைவனுக்கும் தலைவியினால் பிரிவினால் வருத்தம் இருப்பினும் வினையில் ஈடுபடுவதாலும், தோழி போன்று நெருக்கமானவர்கள் இல்லாததாலும், மற்றவர்களிடம் கூறுவதை ஆண்மைக்குறைவாக நினைப்பதாலும் தலைவியின் பிரிவைத் தன் நெஞ்சிடமே கூறுகிறான்.

தலைவியின் பிரிவுத்துன்பத்திற்கு ஈடாகவே தலைவனின் பிரிவுத் துன்பமும் உள்ளது என்பதை அறியமுடிகிறது.

கற்பு காலப் பிரிவை விட, களவு காலப் பிரிவிலேயே தலைவி பிரிவாற்றாமையால் மிகவும் துன்பப்படுகிறாள்.

திணைவேறுபாடு, செல்வநிலை வேறுபாடு, வயது வேறுபாடு தாமே (தலைவி) விரும்பிய வாழ்க்கையில் எதிர்பார்த்த அளவுக்கு இன்பம் கிடைக்காமல், தலைவனால் ஏமாற்றமடைவாளோ என்ற பல காரணங்களால் தலைவியின் அன்னை, தமர் வரைவிற்கு உடன் படாமல் இருந்தனர்.

அறத்தொடு நின்றபின், தாய் தந்தையர் விருப்புடன் திருமணம் நடந்த போது கூட, தலைவனிடம் யாரும் தலைவியை நல்லபடியாக பேண வேண்டும் என்று அறிவுரை கூறியதற்குச் சான்றுகள் இல்லை. உடன்போக்காகத் தலைவியைத் தலைவனுடன் அனுப்பும் தோழியே அறிவுரை கூறுகிறாள். தலைவிக்கு இறுதிவரை தலைவனே துணை என்பதையே உடன்போக்குப் பாடல்கள் உணர்த்துகின்றன.

தலைவி உடன்போக்கு சென்றுவிட்டாள் என்பதை அறிந்து, அன்னை, பிரிவின் போது சுரவழியில் தலைவன் இறந்துபட அவலச்சுவை கொண்டு முதுபாலையாகிவிடக்கூடாது என்றும் வருந்துகிறாள்.

முதலில் உடன்போக்கை நினைந்து அதிர்ச்சியாகி, பின் தலைவனைச் சாடி, அவனை ஈன்ற தாயைச் சாடினாள் வழியிடை துன்பத்தை நினைத்து வருந்தி வயலைக்கொடியிடம் புலம்பினாள், கண்டோர், அந்தணர்கள் கூறியபடி 'உடன்போக்கு அறநெறியே' என்று தெளிந்தாள். தலைமக்கள் திரும்பி வர விரும்பி, வேலனிடம் குறிகேட்டாள். விருந்தினர் வர காக்கையை கரையுமாறு வேண்டினாள். சிலம்புகழிநோன்பு தான், தன் வீட்டில் நடைபெறாமல், தலைவன் வீட்டில் நடைபெற்றது, திருமணமாவது தன் வீட்டில் நடைபெற விரும்பினாள். தலைமக்கள் திரும்பி தன் இல்லம் வந்ததை, சுற்றத்தினரை அழைத்துக் கூறி மகிழ்ந்தாள். சமூகமும் தலைமக்களை ஏற்றுக்கொள்ள வேண்டும், என்பதை தாய் விரும்பினாள் என்பது பெறப்படுகிறது.

கண்டோர் உடன்போக்கிற்கு உதவி செய்தோராவர் இதனால் பழந்தமிழ் மக்கள்பால் களவொழுக்கம் பெற்றிருந்த மதிப்பின் அளவும் பெறப்படுகிறது.

சங்க இலக்கியங்களில், தலைவனும் தலைவியும் உடன்போக்கு மேற்கொள்வது, அன்பின் ஐந்திணையேயாகும். தலைவியின் கற்பினைக் காக்கும் முயற்சியாக மேற்கொள்ளப்படுவது ஆகும். ''சிறந்தானை வழிபடச் சென்றனள்'' என்று கலித்தொகை கூறுகிறது.

தலைவியின் தாயாரால் தலைவன் பழிக்கப்படுகிறான் என்பதையும், தலைவி பெரும்பாலும் செல்வச்செழிப்பில் பிறந்தவள் என்பது சங்க இலக்கியத்தின் மூலம் தெரிய வருகிறது.

உடன்போக்கு என்பது (அலர் தூற்றும் பெண்டிரால்) பிறரால் வெறுக்கத்தக்கதாக இருந்ததை அறியமுடிகிறது. ஏனெனில் தாயொருத்தி தன் மகள் தலைவனோடு சென்று விட்டதை அறிந்தோர் கூறுவரே என்று வருத்தப்படுவதைக் காணமுடிகிறது. பிறர் பழி பேசுவர் என்று அஞ்சிய தாயின் நிலை, மானத்தைப் பெரிதென மதித்ததை அறியமுடிகிறது.

மகளிர் காக்கப்பட்டமைக்கு, அவர்களின் பருவமே காரணமாகும் களவு என்பது உலகியற்கை என்றும், மணவினை என்பது ஊழால் அமைவது என்றும், அக்கால மக்கள் கருதினும், மகளிர் தாமே விரும்பி மேற்கொண்ட மணம் எதிர்பார்த்த மகிழ்ச்சியை தராமல், துன்பத்துக்கு ஆளாகிவிடின் என் செய்வது என்ற கவலையே பெற்றோர்க்கு இருந்தது.

சங்க இலக்கியங்களில் பெண்ணுக்கு உரிமையில்லை என்பதும், அவள் கணவனுக்குக் கட்டுப்பட்டவள் தான் என்பதும் கணவன் பரத்தையினாற்பிரிந்து சென்று தலைவியைக் கொடுமைப்படுத்தினாலும் அவனுடனேயே கூடி இருந்துதான், அவள் வாழவேண்டும் இப்படி வாழ்பவளே, 'சிறந்த அன்பான மனைவி' என்ற கொள்கையே இருந்தது.

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் மனம் நொந்த தலைவி ஆற்றாமையாலும், மனவேறுபாட்டாலும், வாயில்கள் இடத்தில் புலம்பினாலும், பாணனிடம் பரத்தையைச் சாடி பேசியமையாலும் தன் மன உணர்வுகளை ஓரளவுக்கு வெளிப்படுத்தினாள்.

தலைவிக்கு மகப்பேறு பிறந்த உடனே வராத தலைவனைக் கோபிக்காமல், தனது கோபத்தை பரத்தை மீது செலுத்துகிறாள்.

'வாயில் மறுத்தல்' மூலம் பரத்தமை தவறு என்பதும் 'வாயில் நேர்தல்' மூலம் அத்தவறு மீண்டும் நேராமல் திருத்திக் கொள்ளப்பட வேண்டும் என்றும் உணர்த்தப்பட்டது.

ஆண்கள் சென்று இன்பம் துய்க்கும் நிலையில் பரத்தையர்கள், தலைவனின் பொருட்களை எல்லாம் கவர்ந்தாள் என்றோ, அது பற்றி தலைவி பிணங்கினாள் என்றோ, அதனால் தலைவன் வறுமையுற்றான் என்றோ சங்க இலக்கிய மருதப் பாடல்கள் அமையவில்லை.

தலைவனின் மகன் வீதியில் வரும்போது கண்ட பரத்தை தனது மோதிரம் நகைகளை சிறுவனுக்கு அளித்தாள் என்பதிலிருந்து, பரத்தையர் பொருள் நாட்டம் உடையவர் அல்லர் என்பது பெறப்படுகிறது.

பரத்தையை வழிப்பட்ட பின்பு தலைவன் தன் வீட்டினுள் புக அஞ்சுகிறான். புகும் உரிமையை இழக்கிறான், கேட்டுப் புக வேண்டிய நிலைக்குத் தாழ்கிறான்.

தலைவன் தான் விரும்பிய பெண்ணை மணப்பதற்கு இடையூறு பல இருப்பினும், எப்படியேனும், அவளின் தந்தைக்கு குற்றேவல் புரிந்தேனும் பெற முனைந்தவன், தலைவியை தனக்குத் தர மறுத்தால் அறங்கூறும் அவையத்தில் முறையிட்டேனும் தலைவியைப் பெறுவேன் என்று கூறிய தலைவன், திருமணம் முடித்து பின் சிறிது காலம் கழித்துப் பரத்தையை நாடிச் செல்கிறான்.

பின் மீண்டு வந்த போது, தலைவி ஊடல் கொண்டதால், தலைவியின் காலில் விழுந்து, தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறான். இதைக் கண்ட தலைவி தன்னுடைய கோபத்தை எல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு, அவனை ஏற்றுக்கொண்டு, ''சிறுவர் அறியாது செய்த இழிசெயல் போன்றது, உன்னுடைய செயல் உன் செயல் நகைப்பிற்குரியது இதற்காக வருந்தாதே'' என்று கூறி தழுவிக் கொண்டாள்.

இதை எல்லாம் எண்ணும் போது தலைவன் தலைவியின் மீது அளவு கடந்த விருப்பம் கொண்டிருந்தான் என்பதை விட, தான் நினைத்ததை சாதிக்க எதையும் செய்வான் என்பதே பெறப்படுகிறது.

தலைவன் பரத்தை ஒழுக்கம் புரிய, தலைவி ஊடுவாள். அவ்வூடலை வாயில்கள் தீர்ப்பர் ஊடல் கொள்வதால் ஏதும் பயனில்லை அவ்வாறு ஊடல் கொண்ட பெண்களின் மனநிலை பாதிக்கப்படுவதுடன், சமைக்க அரிசி இன்றியும், குழந்தைக்கு பால் இன்றியும், சுற்றத்தார் யாரும் இன்றியும் தனித்து நின்று, வருத்தப்படுவதைக் கண்டும், நீ தலைவனிடம் ஊடாதே என்று தோழி கூறினாள். தோழி, தலைவனிடம் முன்பு வேப்பங்காயை தலைவி தந்தாலும், 'வெல்லக்கட்டி' என்று கூறியவன் இப்போது குளிர்ந்த நீரைத் தந்தாலும், அது வெப்பமுடன் உப்புச் சுவையுடையாக உள்ளது என்று கூறியதைக் கண்டித்தாள்.

ஒருவருடைய கருத்தை மற்றொருவரிடம் சரியாகக் கொண்டு சேர்ப்பது, 'வாயில்' அவ்வாயிலாக செவிலி செயல்பட்டாள்.

பாணன் தலைவன் வினைமேற் சென்று, குறித்த பருவம் வராமல் காலம் தாழ்த்தினான், இதனால் தலைவி மிகவும் வருந்தினாள். தலைவியின் நிலையைக் கண்ட பாணன், தலைவனிடம் சென்று கூறினான். தலைவன் கூறிய செய்தியை, தலைவியிடம் வந்து கூறினான். தலைவன் தங்கியதைக் கண்ட தலைவி, வருந்தி அழுத போது, தலைவனிடம் சென்ற பாணன், ''நின் மனைவியின் கண்ணீர் பற்றி நீ கவலைப்படாததால் யான் நினக்கு பாணரும் அல்லேம் நீ எனக்கு குரிசிலை இல்லை'' என்று கூறினான்.

பாணன், தலைவன் தலைவிக்கு மட்டும் ஊடல் தீர்க்கவில்லை. காமக்கிழத்திக்கும், பரத்தைக்கும் ஊடல் தீர்க்கும் வாயிலாக செயல்பட்டான்.

புதல்வன், விருந்தினர், காமக்கிழத்தியும் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே உள்ள ஊடலைத் தணிக்கும் வாயிலாகச் செயல்பட்டனர்.

தலைவனைப் பிரிந்த தலைவியே மிகவும் வாடும் போது, தலைவனை இழந்த தலைவி பிரிவாற்றாமையால் மிகவும் துன்பப்பட்டாள். கணவன் இறந்தவுடன் உயிர்விடுதல், கணவன் இறந்தபின் உடன் கட்டை ஏறி உயிர்விடுதல் என்ற முதல் இடைகற்பையே பெரிதும் விரும்பினர்.

கடைகற்பாகிய கைம்மைநோன்பு நோற்று வாழும் நிலையை பெரிதும் விரும்புவதில்லை கணவனுடன் உயிர்நீத்தலுக்கு, கைம்மைத்துன்பம், மிகுதியானஅன்பு, மானஉணர்வு, மேலுலகக்கோட்பாடு, தீயின்தூயத்தன்மை போன்றவையே காரணங்களாகின்றன. கைம்மை நோன்பின் கடுமையான கூந்தல் களைதல், அணிகலன்கள் களைதல், தரையில் பாயின்றி உறங்குதல், உணவில் கட்டுப்பாடு, குளிர்ந்த நீரில் மூழ்குதல் போன்றவைகள் கடுமையாக இருந்ததால் கைம்மை நோன்பு இருத்தலை விட, உடன்கட்டைஏறி உயிர்விடத் துணிந்தனர். கைம்மை நோன்பு மேற்கொண்டு வாழ்ந்தால், மறு பிறவியிலாவது கணவனுடன் சேர்ந்து வாழலாம் என்ற கருத்தே வலியுறுத்தப்பட்டது.

கணவனைப் பிரிந்த பெண்கள் தம்மை அலங்கரித்துக் கொள்ளவில்லை என்ற போது, கணவனை இழந்த பெண்கள் அனைத்தையும் துறந்த நிலையே காணப்படுகிறது.

கணவனை இழந்த மகளிர் 'உயவற்பெண்டிர், கழிகலமகளிர்' என்று அழைக்கப்பட்டனர். கணவனை இழந்த மகளிர் நூற்புத் தொழிலில் ஈடுபட்டனர். இவர்களை 'பருத்திப்பெண்டிர்' என்று அழைத்தனர்.

அஃறிணை உயிர்கள் கூட, கைம்மை நிலையை ஏற்க விரும்பாமல் உடனே இறந்து விடுதலையே விரும்புகிறது என்பது பெறப்படுகிறது.

கணவனுடன் வாழும் பெண்கள் பலவகையான அணிகலன்கள், ஒப்பனை அலங்காரம், பஞ்சணைப்படுக்கை, சுவையான உணவு என பலவகைகளிலும் இன்பமாகவே வாழ்ந்தனர் என்பதும், கணவன் இறந்தபின் அவை அனைத்தையும் இழந்து, தன்னைத் தானே வருத்திக்கொண்டு வாழ்வதே கற்பின் அடையாளமாக வலியுறுத்தப்பட்டது.

இறந்தோரை, எண்ணிப் புலம்பிப் பாடும் பாடல்களே கையறுநிலைப்பாடல்கள் எனப்படும். கையறுநிலைப்பாடல்கள் பெரும்பாலும் மன்னனின் வீரம், வெற்றிச்சிறப்பு, கொடை, புகழ் ஆகியவற்றைப் புகழ்ந்தும் அவன் இறந்தபோது, இது குறித்து வருந்தி கையற்றுப் பாடுவர். தலைவன் இறந்த போது தானும் இறந்து விடுவதே நல்லது என்று வருந்தி மொழிவர்.

வீரத்தாயின் நிலைப்பாடு, தந்தையின் பிரிவுத்துயரம், முதுமைத் துன்பம் இவற்றைப் பாடுவதும் கையறுநிலையேயாகும். புறப்புண்பட்டதை நாணி வடக்கிருந்து உயிர்த்துறத்தலையும் பாடுவர்.

ஒவ்வொரு இயலிலும் கருத்துக்கள், நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து நிகழ்வன போல் கோர்வையாக அமைக்கப்பட்டுள்ளது.

தலைவனை இழந்த தலைவியின் பிரிவாற்றாமையை, அவள் படும் துயரத்தைக் கூறும் பொழுது, தலைவி தலைவனுடன் வாழும் போது, பலவகைகளிலும் இன்பமாகவே வாழ்ந்தனர் என்பதும், கணவர் இறந்தபின் அவை அனைத்தையும் இழந்து, தன்னைத்தானே வருத்திக்

கொண்டு வாழ்வது என்ற இருநிலைகளும் அடுத்தடுத்து அமைக்கப்பட்டுள்ளது.

தலைவனும், தலைவியும் அன்புடன் கூடி இன்புற்றிருந்த காலத்தை விடவும், பிரிவு காலத்தில் தான் ஒருவரை ஒருவர் இன்றியமையாதவர் என்ற உண்மையை உணர்ந்து வெளிப்படுத்துகின்றனர் என்பதை உணர்த்தும் கருதுகோளே ஆய்வின் முடிவாகவும் அமைகிறது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்

### சங்க இலக்கியங்கள்

1. ஆலிஸ்.ஆ, (உரை.ஆ), பதிற்றுப் பத்து மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை , 2004.

2. சுப்பிரமணியன்.பெ, (உரை.ஆ), தட்சிணாமூர்த்தி .அ, பரிபாடல் மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

3. செயபால்.இரா,(உரை.ஆ), அகநானூறு மூலமும் உரையும், உரையாசிரியர், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

4. தட்சிணாமூர்த்தி, (உரை.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை , 2004.

5. நாகராசன்.வி, (உரை.ஆ) குறுந்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

6. நாகராசன்.வி, (உரை.ஆ), பத்துப்பாட்டு இரண்டாம் தெகுதி மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

7. பாலசுப்ரமணியன்.கு.வெ, (உரை.ஆ), நற்றிணை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

8. பாலசுப்ரமணியன்.கு.வெ, விசுவநாதன்.அ, (உரை.ஆ), புறநானூறு மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

9. மோகன்.இரா, (உரை.ஆ), பத்துப்பாட்டு முதற் பகுதி மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

10. விசுவநாதன்.அ, (உரை.ஆ), கலித்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.

## துணைமை ஆதாரங்கள்

1. அகத்தியலிங்கம்.ச, சாகாவரம் பெற்ற சங்கப் பாடல்கள், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2002.

2. அண்ணா, சோ.ம., சங்க இலக்கியத்தில் குடும்பம், ராஜசெல்வி பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

3. அருணாசல தேசிகர், சோ., நந்திக்கலம்பகம், முல்லை நிலையம், சென்னை, 1991.

4. அறவாணன், க.ப., அற்றை நாட்காதலும் வீரமும், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2002.

5. அனுராதா, ஆர்., சங்க இலக்கியங்களில் அறக்கருத்துக்கள், தமிழாய்வு மன்றம், சென்னை, 2007.

6. அனுராதா, ப., சங்க பேழை, திருமதி. ரமணி பரந்தாமன், சென்னை, 2006.

7. ஆறுமுகம்.ஆ, சங்க இலக்கியத்தில் குடும்ப உடைமை அரசு, திருமழப்பாடி, 2008.

8. ஆறுமுகம், தி., தொல்காப்பியமும் உளவியலும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2008.

9. ஆனந்த நாயகி, ப., அகநானூற்றில் அன்பு, காமராஜ் பதிப்பகம், குமரிமாவட்டம், 2008.

10. இராமசாமி, எச்., கலித்தொகை கூறும் உண்மைகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2004.

11. இராமசுப்பிரமணியன், வ.த, (உரை.ஆ) நம்பியகப்பொருள் மூலமும் உரையும், முல்லை நிலையம், சென்னை, 2000.

12. இராமசுப்பிரமணியன், வ.த, புறப்பொருள் வெண்பா மாலை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2009.

13. இளங்குமரனார், இரா., தமிழர் வாழ்வியல் இலக்கணம், அமிழ்தம் பதிப்பகம், சென்னை, 2004.

14. இளம்பூரணர் உரை, தொல்காப்பியம், பொருளதிகாரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை, 1953.

15. ஏழுமலய், சொ., சங்க இலக்கியத்தில் ஆண் பெண் உறவு, வெர்சா புக்ஸ், சென்னை, 2008.

16. கபிலன், வே., தமிழ் இலக்கியச் செல்வம், அருணாதயம், சென்னை, 2002.

17. கண்ணதாசன், சோ., அகத்தில் பிரிவாற்றாமை, பாவை பப்ளிகேசன்ஸ், சென்னை, 2008.

18. கருப்பதேவன். உ, சங்க இலக்கியச் சோலை, கற்பகவள்ளி பதிப்பகம், மதுரை, 2007.

19. காளிமுத்து, கா., தொல்காப்பியம் அதன் இலக்கியக் கொள்கைகளும் குறுந்தொகையும், பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2003.

20. குமார், இரா., சங்க இலக்கியப் பதிவும், பார்வையும் அருமா பதிப்பகம், கொரடாச்சேரி, 2008.

21. குலோத்துங்கன். தி., குறுந்தொகைக் காட்டும் காதல் காவியங்கள், பைந்தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 2007.

22. கோதில் மொழியன், சின்., தொல்காப்பியத்தில் சாதி வெறி, வசந்த செல்வி பதிப்பகம், 1988.

23. கோவிந்தன், த., அன்பொடு புணர்ந்த ஐந்திணை பாலை I வேமன் பதிப்பகம், சென்னை, 2002.

24. கோவிந்தன், த., அன்பொடு புணர்ந்த ஐந்திணை பாலை II வேமன் பதிப்பகம், சென்னை, 2002.

25. சந்திரசேகரன், கா.பெ., சங்கத்தமிழ் இன்பம், தமிழ் அகம், சென்னை, 2006.

26. சரளா ராஜகோபாலன், சங்க இலக்கியம், ஒளிப்பதிப்பகம், சென்னை, 1988.

27. சரளா ராஜகோபலன், இலக்கியக் காட்சிகள், ஒளிப்பதிப்பகம், சென்னை, 1991.

28. சாந்தி, சு., சங்கத் தலைவனின் உள்ளம், மங்கைப் பதிப்பகம், சிதம்பரம், 2007.

29. சாமி, பி.எல்., சங்க நூல்களில் செடி கொடிகள், திருமுடிப்பதிப்பகம், வில்லியனூர், 1997.

30. சிவகாம சுந்தரி, மா., சங்க இலக்கியம் காட்டும் குறுந்தொகை பாடல்கள், ரோஸ் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2009.

31. சிவராஜ், து., சங்க இலக்கியத்தில் உளவியல், சிவம் பதிப்பகம், வேலூர், 1994.

32. சீனிவாசன், ச.பொ., சங்க இலக்கியத்தில் அகவுணர்வு உயிரினப் பயன்பாடு- நற்றிணை, சேகர் பதிப்பகம், சென்னை, 2005.

33. சுகன்யா, கோ., குறுந்தொகைக் காதலர்கள், தமிழ்ச்சாரல், சென்னை, 2008.

34. சுப்பிரமணியபிள்ளை, க., பழந்தமிழர் நாகரிகம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2009.

35. சுயம்பு, தமிழ் இலக்கிய அறிமுகம், இலக்குமி நிலையம், சென்னை, 2007.

36. செல்லையா பிள்ளை, சு., மாறனகப்பொருள், தி.பார்க்கர், சென்னை, 2005.

37. செல்வக்குமார், மு.சி., தமிழ் செவ்விலக்கிய மரபில் சமயம், அன்றில் பதிப்பகம், சென்னை, 2008.

38. செல்வராசு, நா., பண்டையத் தமிழர் திருமணவாழ்க்கை, காவ்யா பதிப்பகம், சென்னை, 2009.

39. செல்வராசு, நா., சங்க இலக்கியம், சமூக மானுடவியல், சபா நாயகம் அச்சகம், சிதம்பரம், 1996.

40. செல்வராசு, நா., சங்க இலக்கிய மறுவாசிப்பு, காவ்யா பதிப்பகம், சென்னை, 2005.

41. செல்வராசு, அ., சங்க இலக்கியத்தில் பாழ்நிலப் பயணம், ஸ்ரீநிதி ஆப்செட், திருச்சி, 2006.

42. சௌந்தரபாண்டியன், சு., தமிழில் கோவை இலக்கியம், பாரதி புத்தகாலயம், சென்னை, 2002.

43. ஞானசம்பந்தன், அ.ச., இலக்கியக்கலை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1999.

44. திலகவதி, க., சங்க கால மகளிர் வாழ்வியல், இறையருள் பதிப்பகம், திருச்சி, 2001.

45. தேவி பிரியா, சூ., சங்க இலக்கியத்தில் மகட்போக்கிய தாய், கலைஞர் நகர் மேற்கு, சென்னை, 1999.

46. நடேசன், த., தொல்காப்பியர் கண்ட சமுதாயம், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2008.

47. நிர்மலாமோகன், சங்க இலக்கியச் சால்பு, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2006.

48. பார்த்தசாரதி, நா., கலித்தொகை பரிபாடல் காட்சிகள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 2000.

49. பாலாஜி, பு., சங்க இலக்கியம் ஒரு கண்ணோட்டம், நாகு வெளியீடு, சென்னை, 2001.

50. புலியூர்க் கேசிகன், கலிங்கத்துப்பரணி மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், 2009.

51. புவனேஸ்வரி, ச., சங்க பெண்பாற் புலவர்களின் புறப்பாடல்கள் தீபிகா பதிப்பகம், சென்னை, 2007.

52. பூவை அமுதன், நீதிநூற்களஞ்சியம், கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2000.

53. மணிவேல், மு., காதல் புனைவுகள், முத்து நாயகி, பதிப்பகம், மதுரை, 2006.

54. மணிவேல், மு., தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள் அன்னைப் பதிப்பகம், மதுரை, 2004.

55. மகேஸ்வரி, மா., குறுந்தொகையில் பாலைப்பாடல்கள் பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2007.

56. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2009.

57. மாதையன், பெ., சங்க கால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

58. மாரப்பன், எம்., தொல்காப்பியரின் உளவியல் கோட்பாடுகள், தி.பார்க்கர், சென்னை, 2007.

59. முருகேசன், க., சங்க இலக்கியத் தேனமுதம், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2008.

60. ரமேஷ் சாமியப்பா, அகப்பாடல்களில் செவிலி, நீலா பதிப்பகம், பட்டுக்கோட்டை, 1995.

61. ராசமாணிக்கனார், மா., தமிழர் திருமணத்தில் தாலி, நெய்தல் பதிப்பகம், சென்னை, 2009.

62. ராவ்பகதூர், ச., (பதி.ஆ) இறையனார் அகப்பொருள், முல்லை நிலையம், சென்னை, 2006.

63. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும், தமிழ்ச் சமூக உருவாக்கமும், தமிழினி, சென்னை, 2006.

64. வரதராசன், மு., பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை,2005.

65. வரலட்சுமி, இரா., சமூதாய நோக்கில் காமத்துப்பால், பிரியா பதிப்பகம், சென்னை,2008.

66. வனிதாராணி, ப., நல்லக் குறுந்தொகையில் பொல்லாப் பிரிவு, சியாம் ஆதவ் பதிப்பகம், புத்தனாம்பட்டி, 2007.

67. விசுவநாதன், அ., சங்க இலக்கியச் சிந்தனைகள், மங்கைப் பதிப்பகம், காரைக்குடி, 1995.

68. விமலா, சு., நற்றிணையில் அக வாழ்வின் அழகு, திருக்குறள் பதிப்பகம், சென்னை, 2009.

69. விவேகானந்தன், நா., தொல்காப்பியத்தில் அகப்பொருள், விவேகானந்தா பதிப்பகம், நாகர்கோவில், 2005.

70. விஜயகுமார், மு., புறநானூற்று புலவரும் புரவலரும், அசுபதிப்பதிப்பகம், சிதம்பரம், 2008.

71. வீரப்பன், ஏ., பழந்தமிழர் வாழ்வியல், குகன் பதிப்பகம், திருவாரூர், 2009.

72. வெற்றிவேல், க., தமிழரின் காதலும் வீரமும், ஸ்ரீராம் பதிப்பகம், சிதம்பரம், 2008.

73. ஜெகதீசன், இரா., தொல்காப்பிய பொருளதிகார வழி அகநானூறு - ஓர் ஆய்வு, முருகு பதிப்பகம், ஆம்பூர், 2002.

74. ஜெயக்குமார், அ., அகநானூற்றில் பாலை நிலம், பல்லவி பதிப்பகம், தென்னிந்தியா (பி) லிமிடெட், ஈரோடு, 2008.

75. ஹம்ஸா, மு., தொல்காப்பியரின் பொருளிலக்கண கோட்பாடுகள்-I ராபியா பதிப்பகம், சென்னை, 2007.

**ஆய்வுக் கட்டுரைகள்**

1. அரங்க முருகையன். மு., (பதி.ஆ), அறவேந்தன், இரா., தமிழ்வேலு, சு., சங்க இலக்கிய ஆய்வுகள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,சென்னை, 2000.

2. அரங்க முருகையன். மு., (பதி.ஆ), அறவேந்தன், இரா., தமிழ்வேலு, சு., தொல் காப்பிய ஆய்வுகள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,சென்னை, 2000.

3. சக்குபாய், இரா., (பதி.ஆ), சங்க கால தமிழர் சமயம், பாலம்பாரத் அடுக்ககம், சென்னை, 2006.

4. சந்திரசேகரன், இரா., (பதி.ஆ), சங்க இலக்கியம் கருத்தியல் வளம், மக்கள் அச்சகம், சென்னை, 2003.

5. முல்லை சங்கமம், வீ., (பதி.ஆ), விஜயசந்திரன், சங்க இலக்கியம், கருத்தியல் வளம், மக்கள் அச்சகம், சென்னை, 2003.

# I. பாலைநில வாழ் தாவர இனங்கள்

குறிஞ்சியும் முல்லையும் திரிந்த பாலை நிலத்தில், ஏராளமான மரங்களும், செடிகொடிகளும் ஞாயிற்றின் வெம்மையால் வாடியபடியானாலும் இருந்தன.

1. ஆத்தி (அகம் 269)
2. கரந்தை (அகம் 269)
3. ஆவிரை (அகம் 301)
4. எருக்கு (அகம் 301)
5. இத்தி (அகம் 345)
6. இலவம் (அகம் 11)
7. இற்றி (அகம் 57)
8. காயா (அகம் 133)
9. கள்ளி (அகம் 231)
10. ஞெமை (அகம் 353)
11. தேக்கு (அகம் 225)
12. நாரத்தை (அகம் 141)
13. நெல்லி (அகம் 69)
14. பலா (அகம் 323)
15. பாகல் (அகம் 177)
16. பிரண்டை (அகம் 119)
17. மரா (அகம் 3)
18. முருக்க மரம் (அகம் 223)
19. மூங்கில் (அகம் 1)
20. யா (அகம் 33)
21. வரகு (அகம் 367)
22. வாகை உறிஞ்சல் (அகம் 45)
23. விளா (அகம் 219)
24. வேங்கை (அகம் 141)
25. வேலமரம் (அகம் 293)

# II. பாலைநில வாழ் பறவைகள்

பாலைநிலம் வெம்மையுற்று காணப்பட்ட போதிலும், அங்கு பல்வேறு பறவைகள் அங்குள்ள வெப்பத்தையும் பொருட்படுத்தாமல் வாழ்ந்தன.

1. ஆந்தை (அகம் 89)
2. எழால் (புல்லூறு) (அகம் 103)
3. கழுகு (அகம் 193)
4. காகம் (அகம் 319)
5. காடை (அகம் 387)
6. கோழிச் சேவல் (அகம் 367)
7. மயில் (அகம் 85)
8. புறா (அகம் 307)
9. பருந்து (அகம் 19)

# III. பாலைநில வாழ் விலங்குகள்

பாலைநிலம் மிகவும் வெம்மையுற்று காணப்பட்ட போதிலும், இங்கு பல்வேறு விலங்கினங்கள் அங்குள்ள வெப்பத்தையும் பொருட்படுத்தாமல் வாழ்ந்தன.

1. அணில் (அகநானூறு *109)*
2. ஆளி (அகம் *381)*
3. எருது (அகம் *265)*
4. கரடி கறையான் (அகம் *81)*
5. கழுதை (அகம் *343)*
6. காட்டுப்பூனை (அகம் *367)*
7. குரங்கு (அகம் *141)*
8. செந்நாய் (அகம் *285)*
9. நரி (அகம் *193)*
10. பசு (அகம் *131)*
11. பன்றி (அகம் *21)*
12. புலி (அகம் *45)*
13. மான் (அகம் *121)*
14. முள்ளம்பன்றி (அகம் *307)*
15. யானை (அகம் *307)*

# IV. பாலைநில மலர்கள் பூக்கும் காலம்

| இளவேனில் | | கோடை |
|---|---|---|
| 1. | அதிரல் | இருப்பை |
| 2. | காஞ்சி | இலவம் |
| 3. | குரவம் | பாலை |
| 4. | கோங்கம் | புன்கு |
| 5. | செண்பகம் | பூளை |
| 6. | செருத்தி | குருக்கு |
| 7. | ஞாழல் | முருங்கை |
| 8. | பாதிரி | வெள்ளோத்திரம் |
| 9. | புன்னை | |
| 10. | மரா | |
| 11. | மா | |

# V.

| | பண் | காலம் | நிலம் | உணர்வு |
|---|---|---|---|---|
| 1. | ஆம்பல் | மாலை, முன்னிரவு | முல்லை | ஏக்கம் |
| 2. | காஞ்சி | - | - | துன்பம் |
| 3. | காமரம் | - | மருதம் | இன்பம் |
| 4. | குறிஞ்சி | நள்ளிரவு | குறிஞ்சி | அச்சம் |
| 5. | செவ்வழி | மாலை | முல்லை நெய்தல் | இரக்கம் |
| 6. | நைவளம் | பகல் | - | இன்பம் |
| 7. | பஞ்சுரம் | - | பாலை | அச்சம் |
| 8. | படுமலை | - | - | இன்பம் |
| 9. | பாலை | நண்பகல் | பாலை | இன்பம் |
| 10. | மருதம் | காலை | மருதம் | இன்பம் |
| 11. | விளரி | - | நெய்தல் | இரக்கம் |

# VI. பாலைப் பாடல்களில் பிரிவுகள்

| நூல்கள் | உடன்போக்கு | பொருள் பிரிவு | போர் பிரிவு | கல்விப் பிரிவு |
|---|---|---|---|---|
| அகநானூறு | 7, 15, 17, 35, 49, 63,65, 89, 99, 105, 117, 145, 153, 165, 189, 195, 203, 207, 215, 219, 221, 257, 261, 263, 275, 321, 369, 383, 385, 397, | 1, 5, 21, 23, 27, 31, 33, 51, 53, 69, 75, 79, 81, 91, 115, 123, 149, 151, 155, 161, 171, 187, 189, 191, 217, 229, 233, 235, 237, 239, 247, 265, 271, 291, 305, 313, 319, 333, 335, 351, 361, 379, 389 | 33 | 125 |
| நற்றிணை | 2,9, 29, 46, 76, 110, 129, 184, 196, 271, 279, 293, 10, 121, 262, 305, 324, 362 | 16, 24, 44, 52, 71, 113, 126, 186, 193, 205, 214, 241, 226, 243, 246, 252, 291, 333, 337 | - | - |
| குறுந்தொகை | 15, 44, 84, 144, 149, 356, 378, 396, 383 | 20, 59, 63, 135,174, 180, 254, 255, 283, 331, 350 | 254 | 216 |
| ஐங்குறுநூறு | 371-380, 381-390, 391-400 | 309, 317, 336, 337, 355, 357, 359 | - | - |
| பாலைக்கலி | - | 11,13,15,16,17,20,21, 23,25,28 | 25 | - |

# VII. பிரிவு



ஓதல்
பகை
தூது
காவல்
பொருள்
பரத்தை
வேதக் கல்வி
வேதம் அல் கல்வி
பகைதணிவினைப் பிரிவு
போக்கு உற்றுழிப் பிரிவு
அறங்காவல்
நாடுகாவல்
கலத்திற் பிரிவு
காலிற் பிரிவு
படைக்கலம் பயிறல்
நூல் பயிலல்
பகடாதி ஊர்தல்


VII

# VIII

1. ஓதற் பிரிவு - தலைவி கார்ப்பருவம் கண்டு வருந்துதல்
2. காவற்பிரிவு - கூதிர் பருவம் கண்டு வருந்துதல்
3. தூதிற் பிரிவு - முன்பனிப்பருவம் கண்டு வருந்துதல்
4. துணைவயிற்பிரிவு - பின் பனிப்பருவம் கண்டு வருந்துதல்
5. பொருள்வயிற்பிரிவு- இளவேனில் பருவம் கண்டு வருந்துதல்

இப்பட்டியல் நம்பியகப் பொருள் மூலத்திலும் அதற்குரிய பழைய உரைகளிலும் கூறப்பட்டுள்ள துறைகளைத் தருவதாகும்.

# IX. மகட்போக்கிய நற்றாய் கூற்றுகளுக்கும் செவிலி கூற்றுகளுக்கும் இடையே உள்ள வேறுபாடுகள் (பாலைத்திணை)

| | நற்றாய்கூற்று | செவிலிகூற்று |
|---|---|---|
| 1. | தலைவியின் விளையாட்டார்வம் பற்றி மிகுதியாகக் குறிப்பிடுதல் | தலைவியின் மெல்லியல்புகள் பற்றி விரிவாகக் குறிப்பிடுதல் |
| 2. | தலைவியை மிக்கிளம் பருவத்தினள் என்று கருதும் போக்கு மிகுதி | தலைவியை மிக்கிளம் பருவத்தினளாகக் கருதும் நிலை இல்லை |
| 3. | தலைவி பெதும்பைப் பருவ மெய்தியமை கண்டு காவல் காத்த நிலை இல்லை. | தலைவி பெதும்பைப் பருவம் எய்தியமை அறிந்த செவிலி அவளை இல்லின் புறத்தே விடுவதில்லை. |
| 4. | அலர் வழித்தலைவியின் களவொழுக்கத்தை அறிந்த பின் அதுபற்றித் தலைவியிடம் நேரடியாகக் கேட்காமல் குறிப்பாகக் கேட்டல் | அலர் வழி தலைவியின் களவொழுக்கத்தை அறிந்த பின் அதுபற்றித் தலைவியிடம் கேட்காது மறைத்தல் |
| 5. | தலைவியின் களவொழுக்கம் தெரிய வந்திருந்தால் விரும்பியவனுக்கே அவளை மணம் முடித்து வைத்திருப்பேன் என்று உரிமையுடன் கூறல் | தலைவியின் களவொழுக்கம் தெரிய வந்தால் காவலை அதிகப்படுத்தி உடன்போக்கை தவிர்க்கலாம் என்று கடமை உணர்வுடன் கூறல் |
| 6. | தலைவியின் உடன் போக்கிற்குக் காரணமாவது என்று கூறித் தீவினையைச் சாடுதல் | தலைவியின் உடன்போக்கிற்கு தானும் ஒரு காரணமாகி விட்டோமோ என்று தன்னைச் சாடுதல் |
| 7. | தலைவனின் தாயைச் சாடும் போக்கு இடம் பெறுதல் | தலைவனின் தாயைச் சாடியதாகக் குறிப்பு இல்லை. |
| 8. | உடன்போக்கு மேற்கொள்வதை அறநெறி என்று தெளிந்து தலைவி சென்றதாகக் கூறல் | தலைவியின் செயலை இவ்வாறு குறிக்கும் நிலை இல்லை. |
| 9. | மகட்பிரிவைத் தாங்காது தன் உயிர் போக வேண்டும் என விழைதல் | மகட்பிரிவு மிகுந்த வேதனை தந்தாலும் தன் உயிர் போக வேண்டும் என்று எண்ணும் நிலை இல்லை. |
| 10. | உள்ள விழைவுகள் பெரும் பான்மையும் தன் விருப்பங்கள் அடிப்படையில் அமைதல். | உள்ள விழைவுகள் பெரும்பான்மையும் தலைவியின் நலன் கருதியதாக அமைதல். |

# X

நம் நாட்டில் மக்கட்தொகை பெருகிக் கொண்டே போகிறது. இவ்வாறு பெருகிக் கொண்டே போனால், மக்களின் நல்வாழ்வுக்கு அது இடையூறாக அமைவதோடு, நாட்டு - நலனுக்கும் ஏற்றதன்றாகும். இது பற்றியே மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த ஆள்வோர் முயன்று வருகின்றனர். அதன் பொருட்டுத் தோற்றுவிக்கப்பட்டதே **குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம்.**

பலபிள்ளைப்பேறு ஒரு குடும்ப நலனுக்கு ஏற்றதன்றாகும். ஓரிரு மக்கட்பேற்றையுடைய குடும்பமே, நல்வாழ்வு வாழும் நற்குடும்பமாகும். பழந்தமிழ் மக்கள் இதனை நன்குணர்ந்து, அவ்வாறே நடந்து வந்தனர் என்பது, இந்நூலில் உள்ள, 'பூப்பின் புறப்பாடு' என்னும் கற்பியல் 46வது சூத்திரத்தால் பெறப்படுகிறது.

அச்சூத்திரத்தில், **கருத்தரிக்குங் காலம், கருத்தரியாக் காலம்** என்பன. குடும்பக்கட்டுப்பாட்டு முறையேயாகும். அச்சூத்திரத்தில், 'புறப்பாடு' என்பதன் பொருள் - உட்கருத்து நன்கு விளங்காமையால், கருத்தரிக்கும், தரியாக் காலவரையறை நன்கு விளங்கவில்லை. பழைய உரையாசிரியர்களின் விளக்கமும் சரியாக அமையவில்லை.

இதபற்றி அறிவியில் முறைப்படி, இன்றைய மருத்துவ அறிஞர்கள் ஆய்ந்து கண்ட முறை கீழ்வருமாறு:

முதற்பூப்பு நிகழ்ந்த 30 ஆம் நாள் அடுத்த பூப்பு நிகழின் பூப்பு நிகழ்ந்த 4 ஆம் நாளிலிருந்து 11 ஆம் நாள் வரையுள்ள 8 நாளும் கருத்தரியா நாட்களாகும். 12 ஆம் நாள் ஐயப்பாடான நாளாகும். 13 முதல் 18 முடியவுள்ள 6 நாட்களும் கருத்தரிக்கும் நாட்களாகும். 19 ஆம் நாள் ஐயப்பாடான நாளாகும். 20 முதல் 30 முடியவுள்ள 11 நாட்களும் கருத்தரியா நாட்களாகும்.

அதாவது, பூப்பு நிகழும் முதல் மூன்று நாளும் (1-3) கருப்பை தூயதாக்கப்படுகிறது. 4-11 ஆகிய எட்டு நாளும் சினை அல்லது முட்டை கருப்பையுள் வர ஆகும் நாட்களாகும். 12 சினை கருப்பையில் பொருந்துகின்ற நாளாகும். இந்நாளில் கூடினால் கருத்தரிக்கும் தரிக்காது என்பது உறுதியில்லை. 13-18 ஆகிய ஆறு நாளும் சினையோடு ஆணின் உயிரணு கலக்கும் நாட்களாகும். 19 கருப்பையில் பொருந்தியுள்ள இடத்திலிருந்து சினை விடுபடும் நாளாகும். இன்றும் கருத்தரிக்கும் தரிக்காது என்பது உறுதியில்லை. 20-30 ஆகிய பதினொரு நாளும் சினை வலியற்று நழுவி வெளிப்பட மூன்று நாட்களாகும். இந்நாட்களில் உயிரணு சினையைக் கூடப் பெறாது.

இவ்வாறே, முதற்பூப்பு நிகழ்ந்த 28 ஆவது நாள் பூப்பு நிகழின், 4-9 ஆகிய 6 நாளும் கருத்தரியாது. 10 ஐயப்பாடு, 11-17 ஆகிய 7 நாளும் கருத்தரிக்கும் 18 ஐயப்பாடு, 19-28 ஆகிய 10 நாளும் கருத்தரியாது.

26 ஆவத நாள் பூப்பு நிகழின், 4-7 ஆகிய 4 நாளும் கருத்தரியாது. 8 ஐயப்பாடு, 9-15 ஆகிய 7 நாளும் கருத்தரிக்கும். 14 ஐயப்பாடு, 15-24 ஆகிய 10 நாளும் கருத்தரியாது.

**குறிப்பு:** குடும்பக்கட்டுப்பாட்டை விரும்புவோர், இருபூப்புக்கும் இடைப்பட்ட கருத்தரியா இரு பகுதி நாட்களிலும் கூடுதல் வேண்டும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 30 | (1) | 4-11-8 | 26 | (1) | 4-7-4 |
| | (2) | 12 | | (2) | 8 |
| | (3) | 13-8-6 | | (3) | 9-15-7 |
| | (4) | 19 | | (4) | 16 |
| | (5) | 20-30-11 | | (5) | 17-26-10 |
| 28 | (1) | 4-9-6 | 24 | (1) | 4-5-2 |
| | (2) | 10 | | (2) | 6 |
| | (3) | 11-17-1 | | (3) | 7-13-7 |
| | (4) | 18 | | (4) | 14 |
| | (5) | 19-28-10 | | (5) | 15-24-10 |

குறிப்பு: 1,5-கருத்தரியா, 2,4-ஐயம், 3-கருத்தரிக்கும்.

# இலக்கிய காலத்து எழில்மிகு தங்க அணிகலன்கள்



# சங்க இலக்கியங்களில் பிரிவாற்றாமை

சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி.)பட்டத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு


ஆய்வாளர்

**க. மங்கையர்க்கரசி**
பதிவு எண். 41/FT/08/2011/6192

நெறியாளர்

**முனைவர் ஜே.ஆர்.இலட்சுமி**






**தமிழ்த்துறை**
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
**சென்னை - 600 005.**


**ஜூன் - 2013**

# முடிவுரை

முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் மழையின்மையால் திரிந்து, தத்தமது நிலையை இழந்து பாலையாக மாறும் என்று சிலப்பதிகாரத்திலும், சிறுபாணாற்றுப்படையிலும், நம்மாழ்வார்ப் பாடல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

'செம்புலம்' என்பது பாலை நிலத்தையே குறிக்கும், பாலை நிலத்தின் வெம்மையை பெரும்பாலான பாடல்கள், விலங்குகளைச் சுட்டியும், பறவைகளைச் சுட்டிக்காட்டியும், இயற்கைச் சீரழிவைச் சுட்டிக்காட்டியுமே விளக்கியுள்ளன. வெம்மையால் உருவானது மட்டுமே பாலை நிலமாகக் கருதப்படவில்லை. ஒன்றுக்கும் உதவாத களர் நிலங்களும், பிணங்களை எரிக்கும் இடம், போரால் பாழ்பட்ட நிலம், பகைவர்களால் தீயிட்டுக் கொளுத்தப்பட்ட இடமும் 'பாலை' என்றே பெயர் பெறும்.

கோல் கோடிய மன்னனின் செங்கோலாட்சிக்கு பாலை நிலமே உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

பாலை நிலத்தில் வாழ்ந்த ஆறலைக்கள்வர்கள், தம் தொழிலாகிய வேட்டையாடுதலையே மேற்கொண்டனர். மழையின்றி வறுமையானதால் தான் 'ஆறலைத்தல்தொழிலை' மேற்கொண்டனர். மக்களின் வாழ்வியல் உண்மைகளும் பாலைத்திணையிலேயே அதிகமாக பாடப்பட்டுள்ளன.

காதல் வாழ்க்கை உடையவர்க்கு கடமையும் உண்டு, கடமை ஆற்றுவதற்காக தலைவன் தலைவியைவிட்டுப் பிரிவும் நிகழ்த்துவான்.

ஓதற்பிரிவு, பகைப்பிரிவு, தூதுப்பிரிவு, காவற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு, பரத்தையர் பிரிவு என்று பிரிவின் வகைகள் ஆறு என்பதை, தொல்காப்பியம், இறையனார்அகப்பொருள்,

நம்பியகபொருள், மாறனகப்பொருள் ஆகிய நூல்களும் குறிப்பிடுகிறது. தலைவன் களவு, கற்பு இரு வகைக் காலத்தும் பிரிவு நிகழ்த்துவான்.

தலைவன் தலைவியை தன்னுடன் உடன்கொண்டு செல்லுதலும் உண்டு. உடன்போக்கும், ஒரு வகையான திருமணமேயாகும். உடன்போக்கை பாலைத்திணையில் வைத்ததும் பொருத்தமேயாகும்.

பிரிவுக்காலத் துன்பங்களைக் குறிப்பிடும்போது தலைவனைப் பிரிந்த தலைவியின், துன்பமே மிகுதியாகக் காட்டப்படுகிறது. ‘வினையே ஆடவர்க்கு உயிரே’ என்பதால், வினை முடிப்பதிலேயே கண்ணாக இருப்பதால், பிரிவுத் துன்பம் தலைவனை வெகுவாக பாதிப்பதில்லை.

தலைவியின் துன்பம் உடல்மொழியால் வெளிப்படுகிறது. உள்ளத்தின் கழிபடர்கலக்கம், புதுக்கவின் இழத்தல், கால் விரலால் நகத்தைக் கீறல், கால் நிலையாமை, நாநடுக்கம், நவிலாக்கிளவி, பசலை, மேனி நலம் தொலைதல், மெலிதல், உறக்கமின்மை, வெப்பப்பெருமூச்சு என்பதாகும். தோழியுடனும், சில நேரங்களில் நெஞ்சுடனும் புலம்புவாள்.

இங்ஙனம் பிரிவால் வருந்திய தலைவிக்கு, கார்காலமும், கூதிர்காலமும், மாலைப்பொழுதும், வாடைக் காற்றும், புள்ளின் ஓசையும், மலரின் மலர்ச்சியும், மணியின் ஓசையும், கடலின் குரலும், கோவலர் ஊதும் குழலின் ஓசையும் பிரிவுத்துன்பத்தை அதிகப்படுத்தும்.

இவற்றையெல்லாம் கண்ட தலைவனுக்கும் பிரிவுத் துன்பத்தை அதிகப்படுத்தும். தலைவனுக்கும் தலைவியினால் பிரிவினால் வருத்தம் இருப்பினும் வினையில் ஈடுபடுவதாலும், தோழி போன்று நெருக்கமானவர்கள் இல்லாததாலும், மற்றவர்களிடம் கூறுவதை ஆண்மைக்குறைவாக நினைப்பதாலும் தலைவியின் பிரிவைத் தன் நெஞ்சிடமே கூறுகிறான்.

தலைவியின் பிரிவுத்துன்பத்திற்கு ஈடாகவே தலைவனின் பிரிவுத் துன்பமும் உள்ளது என்பதை அறியமுடிகிறது.

கற்பு காலப் பிரிவை விட, களவு காலப் பிரிவிலேயே தலைவி பிரிவாற்றாமையால் மிகவும் துன்பப்படுகிறாள்.

திணைவேறுபாடு, செல்வநிலை வேறுபாடு, வயது வேறுபாடு தாமே (தலைவி) விரும்பிய வாழ்க்கையில் எதிர்பார்த்த அளவுக்கு இன்பம் கிடைக்காமல், தலைவனால் ஏமாற்றமடைவாளோ என்ற பல காரணங்களால் தலைவியின் அன்னை, தமர் வரைவிற்கு உடன் படாமல் இருந்தனர்.

அறத்தொடு நின்றபின், தாய் தந்தையர் விருப்புடன் திருமணம் நடந்த போது கூட, தலைவனிடம் யாரும் தலைவியை நல்லபடியாக பேண வேண்டும் என்று அறிவுரை கூறியதற்குச் சான்றுகள் இல்லை. உடன்போக்காகத் தலைவியைத் தலைவனுடன் அனுப்பும் தோழியே அறிவுரை கூறுகிறாள். தலைவிக்கு இறுதிவரை தலைவனே துணை என்பதையே உடன்போக்குப் பாடல்கள் உணர்த்துகின்றன.

தலைவி உடன்போக்கு சென்றுவிட்டாள் என்பதை அறிந்து, அன்னை, பிரிவின் போது சுரவழியில் தலைவன் இறந்துபட அவலச்சுவை கொண்டு முதுபாலையாகிவிடக்கூடாது என்றும் வருந்துகிறாள்.

முதலில் உடன்போக்கை நினைந்து அதிர்ச்சியாகி, பின் தலைவனைச் சாடி, அவனை ஈன்ற தாயைச் சாடினாள் வழியிடை துன்பத்தை நினைத்து வருந்தி வயலைக்கொடியிடம் புலம்பினாள், கண்டோர், அந்தணர்கள் கூறியபடி ‘உடன்போக்கு அறநெறியே’ என்று தெளிந்தாள். தலைமக்கள் திரும்பி வர விரும்பி, வேலனிடம் குறிகேட்டாள். விருந்தினர் வர காக்கையை கரையுமாறு வேண்டினாள். சிலம்புகழிநோன்பு தான், தன் வீட்டில் நடைபெறாமல், தலைவன் வீட்டில் நடைபெற்றது, திருமணமாவது தன் வீட்டில் நடைபெற விரும்பினாள். தலைமக்கள் திரும்பி தன் இல்லம் வந்ததை, சுற்றத்தினரை அழைத்துக் கூறி மகிழ்ந்தாள். சமூகமும் தலைமக்களை ஏற்றுக்கொள்ள வேண்டும், என்பதை தாய் விரும்பினாள் என்பது பெறப்படுகிறது.

கண்டோர் உடன்போக்கிற்கு உதவி செய்தோராவர் இதனால் பழந்தமிழ் மக்கள்பால் களவொழுக்கம் பெற்றிருந்த மதிப்பின் அளவும் பெறப்படுகிறது.

சங்க இலக்கியங்களில், தலைவனும் தலைவியும் உடன்போக்கு மேற்கொள்வது, அன்பின் ஐந்திணையேயாகும். தலைவியின் கற்பினைக் காக்கும் முயற்சியாக மேற்கொள்ளப்படுவது ஆகும். ''சிறந்தானை வழிபடச் சென்றனள்'' என்று கலித்தொகை கூறுகிறது.

தலைவியின் தாயாரால் தலைவன் பழிக்கப்படுகிறான் என்பதையும், தலைவி பெரும்பாலும் செல்வச்செழிப்பில் பிறந்தவள் என்பது சங்க இலக்கியத்தின் மூலம் தெரிய வருகிறது.

உடன்போக்கு என்பது (அலர் தூற்றும் பெண்டிரால்) பிறரால் வெறுக்கத்தக்கதாக இருந்ததை அறியமுடிகிறது. ஏனெனில் தாயொருத்தி தன் மகள் தலைவனோடு சென்று விட்டதை அறிந்தோர் கூறுவரே என்று வருத்தப்படுவதைக் காணமுடிகிறது. பிறர் பழி பேசுவர் என்று அஞ்சிய தாயின் நிலை, மானத்தைப் பெரிதென மதித்ததை அறியமுடிகிறது.

மகளிர் காக்கப்பட்டமைக்கு, அவர்களின் பருவமே காரணமாகும் களவு என்பது உலகியற்கை என்றும், மணவினை என்பது ஊழால் அமைவது என்றும், அக்கால மக்கள் கருதினும், மகளிர் தாமே விரும்பி மேற்கொண்ட மணம் எதிர்பார்த்த மகிழ்ச்சியை தராமல், துன்பத்துக்கு ஆளாகிவிடின் என் செய்வது என்ற கவலையே பெற்றோர்க்கு இருந்தது.

சங்க இலக்கியங்களில் பெண்ணுக்கு உரிமையில்லை என்பதும், அவள் கணவனுக்குக் கட்டுப்பட்டவள் தான் என்பதும் கணவன் பரத்தையினாற்பிரிந்து சென்று தலைவியைக் கொடுமைப்படுத்தினாலும் அவனுடனேயே கூடி இருந்துதான், அவள் வாழவேண்டும் இப்படி வாழ்பவளே, 'சிறந்த அன்பான மனைவி' என்ற கொள்கையே இருந்தது.

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் மனம் நொந்த தலைவி ஆற்றாமையாலும், மனவேறுபாட்டாலும், வாயில்கள் இடத்தில் புலம்பினாலும், பாணனிடம் பரத்தையைச் சாடி பேசியமையாலும் தன் மன உணர்வுகளை ஓரளவுக்கு வெளிப்படுத்தினாள்.

தலைவிக்கு மகப்பேறு பிறந்த உடனே வராத தலைவனைக் கோபிக்காமல், தனது கோபத்தை பரத்தை மீது செலுத்துகிறாள்.

'வாயில் மறுத்தல்' மூலம் பரத்தமை தவறு என்பதும் 'வாயில் நேர்தல்' மூலம் அத்தவறு மீண்டும் நேராமல் திருத்திக் கொள்ளப்பட வேண்டும் என்றும் உணர்த்தப்பட்டது.

ஆண்கள் சென்று இன்பம் துய்க்கும் நிலையில் பரத்தையர்கள், தலைவனின் பொருட்களை எல்லாம் கவர்ந்தாள் என்றோ, அது பற்றி தலைவி பிணங்கினாள் என்றோ, அதனால் தலைவன் வறுமையுற்றான் என்றோ சங்க இலக்கிய மருதப் பாடல்கள் அமையவில்லை.

தலைவனின் மகன் வீதியில் வரும்போது கண்ட பரத்தை தனது மோதிரம் நகைகளை சிறுவனுக்கு அளித்தாள் என்பதிலிருந்து, பரத்தையர் பொருள் நாட்டம் உடையவர் அல்லர் என்பது பெறப்படுகிறது.

பரத்தையை வழிப்பட்ட பின்பு தலைவன் தன் வீட்டினுள் புக அஞ்சுகிறான். புகும் உரிமையை இழக்கிறான், கேட்டுப் புக வேண்டிய நிலைக்குத் தாழ்கிறான்.

தலைவன் தான் விரும்பிய பெண்ணை மணப்பதற்கு இடையூறு பல இருப்பினும், எப்படியேனும், அவளின் தந்தைக்கு குற்றேவல் புரிந்தேனும் பெற முனைந்தவன், தலைவியை தனக்குத் தர மறுத்தால் அறங்கூறும் அவையத்தில் முறையிட்டேனும் தலைவியைப் பெறுவேன் என்று கூறிய தலைவன், திருமணம் முடித்து பின் சிறிது காலம் கழித்துப் பரத்தையை நாடிச் செல்கிறான்.

பின் மீண்டு வந்த போது, தலைவி ஊடல் கொண்டதால், தலைவியின் காலில் விழுந்து, தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறான். இதைக் கண்ட தலைவி தன்னுடைய கோபத்தை எல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு, அவனை ஏற்றுக்கொண்டு, ''சிறுவர் அறியாது செய்த இழிசெயல் போன்றது, உன்னுடைய செயல் உன் செயல் நகைப்பிற்குரியது இதற்காக வருந்தாதே'' என்று கூறி தழுவிக் கொண்டாள்.

இதை எல்லாம் எண்ணும் போது தலைவன் தலைவியின் மீது அளவு கடந்த விருப்பம் கொண்டிருந்தான் என்பதை விட, தான் நினைத்ததை சாதிக்க எதையும் செய்வான் என்பதே பெறப்படுகிறது.

தலைவன் பரத்தை ஒழுக்கம் புரிய, தலைவி ஊடுவாள். அவ்வூடலை வாயில்கள் தீர்ப்பர் ஊடல் கொள்வதால் ஏதும் பயனில்லை அவ்வாறு ஊடல் கொண்ட பெண்களின் மனநிலை பாதிக்கப்படுவதுடன், சமைக்க அரிசி இன்றியும், குழந்தைக்கு பால் இன்றியும், சுற்றத்தார் யாரும் இன்றியும் தனித்து நின்று, வருத்தப்படுவதைக் கண்டும், நீ தலைவனிடம் ஊடாதே என்று தோழி கூறினாள். தோழி, தலைவனிடம் முன்பு வேப்பங்காயை தலைவி தந்தாலும், 'வெல்லக்கட்டி' என்று கூறியவன் இப்போது குளிர்ந்த நீரைத் தந்தாலும், அது வெப்பமுடன் உப்புச் சுவையுடையாக உள்ளது என்று கூறியதைக் கண்டித்தாள்.

ஒருவருடைய கருத்தை மற்றொருவரிடம் சரியாகக் கொண்டு சேர்ப்பது, 'வாயில்' அவ்வாயிலாக செவிலி செயல்பட்டாள்.

பாணன் தலைவன் வினைமேற் சென்று, குறித்த பருவம் வராமல் காலம் தாழ்த்தினான், இதனால் தலைவி மிகவும் வருந்தினாள். தலைவியின் நிலையைக் கண்ட பாணன், தலைவனிடம் சென்று கூறினான். தலைவன் கூறிய செய்தியை, தலைவியிடம் வந்து கூறினான். தலைவன் தங்கியதைக் கண்ட தலைவி, வருந்தி அழுத போது, தலைவனிடம் சென்ற பாணன், ''நின் மனைவியின் கண்ணீர் பற்றி நீ கவலைப்படாததால் யான் நினக்கு பாணரும் அல்லேம் நீ எனக்கு குரிசிலை இல்லை'' என்று கூறினான்.

பாணன், தலைவன் தலைவிக்கு மட்டும் ஊடல் தீர்க்கவில்லை. காமக்கிழத்திக்கும், பரத்தைக்கும் ஊடல் தீர்க்கும் வாயிலாக செயல்பட்டான்.

புதல்வன், விருந்தினர், காமக்கிழத்தியும் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே உள்ள ஊடலைத் தணிக்கும் வாயிலாகச் செயல்பட்டனர்.

தலைவனைப் பிரிந்த தலைவியே மிகவும் வாடும் போது, தலைவனை இழந்த தலைவி பிரிவாற்றாமையால் மிகவும் துன்பப்பட்டாள். கணவன் இறந்தவுடன் உயிர்விடுதல், கணவன் இறந்தபின் உடன் கட்டை ஏறி உயிர்விடுதல் என்ற முதல் இடைகற்பையே பெரிதும் விரும்பினர்.

கடைகற்பாகிய கைம்மைநோன்பு நோற்று வாழும் நிலையை பெரிதும் விரும்புவதில்லை கணவனுடன் உயிர்நீத்தலுக்கு, கைம்மைத்துன்பம், மிகுதியானஅன்பு, மானஉணர்வு, மேலுலகக்கோட்பாடு, தீயின்தூயத்தன்மை போன்றவையே காரணங்களாகின்றன. கைம்மை நோன்பின் கடுமையான கூந்தல் களைதல், அணிகலன்கள் களைதல், தரையில் பாயின்றி உறங்குதல், உணவில் கட்டுப்பாடு, குளிர்ந்த நீரில் மூழ்குதல் போன்றவைகள் கடுமையாக இருந்ததால் கைம்மை நோன்பு இருத்தலை விட, உடன்கட்டைஏறி உயிர்விடத் துணிந்தனர். கைம்மை நோன்பு மேற்கொண்டு வாழ்ந்தால், மறு பிறவியிலாவது கணவனுடன் சேர்ந்து வாழலாம் என்ற கருத்தே வலியுறுத்தப்பட்டது.

கணவனைப் பிரிந்த பெண்கள் தம்மை அலங்கரித்துக் கொள்ளவில்லை என்ற போது, கணவனை இழந்த பெண்கள் அனைத்தையும் துறந்த நிலையே காணப்படுகிறது.

கணவனை இழந்த மகளிர் 'உயவற்பெண்டிர், கழிகலமகளிர்' என்று அழைக்கப்பட்டனர். கணவனை இழந்த மகளிர் நூற்புத் தொழிலில் ஈடுபட்டனர். இவர்களை 'பருத்திப்பெண்டிர்' என்று அழைத்தனர்.

அஃறிணை உயிர்கள் கூட, கைம்மை நிலையை ஏற்க விரும்பாமல் உடனே இறந்து விடுதலையே விரும்புகிறது என்பது பெறப்படுகிறது.

கணவனுடன் வாழும் பெண்கள் பலவகையான அணிகலன்கள், ஒப்பனை அலங்காரம், பஞ்சணைப்படுக்கை, சுவையான உணவு என பலவகைகளிலும் இன்பமாகவே வாழ்ந்தனர் என்பதும், கணவன் இறந்தபின் அவை அனைத்தையும் இழந்து, தன்னைத் தானே வருத்திக்கொண்டு வாழ்வதே கற்பின் அடையாளமாக வலியுறுத்தப்பட்டது.

இறந்தோரை, எண்ணிப் புலம்பிப் பாடும் பாடல்களே கையறுநிலைப்பாடல்கள் எனப்படும். கையறுநிலைப்பாடல்கள் பெரும்பாலும் மன்னனின் வீரம், வெற்றிச்சிறப்பு, கொடை, புகழ் ஆகியவற்றைப் புகழ்ந்தும் அவன் இறந்தபோது, இது குறித்து வருந்தி கையற்றுப் பாடுவர். தலைவன் இறந்த போது தானும் இறந்து விடுவதே நல்லது என்று வருந்தி மொழிவர்.

வீரத்தாயின் நிலைப்பாடு, தந்தையின் பிரிவுத்துயரம், முதுமைத் துன்பம் இவற்றைப் பாடுவதும் கையறுநிலையேயாகும். புறப்புண்பட்டதை நாணி வடக்கிருந்து உயிர்த்துறத்தலையும் பாடுவர்.

ஒவ்வொரு இயலிலும் கருத்துக்கள், நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து நிகழ்வன போல் கோர்வையாக அமைக்கப்பட்டுள்ளது.

தலைவனை இழந்த தலைவியின் பிரிவாற்றாமையை, அவள் படும் துயரத்தைக் கூறும் பொழுது, தலைவி தலைவனுடன் வாழும் போது, பலவகைகளிலும் இன்பமாகவே வாழ்ந்தனர் என்பதும், கணவர் இறந்தபின் அவை அனைத்தையும் இழந்து, தன்னைத்தானே வருத்திக்

கொண்டு வாழ்வது என்ற இருநிலைகளும் அடுத்தடுத்து அமைக்கப்பட்டுள்ளது.

தலைவனும், தலைவியும் அன்புடன் கூடி இன்புற்றிருந்த காலத்தை விடவும், பிரிவு காலத்தில் தான் ஒருவரை ஒருவர் இன்றியமையாதவர் என்ற உண்மையை உணர்ந்து வெளிப்படுத்துகின்றனர் என்பதை உணர்த்தும் கருதுகோளே ஆய்வின் முடிவாகவும் அமைகிறது.